# அந்திக்கால மோகம்

## 1

பெட்டிக்குள் சாமான்களை அடுக்கிக் கொண்டிருந் தான் பரத்.

அவன் உட்கார்ந்திருந்த விதம், எழுந்து நின்று முன்நெற்றியில் புரண்டு விழுந்த முடியை இடது கையால் ஒதுக்கிக் கொண்ட செய்கை, அவன் நடை, ஆழ்ந்த சிந்தனை அப்போது முகத்தில் ஏற்படும் பாவம், எல்லாம் அப்படியே அரவிந்தனைப் போல அமைந்திருந்தது. அவளுக்கு ஒரே வியப்பு.

இருபது வயதடைந்து விட்டிருந்த அவன் அப்பாவைத் தோற்றத்தில் உரித்து எடுத்துக் கொண்டு வந்திருந்தான்.

அது இயற்கையின் இயல்பு. ஆனால் நினைவு தெரிந்த நாளிலிருந்து தந்தையின் முகத்தைக்கூடப் பார்க்கவோ, பேசவோ, பழகவோ சந்தர்ப்பமில்லாது பிரிந்துவிட்ட குழந்தை அவன்.

எப்படி அந்தப் பழக்க வழக்கங்கள் அவனுக்கு ஏற்பட்டன?

''சில குண விசேஷங்கள் பாரம்பரியமாக வரக் கூடியவை என்கிறார்களே... அதன் காரணமாக இருக்குமோ...'' எண்ணியபடி மகனை நிமிர்ந்து பார்த்தாள் துர்க்கா.

நெஞ்சில் ஒரு பெரும் பாறாங்கல் அழுத்துவது போல துன்பம் சுமையாக இறுக்கியது.

அரவிந்தனின் மனைவியாக இணைந்து வாழ்ந்த காலத்திலாவது அவள் தினமும் ஒரு சிலமணி நேரம் தன் வகுப்புகளை ஆசிரியை என்ற தகுதியில் நடத்திக் கொண்டிருக்கும்போது அவனை மறந்துவிடுவதுண்டு.

போதிக்கும் பாடங்களில் மனம் லயித்துப் போய் வீடு, தன் உறவினர் - ஏன் தன்னையேகூட அவள் மறந்து விடும் இயல்புடையவள்.

ஆனால் அந்தப் பிரிவு ஏற்பட்ட பின்னர் நிரந்தர மாகப் பிரிந்துவிட்டார்கள் என்ற உண்மையை உணர்ந்த பின்னர் ஒவ்வொரு நிமிஷமும் அவள் உள்ளத்தில் அரவிந்தன் நினைவு அவளை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்தது.

இப்போது அவளது தாய் ஞானம் உயிருடன் இருந்தாள். அவளுடன் கூட வசித்துக் கொண்டிருந்தாள்.

''என்ன தட்டில் போட்டு வச்ச சோத்தை அப்படி வெறிச்சுட்டு உட்கார்ந்திருக்கே? அந்தக் கேடு கெட்டவன் நினைப்பு வந்திருச்சா? என்னத்துக்கு அழுகிறே? அவன் செத்தா போயிட்டான்? குண்டுக் கல்லாட்டமா உன் குடியைக் கெடுத்தவளைக் கட்டிக்கொண்டு சுகமா அமெரிக்காவிலே வாழப் போயிட்டான். உண்மையில் அவன் செத்துட்டான்னு நாம் கேள்விப்பட்டால்கூட நீ அழத் தேவையில்லை. அவனுக்குத்தான் ஏற்கெனவே



முழுக்குப் போட்டாச்சே. அதனால் மறுபடி அவன் சாவுக்காக ஒரு தடவை ஸ்நானம்கூடச் செய்யத் தேவை யில்லை?''

அம்மாவின் நாக்கு கத்தியாகச் சுரீர் என்று அவள் நெஞ்சைக் குத்துவது வழக்கம். அவள் அம்மாவிடம் எதிர்த்துப் பேசியதில்லை. அப்படிப் பேசாது போனது தவறோ? அதைப்பற்றி இவ்வளவு காலத்திற்குப்பின் நினைத்து என்ன பயன்?

அவளால் அவனை மறக்கவே முடியவில்லை. குழந்தை பரத் இருவருக்குமிடையே பாலமாக உயிருடன் இருக்கும்போது அரவிந்தனை தன் மாஜி கணவனை 'யாரோ' என்று மனதால்கூட ஒதுக்க முடியவில்லையே. அவர்கள் தம்பதியராக வாழ்ந்த காலத்தில் கணவன் வாங்கித் தந்த பொருட்களையெல்லாம் பார்க்கும்போது அவன் நினைவு நெஞ்சை உறுத்தியது உண்மை.

அவன் கட்டிய தாலி, அவளது மார்பின்மீது புரண்ட போதெல்லாம் அவன் நினைவு கண்களை ஈரமாக்கின. எத்தனை இரவுகள் அவள் தன் படுக்கைமீது உறக்கமின்றி புரண்டு கொண்டே ஓசைப்படாது அழுத வண்ணம் படுத்திருக்கிறாள்!

அவள் தன் துயரத்தை வெளியே காட்ட அஞ்சி தன் மனத்திற்குள் புதைத்து வைத்துக் கொண்டு புழுங்கியபடி காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தது அவளைப் பெற்ற தாய் ஞானத்திற்கும் தெரியாது.

அவள் பெற்ற பிள்ளை பரத்துக்கும் தெரியாது.

அரவிந்தனை அவள் உயிருக்குயிராக நேசித்தாள். இரு பக்கத்து பெற்றோர்களும் சம்மதிக்காத நிலையில்

பிடிவாதமாக அவர்களிருவரும் காதலுக்கே மதிப்புக் கொடுத்து திருமணத்தில் ஒன்றாகிய தம்பதியர்.

அந்தக் காதல் திருமணம், கற்பாறைமீது மோதிய மண் பானையாக எப்படி சுக்குத்தூளாக சிதறிப் போய் விட்டது!

''பரத்! மூணு வருஷம் படிக்கணும்னு சொல்றே? நடுவே ஒரு தடவை ஊருக்கு வந்து போக முடியுமா?''

மகன் கோபத்தில் சிரித்தான்.

''இங்கிலாந்து நம்ப வீட்டுப் புழக்கடையில் இருக்கா அம்மா? அப்படிப் பல தடவை வந்து போக நம்பகிட்ட பணம் கொட்டி வச்சிருக்கா?''

''உபகாரச் சம்பளம் ஏதோ கிடைக்கப் போவுது, அதனால் படிக்கப்போறேன்னு சொன்னியே. வெளியூர் படிப்புக்குத் தேவையான அந்நிய செலாவணி உனக்கு எங்கிருந்து கிடைக்கும்? நானும் படிச்சவதானே இதெல்லாம் விவரமா எங்கிட்டச் சொல்லக் கூடாதா?''

''என்னை அனுப்பி வைக்கும் நர்ஸிங் ஹோமின் தலைவர் அந்தத் தலைவலியையெல்லாம் ஏத்துக்கிட்டிருக் கார். படிப்புச் செலவு, ஆஸ்டல்செலவு எல்லாத்துக்கும் ஏற்பாடு பண்ணிவிட்டுத்தான் அந்தப் பல்கலைக் கழகத்தில் இடத்திற்கும் ஏற்பாடு செய்துவிட்டு எனக்கு டிக்கட் எடுத்துக் கொடுத்தார். பாஸ்போர்ட் வாங்கித் தந்திருக்கிறார். எல்லாம் அவரது தருமம். நீங்க ஏன் இவைகளைப் பத்திக் கவலைப்படணும்?''

''அந்தப் புண்ணியவான் யார்னு சொன்னா அவருக்கு நன்றி தெரிவித்து ஒரு கடிதம் போடுவேன்.''



''வேண்டாம் அம்மா. உங்களுக்கு அந்தத் தொல்லையை நான் வைக்கலை. நானே அவருக்குக் கடிதம் போட்டு என் நன்றியைத் தெரிவித்துவிட்டிருக் கேன்.''

''நீ பிறக்கறதுக்கு முந்தியே என் அப்பா திடீர்னு மாரடைப்பில் போய்ட்டார். அம்மா கானடாவுக்குப்போய் என் அக்காகூடத் தங்கப் போனவங்க ரொம்ப நாள் இருக்கலை. இப்போ நீயும் கிளம்பிப் போயிட்டா நான் ஒண்டிக்கட்டையாத் தனியாக இருக்கவேண்டிவரும். அந்தத் தனிமையை நினைச்சா...'' பேசமுடியாது அவள் கண் கலங்கிப் போனாள்.

பரத் தன் தாயைத் திரும்பிப் பார்த்தான். அவன் பார்வையில் அனுதாபத்திற்குப் பதில் ஆத்திரம் தெரிந்தது.

''அம்மா நான் இன்னும் கொஞ்ச நேரத்தில் வெளி நாட்டுப் பயணத்திற்குக் கிளம்பிகிட்டிருக்கேன். காலை பதினொரு மணிக்கு இங்கிருந்து விமானத்தில் பயணப் பட்டுப் பம்பாயில் மீதி பகல் பொழுதும் இரவும் ஒரு நண்பன் வீட்டில் தங்கிட்டு நாளை விமானத்தில் லண்டனுக்குப் பறக்கப் போறேன். வெகு தொலைவுக்குப் பயணப்படும் எனக்கு நீங்க வேறு வகையில் உதவாட்டா லும் இந்தச் சமயம் அழுது என் மனதைக் கலவரப்படுத் தாது அனுப்பக் கூடாதா?''

''பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லும்பாங்க பரத். அது முற்றும் உண்மையப்பா.''

''என் தனிமையைவிட உங்க தனிமை கொடுமை யாக இருக்கப் போவதில்லை அம்மா. முன்பின் தெரியாத ஊரில் வேறு இனத்து மக்களோடு... அவங்க பழக்க வழக்கங்களைப் புரிஞ்சுகொண்டு சுமுகமாக நடந்து நல்ல

பேரெடுத்துத் கொண்டு நான் திரும்பணும். அங்கே போனதும் என்னை, முதலில் சட்டென்று தனிமைதான் கெட்டியாகப் பிடிச்சுக்கப் போவுது. இங்கே உங்களுக்கு அக்கம் பக்கம் பேச்சுத் துணைக்கு நம்ப மனிதர்கள் இருக்காங்க. தினமும் முக்கால்வாசிப் பொழுதைப் பள்ளிக்கூடத்து மாணவிகளுடன் கழிக்கப் போறீங்க. நல்லா யோசிச்சுப் பாருங்க.''

''நீ வெளியூரில் போய்ப் படிக்கத் திட்டமிட்டுவிட்ட சங்கதியைக் கேட்டதிலிருந்து... பரத்... நான் எப்படித் துடிக்கிறேன்னு உனக்குப் புரியாதப்பா. நான் என் வாழ் நாள் முழுதும் துன்பத்தைத்தான் கண்டவள். உன்னைப் படிக்க வச்சு ஆளாக்க... என்னைக் காத்துக் கொள்ள நான் ஓடாக உழைக்கிறேன். இன்னமும் உழைச்சுக்கிட்டிருக் கேன்'' - தழுதழுத்தாள் அவள்.

''அம்மா... நமக்குள் தர்க்கம் ஏன்? போய் நன்னாப் படிச்சுச் சுமுகமா திரும்பிவான்னு ஆசி வழங்குங்கள்'' - சொல்லியபடி அவன் தன் தாயின் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டான்.

குனிந்து அவன் தோள்மீது அவள் தன் கைகளை வைத்தாள். கண்ணீர் கன்னங்களில் தாரை தாரையாக ஓடியது. சட்டென்று நிமிர்ந்து எழுந்த மகனை அவள் இறுக்கக் கட்டிக் கொண்டாள். ''பரத்! உன்னைப் பார்க்காம மூணு வருசத்தை நான் எப்படி ஓட்டப் போறேன்? நீ பரீட்சை சமயங்களில் ஆஸ்டலில் போய் தங்கிக் கொள்வியே... அப்பவே நான் அந்தப் பிரிவைத் தாங்க முடியாது... தினமும் இரண்டு வேளை போன் செய்து உன் குரலையாவது கேட்க மாட்டோமான்னு தவிப்பேனே...? வார இறுதியில் நீ வீட்டுக்கு வந்தா, சின்னப்பொண்ணைப் போல வயசை ஒதுக்கி தூர வச்சுட்டு ஓடி ஓடி நீ கேட்ட சாப்பாடு வகைகளை என் கையால் செய்துபோட்டு மகிழ்வேனே...! எனக்கு உன்னைத் தவிர சொத்து... சுகம்னு ஏதாச்சும் உண்டா...? பரத்'' அவள் அழுகையில் குலுங்கினாள்.



மெல்ல அவளது முகத்தைத் தடவிக் கொடுத்தான் மகன்.

''அம்மா உங்க ரத்த அழுத்த நோய்க்கு இப்படி உணர்ச்சி வசப்படுகிறது நல்லதல்ல.''

''என்னை யார் இனி கவனிப்பாங்க?'' கண்களைத் துடைத்துக்கொண்டு தாய் மிகவும் பரிதாபமாகக் கேட்டாள்.

''தன் காலிலேதான் நிற்க முடியுமுன்னு இத்தனை நாள் சமூகத்திலே நீங்க தலை நிமிர்ந்து வாழ்ந்து காட்டலையா? உங்களை யார் வந்து கவனிச்சுக்கணும்? அதுக்கு அவசியமில்லை. நீங்க ரொம்பத் துணிவானவங்க. அம்மா! கொஞ்சம் ஏதாவது சாப்பிடக் கொடுத்தா நான் கிளம்பச் சரியாக இருக்கும்'' என்றான் தன் கைக் கடிகாரத்தைப் பார்த்த வண்ணம்.

கண்களைத் துடைத்துக் கொண்டு, அவிழ்ந்து முதுகில் புரண்ட கூந்தலைச் சுருட்டிச் சுற்றிக் கொண்டை யாகப் போட்டுக் கொண்டு அவள் ஓட்டமாகச் சமைய லறைக்குள் புகுந்தாள்.

அன்று அவளுக்குப் பள்ளிக்கூட விடுமுறை நாளாக இருந்தது நலமாகிவிட்டது. காலையிலேயே அவனுக்குப் பிடித்தமான உணவு வகைகளைத் தயார் செய்து வைத்திருந் தாள். பரபரப்புடன் அவனது ஸ்டீல் தட்டைக் கழுவித்

துடைத்து மேஜைமேல் வைத்தாள். தண்ணீர்க் கூஜாவை யும் டம்ளரையும் பிரிஜ்ஜிலிருந்து எடுத்து வைத்தாள்.

எதிரில் அமர்ந்தபடி அவன் தட்டில் தன் கையால் பதார்த்தங்களைப் பரிமாறிச் சாதத்தை வைத்து நெய்யை யும் பருப்பையும் ஊற்றினாள்.

வெங்காயம் பச்சை மிளகாய் போட்டுத் தாளித்த பருப்பு அவனுக்கு மிகவும் பிடித்தமான உணவு.

''இன்னும் கொஞ்சம் போடுங்கோ ரொம்ப ருசியாக இருக்கு'' என்று சின்ன வயசிலிருந்து அம்மாவிடம் கேட்டு ஆசையாக வாங்கிச் சாப்பிடுவான் அவன். இனி... அவனுக்கு வாய்க்கு ருசியா யார் சாப்பாடு போடப் போகிறாங்க? ரொட்டியும், வெண்ணெயும், முட்டையும் தின்று அலுத்துப் போகப் போகிறான் குழந்தை. ஆஸ்டல் சாப்பாடு சாப்பிட்டு நாக்கே மரத்துப் போயிடும். தலைவலி வந்தால்கூடப் பொறுக்க மாட்டாம துடிச்சுப் போவானே... அந்த ஊரில் போனதும் சீதோஷ்ணம் ஒத்துக்காமே உடம்புக்கு முடியாது போயிட்டால்? மறுபடியும் அவளது கண்கள் கலங்கின.

''அம்மா! என்ன இது?'' பரத் அதட்டியபடி தயிர்ச்சாதத்தை முடித்துக்கொண்டு கைகழுவ எழுந்தான்.

''ஒண்ணுமில்லே பரத். நெய் முறுக்கு செய்து பிளாஸ்டிக் டப்பாவில் வச்சிருக்கேன். அதை மறக்காம எடுத்துக் கொண்டு போ.''

''அம்மா அதெல்லாம் தேவையில்லே. அந்த ஊர் சுகாதார விதிகள் என்னவோ, ஏதோ தெரியாது. பல மைல் தூரம் கஷ்டப்பட்டுச் சுமந்து சென்றுவிட்டு அதை விமான நிலைய இமிகிரேஷன் அதிகாரிகள் குப்பையில்



கொட்டினால் எனக்கு மனம் ரொம்பச் சங்கடப்படும். உங்க ஆசைக்காக பம்பாய் வரை சாப்பிட ஒரு ஆறு முறுக்குகளைப் பொட்டலம் கட்டித் தாங்க போதும்'' என்றான்.

டாக்ஸியில் பெட்டியை வைக்க அவன் தூக்கியபோது அழுகையை அடக்கிக் கொண்டு கேட்டாள் துர்க்கா.

''நானும் விமான நிலையம்வரை வரேன் பரத்.''

''வேண்டாம் அம்மா! இங்கிருந்து விமான நிலையத்திற்குக் கொண்டுவிடவே டாக்ஸிக்காரர் ஒரு தொகையைக் கேட்டிருக்கிறார். போகவர என்றால் நமக்கு அந்தச் செலவு கட்டுப்படியாகாதும்மா. நீங்க பாடுபட்டுச் சம்பாதிக்கிற காசை ஏன் விரயமாக்கணும்? மேலும் அங்கே வந்து கூட்டத்திலே நீங்க எவ்வளவு நேரம் தனியா நின்னுக்கிட்டிருப்பீங்க?''

கண்களில் பொங்கிய நீரை சமாளித்துக் கொண்டு, மகனின் கன்னங்களை அன்போடு தடவி, தலையைத் தொட்டு ஆசி வழங்கினாள்.

''பத்திரம், போனதும் கடுதாசி போடு. இனிமே தினமும் கதவைத் திறந்ததும் நடையில் தபால் கிடக்கிற தான்னு பார்க்கிறதுதான் முதல் வேலையாக இருக்கும்.''

''மூணு வருஷம் மூணு நிமிஷமா போயிடும்மா. கவலைப்படாதீங்கம்மா. வரட்டுமா'' - கேட்டபடி பெட்டி யுடன் அவன் படி இறங்கி முன் பக்கத்தோட்டத்தைத் தாண்டிக் கேட்டைத் திறந்து தயாராகக் காத்திருந்த டாக்ஸி யில் ஏறிக் கொள்ளும் வரை அவனை பின்தொடர்ந்த தாய் - கேட்டின்மீது சாய்ந்தபடி அவனுக்குக் கையசைத்து விடை கொடுத்தாள்.

வண்டி நகர்ந்ததும் உயிரே போய்விட்டது போன்ற தொரு உணர்ச்சியின் உந்துதலில் அவளையும் மீறி விக்கி அழுதபடி கேட்டைச் சாத்திவிட்டு உள்ளே வந்தாள்.

வாயிற்கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்தவளால் கட்டுக்கொள்ள இயலவில்லை.

தொப்பென்று முன்னறைச் சோபாவில் விழுந்தாள்.

''பரத், என் பரத், என் செல்லக் குழந்தை பரத்'' என்று புலம்பியபடி தேற்றுவார் இல்லாது வெகு நேரம் அழுதாள்.

முன்னறைக் கெடிகாரம் பதினொரு முறை மணியடித்ததும் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். வெகு தொலைவில் பறப்பதைப் போன்ற பதைப்பிலே எழுந்து ஜன்னல் வழியே வானத்தைப் பார்த்தாள். வெகு தொலை வில் புள்ளியாக மறைந்து கொண்டிருந்த விமானத்தைப் பார்த்ததும் மீண்டும் அவளுக்கு அழுகை வந்தது.

இந்தப் பிரிவை அவள் தனியே மூன்று வருஷம் தாங்க இயலுமா?

அன்று அவர்களிருவரையும் நீதி மன்றத்திற்கு அழைத்து அவர்களிடையே சமாதானம் செய்து வைக்க முயன்ற நீதிபதி அவளிடம் எத்தனை அன்பாகப் பேசினார்! எத்தனை அறிவுரைகளைச் சொல்லிப் பார்த்தார்!

வெளியே வராந்தாவில் புலிபோல வந்து நின்று கொண்டிருந்த அம்மா நன்றாக வேப்பிலை அடித்துத்தான் உள்ளே அனுப்பி இருந்தாள்.

''கடைசிவரை சொல்லிப் பார்க்க வேண்டியது அவர்கள் கடமை. தீர்மானம் செய்ய வேண்டியவங்க நாம். அதனாலே நீ உன் உறுதியைக் கைவிடாதே. கிடக்கான் அவன். அயோக்கியன். உன் வாழ்க்கையைப் பாழ் பண்ணிட்டு'' - பற்களை நறநறவென்று கடித்தாள்.



மதில்மேல் பூனையாகத் தவித்த அவள் மனது அம்மாவின் போதனையால் உறுதி பெற்றது.

''நல்லா யோசிச்சுத்தானே அம்மா இந்தப் பதிலை சொல்றே?'' அந்த நீதிபதி மிகவும் அனுதாபத்துடன் கேட்டார். பிடிவாதமாக முகத்தை நிமிர்த்திக் கொண்டு அழுத்தமான குரலில் சொன்னாள்.

அரவிந்தன் அவளை ஏக்கத்துடன் பார்த்தான்.

நீதிபதி கேட்ட கேள்விக்கு அவன் வேறு வழி யின்றித் தலையசைத்தான்.

பின்னர் நீதிபதி சட்டத் தோரணையில் ஒலிக்கும் அந்த வாசகத்தைப் படித்தார்.

அந்த விவாகரத்துச் சட்டத்தின் கீழ் இரு தரப்பின ருடைய ஒப்புதல் பேரில் விவாகரத்துக் கோரி மனு செய்து கொண்ட இரு தரப்பினரையும் நன்கு விசாரித்துவிட்டேன். அவர்கள் இருவரும் தந்த பல தகவல்கள் எனக்குத் திருப்தியளிப்பதால் இந்த வருஷம், இந்த மாதம் இந்தத் தேதியிலிருந்து இருவருக்கும் விவாகரத்து வழங்கி யிருக்கிறேன்.

நீதிபதியின் குரல் மெல்லியதாகத் தீர்க்கமாக ஒலித்த போதிலும் கோடாலியால் மனதைப் பிளந்து விட்டது போன்றதொரு பயங்கர உணர்வில் அவள் ஒரு கணம் ஆடிப்போய்விட்டாள்.

இனிமேல் அவளுக்கும் அவளது அருமைக் கணவன் டாக்டர் அரவிந்தனுக்கும் இடையே எந்தவிதமான பந்தமும் இல்லையா?

ஐயோ! இல்லையா...? என்று அவள் மனம் வெளியே வருவதற்குள் எப்படி அடித்துக்கொண்டது! தயாராகக் கொண்டு வந்து நிறுத்தியிருந்த டாக்ஸியில் அவளை அம்மா ஏறும்படி உத்தரவிட்டபோது சற்றுத் தொலைவில் நடந்து சென்று தனது வெள்ளைப் பியட்டில் அவன் ஏறிக் கொண்டதைத் திரும்பிப் பார்த்தாள்.

''அங்கே என்ன பார்வை? அவன் யாரோ நாம் யாரோ இனி. துர்க்கா, நீ மனத்தைத் தளரவிடாமல் உறுதியாக இருந்ததைப்பற்றி எனக்கு ரொம்ப மகிழ்ச்சி. நல்ல வேளையா அவன் வாங்கின வீட்டை உன் பேரில் ஆரம்பத்திலேயே எழுதி வச்சுட்டான். அதையோ, போட்ட நகைகளையோ அவன் திருப்பிக் கேட்காமல் போனது நல்லதாச்சு. அப்படிச் செய்து, தான் ரொம்ப ஜென்டில் மேன்னு அவன் காட்டிக்கறான். அதை நம்பி மறுபடியும் அவன் போடப்போகும் வேஷங்களுக்கு மயங்கிடாதே. ஆரம்பத்திலேயே என் பேச்சைக் கேட்டிருந் தால் இந்தப் படு குழியிலேயே விழுந்திருக்க வேண்டாம். ஒழியட்டும்! இப்போதாவது உனக்கு புத்தி வந்ததே!'' வீட்டுக்கு வரும்வரை அம்மா தொண தொணவென்று பேசிக்கொண்டு வந்தாள். தன்னை மீறி வந்த அழுகையை அடக்கிக் கொண்டு தன் விரல்களை மாறி மாறி சொடுக்கியபடி தன் முன் தெரிந்த சாலையை வெறித்தபடி அவள் வந்து கொண்டிருந்தாள். பக்கத்து வீட்டுக்கார அம்மாளிடம் விட்டுச் சென்ற குழந்தையை அம்மா ஞானம் சென்று எடுத்து வந்தாள்.



தாயிடம் தாவிய குழந்தை மழலையில் கேட்ட கேள்வி, கன்னத்தில் அறைந்தாற்போல அவளை வேதனை யில் துடிக்கச் செய்துவிட்டது.

''அப்பா எங்கேம்மா? மிட்டாய் தருவாரே! அப்பா எங்கே?''

''ஆமாண்டா உன் அப்பா தினம் வந்து மிட்டாய் தந்தான். இனி அவன் இந்த வாசல்படியைக்கூட மிதிக்க மாட்டான். அப்படி மிதிச்சா வெட்டருவாளால் ஒரே போடு போட்டுக் காலைத் துண்டிச்சுடுவேன். கடன்காரன், என் பெண்ணை மயக்கி...''

''அம்மா இப்பத்தான் அவருக்கும் நமக்கும் சம்பந்தமில்லேன்னு ஆயிடுச்சே. குழந்தை எதிரில் ஏம்மா கன்னாபின்னான்னு பேசுறீங்க'' - துயரத்தை அடக்க முடியாது திணறினாள் துர்க்கா.

''நீதிபதி தீர்ப்புப்படி குழந்தையை வளர்க்கும் பாத்தியதை உன்னுடையது. நீதான் அவனது கார்டியன்... மாதம் ஒருமுறை அவன் வாசலில் வந்து நின்று குழந்தையைப் பார்த்துட்டுப் போகலாம். அவன் குழந்தைக்கு மிட்டாய் கொண்டு வந்தேன், படம் பார்க்க காமிக் கொண்டு வந்தேன், பள்ளிக்கூடத்தில் சேர்க்க அட்மிஷன் ஃபார்ம் வாங்கிண்டு வந்தேன்னு கதை விட்டுண்டு உள்ளே வரப் பார்ப்பான். நீ இடம் கொடுக்கக் கூடாது. அவன் குழந்தைக்காக ஒரு காசுகூடக் கொடுக்கத் தேவையில்லைன்னு கோர்ட்டில் சொல்லிட்டது நல்லதாப் போச்சு.''

''குழந்தை அவரைப் பார்க்க ஆசைப்பட்டால் அம்மா?''

''யார் அப்பன்னு புரிஞ்சுக்கிற வயசா இது? நாம் சொல்றதினாலேதானே அவனை அது தன் த்கப்பன்னு புரிஞ்சுக்கிறது. நாம் அந்த மாதிரியான சந்தர்ப்பத்துக்கே இடம் கொடுக்காதிருந்துவிட்டால்?''

''மறுபடிகோர்ட் - கேஸ்... வக்கீல்னு அலைய நேரிடுமே, குழந்தையை மாதம் ஒருமுறை வந்து பார்க் கிறது அவருடைய உரிமையாச்சே.''

''அந்த உரிமையிலே மண்ணை வாரிப்போட என்னால் முடியும். மறுபடி அதற்காகக் கோர்ட்டுக்கு ஓட அவனுக்கு நேரம் கிடையாது. வசதியும் இல்லை. இந்த ஒரு வருஷமா அவன் தன் கிளினிக்கை நன்றாகப் பார்க்காது வக்கீல் வீட்டுக்கும், உறவினர்கள் வீட்டுக்கும் நாயாக அலைஞ்சதிலே அவனது டாக்டர் பிராக்டிஸ் ரொம்ப கெட்டுவிட்டதாம். மனுஷன் கடனில் திண்டாடு கிறானாம். கிளினிக்குக்கு வாடகை கொடுக்க முடியாது திணறுகிறானாம்'' - அம்மா உற்சாகமாகப் பேசினாள்.

நீதிமன்றத்தை விட்டு வெளிவந்தபோது... அரவிந்த னின் முகம் வாடியிருந்ததைக் கடைக்கண்ணால் கவனிக்க துர்க்கா தவறவில்லை.

வேறு யாராவது அரவிந்தனின் நிலையில் இருந்திருந் தால்... அவளையும் அவள் அம்மாவையும் சட்டம் எனும் சாட்டையை வைத்துக்கொண்டு விளாசிவிட்டிருப்பார்கள்.

ஆனால், டாக்டர் அரவிந்தன்... உண்மையிலேயே ஒரு ஜென்டில்மேன்தான். மிகவும் பண்பானவன். அன்பாகப் பேசும் இயல்புடையவன். அவனுடன் வாழ்ந்த அந்த இரண்டு ஆண்டுகளில் அவளை அவன் ஒரு முறை கூட கடினமான வார்த்தைகளால் சாடியது கிடையாது...



''அவன் ரொம்பச் சாந்தமானவன்னு நினைக்காதே. வெளி வேஷம். இந்தப் பூனையும் பாலைக் குடிக்கு மான்னு நமக்கு அதிர்ச்சியைத் தந்தவன். அயோக்கியன். நல்லவன் போர்வையில் உன் வாழ்க்கையைச் சிதைக்கப் புறப்பட்ட அரக்கன். அவன் மூஞ்சியைப் பார்த்தாலே என் வயிறு எரிகிறது. வெட்கம் கெட்டு வாசலில் வந்து நின்றானே! உண்மையானதொரு நல்ல மனிதனாக இருந்தால்... நாலு வார்த்தை நாம் நறுக்குத் தெரித்தாற் போல் சொல்லியும் கேட்காமல்... பயித்தியக்காரனைப் போல வந்து நின்றானே!

''துர்க்கா... அவன் பேச்சுக்கு மயங்கி அவனை உள்ளே விட்டுடாதே. வீடு உன்னுடையது. உன் அனுமதி யில்லாம வாசப்படியை மிதிக்க அவனுக்கு அருகதை கிடையாது.''

இப்படித் தினமும், விஷத்தைக் கொட்டி அம்மா அவளது மனதை எப்படி மாற்றி விட்டிருந்தாள்!

ஆமாம்... அம்மாவுக்கு அவரை மன்னிக்கப் பிடிக்கவில்லை. காரணம் ஆரம்பத்திலிருந்து அவள் அவரை வெறுத்தாள். ஆனால் துர்க்கா ஏன் அப்படி ஒரே பிடிவாதமாக இருந்தாள்? ஏன்? ஏன்?... அவளது கண்களில் மீண்டும் கண்ணீர் பெருகி வழிந்தது.

## 2

அவளது பெற்றோர்கள் தங்களது கடைசி மகளான அவளுக்கு கனக துர்க்கா என்று செல்லமாகத்தான் பெயர் வைத்திருந்தனர்.

பள்ளிக்கூட நாட்களிலே அவள் தன் பெயரை துர்க்கா என்று சுருக்கிக் கொண்டிருந்தாள்.

''அதனால்தான் அப்படி எதற்கெடுத்தாலும் சட்டென்று மூக்குக்குமேல் கோபம் வந்துடுதா?'' கொஞ்சியபடி அரவிந்தன் அவளது தீர்க்கமான முதுகை நிமிண்டி விளையாடுவது வழக்கம்.

அவளுக்குச் சட்டென்று கோபம் வரும் இயல்பு இருந்தது. ஆனால் தனது ஆத்திரத்தையும் மனதில் ஏற்பட்ட எரிச்சலையும் அவள் தன் பெற்றோர்களிடம் காட்டிக் கொண்டதில்லை. தகப்பனைவிட தாயிடம் பயம் அதிகம். சிறு பிராயத்திலிருந்தே அவளால் அடக்கி ஆளப்பட்டவள்.

பெற்றோரிடம் காட்ட முடியாத தன் உணர்ச்சிக் கொந்தளிப்புகளை அன்பு காட்டி அவளை ஆதரித்த கணவனிடம் சில சமயம் அவள் வெளிப்படுத்துவதுண்டு.

''நாலு மணிக்குத் தயாரா இரு. வெளியே போகலாம்னு சொன்னீங்க! ஆறுமணிக்கு வந்து நின்னா என்ன அர்த்தம்?'' தன்னை வெளியே அழைத்துச் செல்ல காருடன் வந்து நிற்கும் கணவனிடம் எரிந்து விழுந்தாள்.

''இதோ பார் துர்க்கா! நான் ஒரு வைத்தியன். அதுவும் சொந்தமாக தொழில் நடத்துகிறவன். இரண்டு நர்சிங் ஹோமுக்கு ஸ்பெஷலிஸ்டாகப் பணிபுரிகிறவன். திடீர்னு ஒரு அவசர கேஸ். அறுவை சிகிச்சை செய்தாகணும். உடனடியாக வரணும்னு டாக்டர் நம்பீசன் கூப்பிட்டார். என் கிளினிக் கேஸ்களை அப்படியே உதவி டாக்டரிடம் விட்டுவிட்டு ஓடினேன். பேஷண்ட் நிலைமையை கவனிக்க கொஞ்ச நேரம் அங்கே தங்கி இருந்துட்டு உன்னை காக்க வச்சிருக்கமேன்னு நினைப்பில் இங்கே ஓடி வரேன். என் வேலையைப் பற்றி நினைச்சுப் பார்க்கமாட்டேன்கிறியே? சரி சரி ஏறிக்கோ, எங்கே



போகணும்னு ஆசைப்படறியோ அங்கேயெல்லாம் கூட்டிட்டுப் போகத் தயார்!'' அரவிந்தன் கொஞ்சமும் நிதானத்தை இழக்காது பொறுமையாக அவளிடம் பேசுவது வழக்கம்.

''கோபம் இருக்கிற இடத்தில் குணம் இருக்கும் பாங்க. கனக துர்க்கான்னு உனக்குப் பேர் வச்சிருக்காங்க இல்லையா? அந்தக் கனகம் என்கிற முன்பகுதியைப் போல என்னைப் பொறுத்தவரை நீ தங்கமானவ. கனக துர்க்காவைப் பணிகிறவர்களுக்கு அதிர்ஷ்டம் பொங்குமாம். அதனாலேயோ என்னவோ நீ என் வாழ்க்கையில் புகுந்த பின்னர், இந்த நகரத்திலே மிகவும் பிரபலமான நர்சிங் ஹோம்கள் எல்லாம் என்னை அழைத்து உதவி கேட்குமளவுக்கு நான் ஒரு சிறந்த அறுவை சிகிச்சை நிபுணனாகிட்டு வரேன். நீ என்னை வாழ்விக்க வந்த திருமகள்'' என்று அடிக்கடி அவளைச் செல்லமாகக் கொஞ்சுவான்.

உண்மையில் அவள் கணவன் ஒரு சிறந்த அறுவை சிகிச்சை நிபுணனாக உருவாகிக் கொண்டு வந்தான். அவன் ஆரம்பித்திருந்த சொந்த கிளினிக்கிலும் அவனுக்கு நிறைய வருவாய் வந்து கொண்டிருந்தது.

அவள் தாய்மையடைந்த போதுதான் சொன்னான். ''நாமிருவரும் சிரமப்பட்டு சிக்கனமாக வாழ்ந்து சேமித்து வச்சிருக்கிற பணத்துடன் கொஞ்சம் வங்கியில் கடன் தொகை எடுத்து... புஷ்பா காலனியில் ஒரு சிறு வீடு வாங்க உத்தேசித்திருக்கிறேன். நம் குழந்தை ஓடியாடி விளையாட ஒரு சிறு தோட்டம் தேவை. காரை வைக்க கராஜ் தேவை. இந்த சிறு குடியிருப்புப் பகுதி நமக்கு இனி சரிப்பட்டு வராது.''

அதைக் கேட்க அவளுக்கு மகிழ்ச்சியாகத்தான் இருந்தது. அதைவிட அவன் செய்த காரியம் அவளுக்கு தாங்கொணாத சந்தோஷத்தைத் தந்ததும் உண்மையே. கர்ப்பிணி மனைவியைக் காரில் ஏற்றிக்கொண்டு அந்தப் புதிதாக உருவாகிக் கொண்டிருந்த புஷ்பா காலனியில் தான் தேர்ந்தெடுத்துவிட்டிருக்கும் வீட்டை அவளுக்குக் காட்டினான்.

அதன் அமைப்பு பிடிக்காவிட்டால் காண்டிராக்டரிடம் சொல்லி அதே காலனியில் விலைக்கு விற்க இருந்த இன்னொரு வீட்டை வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம். வீடு அவளுக்குப் பிடித்திருக்க வேண்டும். அது மிகவும் அவசியம். ஏன் என்றால் அந்த வீட்டை அவள் பெயருக்கு எழுதி வைக்கப் போகிறான். அவனைத் திருமணம் செய்து கொண்டு ஒரு குழந்தையைப் பெற்றுத் தரப்போகும் தன் இனிய மனைவிக்கு அவன் தரப்போகும் முதல் பரிசு வீடு என்றபோது... அவள் உணர்ச்சி வசப்பட்டு அவனது கையை அழுத்தமாகப் பற்றிக் கொண்டபடி... புதிதாகக் கட்டப்பட்ட நிலையிலிருந்த அந்த வீட்டுக்குள் அவனுடன் ஜோடியாக நுழைந்தாள்.

காலனியில் அது முதல் வீடாக, கடைகளுக்கும் நெடுஞ்சாலைகளுக்கும் பல வசதிகளுக்கும் அருகே இருந்த காரணத்தினால் முதலில் அவளுக்கு அந்த இடம் பிடித்துவிட்டிருந்தது.

திருவல்லிக்கேணியில் நெருக்கமான சந்து போன்ற சதாசிவன் தெரு ஓட்டுக்கூரை வீட்டில் பிறந்து வளர்ந்து ஆளான அவளுக்குத் திருமணத்திற்குப்பின் வசித்த அந்த சிறு ஃபிளாட்டுக்குப்பின் அந்த வீடு அரண்மனை போலப் பிரமிக்கச் செய்தது.



அதன் அமைப்பு ரொம்பவும் பிடித்துவிட்டிருந்தது. உள்ளடங்கிய குளியலறைகள் கொண்ட மூன்று படுக்கை அறைகள், விஸ்தாரமான சமையலறை, சாமான் வைக்க ஒரு சிறு அறை. அதன் பக்கத்திலே பூசை அறை, தடுப்பு செய்த சாப்பாட்டறை, முன்னறைகள், கம்பிபோட்ட பாதுகாப்புடன் பின்பக்கம் பெரிய வராந்தா, அங்கே துணி துவைக்க, பாத்திரம் துலக்க, மாவரைக்க என்று பல வசதிகள்.

பின் பக்கத்துத் தோட்டத்திலே துளிர் விட்டுக் கொண்டு இருந்த வேப்பங்கன்று, அதற்குச் சற்றுத் தொலைவில் எலுமிச்சை செடி, ஆழமான கிணறு, சுற்றுச்சுவர், கார்ப்பரேஷன் தண்ணீரை இறைக்க பம்புசெட், முன்பக்கம் பெரியதொரு வராந்தா, படியில் இறங்கினால் கேட்டுவரை பரவி நின்றதொரு தோட்டம், அதன் ஒரு பக்கத்திலே கார் நிற்க கராஜ், பின்பக்கம் வேலையாள் தங்கியிருக்க ஒரு சிறு அவுட் ஹவுஸ்.

''ரொம்பப் பணம் பிடிக்குமே. பெரிய பங்களா மாதிரி இருக்கே.''

''குட்டி பங்களா எல்லாம் இரண்டரை கிரவுண்டுக்குள்ளே அமைந்துள்ள புதுமாடல் கட்டடங்கள். உனக்குப் பிடிச்சிருக்கா. பணத்தைப் பற்றிய கவலை உனக்குத் தேவையில்லை.''

''ரொம்பப் பிடிச்சிருக்கு.''

''அப்ப இது நாளைக்கே உனக்கு என் பரிசாக உன் பெயரில் வாங்கப்படப் போகிறது. அதற்கு ஆவன செய்ய வீட்டைக் கட்டிய காண்டிராக்டரிடமும் நம் வக்கீலிடமும் ஏற்பாடு செய்ய வேண்டும். இன்னும் ஏதாவது சீர்

திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று தோன்றினால் சொல்லு.''

அப்பொழுதுதான் அவளுக்கு அந்த ஆசை வந்தது.

யானை தன் தலையில் மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளும் என்பார்கள். அவளோ அவளது வாழ்க்கையை அலங்கோலப்படுத்திக் கொள்ளத் தான் விட்டுப்போன உறவைத் தானே வலியத் தேடிக் கொண்டு போனாள்.

''அரவிந்த்'' - அப்படித்தான் உரிமையாக நேசமாக அன்புடன் தன் கணவன் பெயரைச் சொல்லி அவள் அழைப்பது வழக்கம்.

''இந்த மாதிரி இருக்கும் சமயங்களில் பெண்களுக்கு சில ஆசைகள் ஏற்படும்.''

''இன்னும் என்ன ஆசைகள் சொல்லு, முடிந்தவரை தீர்த்து வைக்கிறேன்.''

''அம்மா அப்பா இருவரையும் போய்ப் பார்த்து... அவங்க காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுகிட்டு... அவங்களை அந்தச் சின்ன ஓட்டு வீட்டிலிருந்து இங்கு கொண்டு வந்து வச்சுக்க ஆசைப்படறேன்.''

''ஒரு சமயம் அவங்க மறுப்பாங்க. எதுக்கும் இதைப்பத்தித் தீர யோசிச்சு செய். அவசரப்படாதே.''

அவள் தினமும் அதைப் பற்றியே பேசி வற்புறுத்திக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் மாலை அவன் வீட்டிற்கு வந்தபோது அவளைக் காரில் அழைத்துக் கொண்டு திருவல்லிக் கேணியில் அவள் பெற்றோர்கள் வசித்த வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.



மகளை உள்ளே அனுமதித்த ஞானம் அவனை உக்கிரமாக உறுத்துப் பார்த்தாள். ''கர்ப்பிணிப் பெண் வந்திருக்கே. தப்பு செய்தாலும் பெத்தமக உன்னை ஏத்துக்க முடியும். அவனை உள்ளே வரச் சொல்லாதே'' - கண்டிப்பாகப் பேசினாள்.

தாயு மகளும் அழுது, புலம்பி ஒன்றுசேர்ந்து பின்னர் தந்தையின் காலில் விழுந்து மன்னிப்புப் பெற்றுக் கொண்டு, தாய் அளித்த வெற்றிலை பாக்கு குங்குமத் துடன் அவள் வெளியே வரும்வரை வாசலில் காரில் அவளுக்காகப் பொறுமையாகக் காத்திருந்தான் அரவிந்தன்.

''பிரசவத்திற்கு ஆஸ்பத்திரியில் நான் அனுமதிக்கப் பட்டால் அம்மா வந்து கவனிச்சுக் கொண்டு, குழந்தை மூணு மாத வளர்ச்சியடையும்வரை பிறந்த வீட்டில் வச்சுக் காப்பாத்துவதாக வாக்களிச்சிருக்காங்க. இரண்டு நாளைக் கொரு தடவையாவது நான் சாயங்கால வேளையில் வந்து அம்மா தயாரிக்கும் உணவை சாப்பிட்டு விட்டுப் போகணுமாம்.''

அரவிந்தன் முகம் இறுகிப் போனான்.

''உன் பெற்றோர்களுக்கு... இப்போது பெண் மேல் கோபம் இல்லை... அவளை மீண்டும் வீட்டுக்குள் சேர்த்துக் கொள்ள சம்மதிக்கிறாங்க... ஆனால் மாப் பிள்ளைதான் பொல்லாதவன். அதனால் அவனை வாசலுடன் நிறுத்திக் கொள்கிறார்கள் இல்லையா?'' கொஞ்சம் மனத்தாங்கலுடன் கேட்டான்.

அவளது நிலையில் வேறொரு பெண் இருந் திருந்தால் என்ன சொல்லியிருப்பாள்?

''உங்களை மதிக்காத வீட்டில் எனக்கு மட்டும் என்ன உபசாரம் உறவு வச்சிருக்கு... வாங்க போகலாம்''

என்று கூறி பின்னர் தொடர்ந்து அங்கே போக மறுத்திருப்பாள்.

ஞானத்திற்குத் தெரியும். தன் கைப்பொம்மையாக சொன்னதைக் கேட்டுக் கொண்டு அடிமையிலும் அடிமையாக இருந்த மகளுக்குக் காதல் கல்யாணம் செய்து கொள்ள துணிவு வந்தது அவனால்தான். அவன் கூடவே வீட்டுக்குள் நுழைந்தால் அவளால் தன் மகளை இஷ்டப் படி ஆட்டி வைக்க இயலாது. அவளால் சில நன்மைகளை அடைய முடியாது.

பெற்றோரைத் தேடிக் கொண்டு உறவைப் புதுப் பித்துக் கொள்ள வலிய துர்க்கா போன சமயம் அவளது பெற்றோர்கள் மிகவும் கஷ்ட நிலையில் இருந்தனர். அப்பா ஒருமுறை மாரடைப்பு வந்து செத்துப் பிழைத்து வீடு வந்திருந்தார்.

ஜெர்மனிக்கு மேல் பயிற்சிக்குப்போன இன்ஜினீயர் அண்ணன் அங்கேயே ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு தங்கிவிட்டான்.

அவனது காதல் திருமணத்தைப் பற்றி வாயைத் திறக்காது பெற்றோர்கள் இருந்த போதிலும் அவன் இனி தாய் நாட்டுக்கு வருவான், வயது காலத்தில் தங்களை வைத்துக் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கை அடியோடு அழிந்துபோய் விட்டிருந்தது.

மூத்த மகளின் புக்ககம் பம்பாயிலிருந்தது. அவள் கணவன் வீட்டுக்கு மூத்த பிள்ளை. தாயும், தந்தையும் தவிர மாதுங்காவில் அவர்கள் வசித்த ஒரு அறை குடியிருப்பில் தங்கை, தம்பி என்று புடை சூழ்ந்திருந்த பெரியதொரு குடும்பம். அவன் ஒருவன் சம்பாத்தியத்தில் உட்கார்ந்து தின்றது உறவினர் கூட்டம். பெண்ணை கொடுத்த இடத்தில்போய் ஒரு மணி நேரம்கூடத் தங்கமுடியாத துர்ப்பாக்கிய நிலை.



அப்பாவுக்கு மருந்து வாங்க காசில்லை என்று அம்மா வெகு நாசூக்காகப் பெண்ணுக்குக் கடிதம் போட்டும், அங்கிருந்து உதவியாகக் காசு பெற முடியாத நெருக்கடியான நிலைமை.

ஏமாந்தவள் துர்க்கா ஒருத்திதான் என்று ஞானம் நன்கு அறிவாள்.

வயதான காலத்தில் தங்களது உதவிக்குச் சேர்த்து வைத்திருந்த ஒரு இன்ஷூரன்ஸ் அவள் என்று எண்ணியிருந்தாள். ஜெர்மனிக்கு மேற்பயிற்சிக்குப் போன பிள்ளை சங்கரன் பணம் அனுப்பாத குறையைக் கடைசி மகளின் சம்பாத்தியத்தால் நிவர்த்தி செய்துகொள்ளலாம் என்று அந்த நினைப்பிலேயே வாழ்ந்தாள் ஞானம்.

துர்க்காவின் தந்தை பள்ளிக்கூட ஆசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். பிள்ளையைப் படிக்க வைத்து மூத்த மகளைக் கட்டிக் கொடுத்து கடைசிப் பெண்ணுக்குக் கல்வி அளித்து ஆசிரியையாக ஒரு பள்ளியில் வேலை வாங்கித் தந்ததுடன் மனிதர் கைசலித்துவிட்டார்.

அவர்கள் வசித்த அந்த ஒரு வீடுகூட வாடகை வீடுதான். ஆரம்பத்தில் இருபது ரூபாய் வாடகை தந்து குடியிருந்தனர். வீட்டுக்காரன் அதற்கு இப்போது முந்நூறு ரூபாய்கள் வாடகையாக வசூலித்துக் கொண்டிருந்தான். கல்யாணமாகாத மூன்றாவது மகள் நகரத்து பிரபல பள்ளிக்கூடமொன்றில் ஆங்கில ஆசிரியையாகப் பணிபுரிந்து வந்தாள். மூன்று வருஷம் தொடர்ந்து வேலை

செய்து வேலை நிச்சயமான பின்னர் அவள் கொண்டு வந்த சம்பளம் அவர்களுக்குப் போதியதாக இருந்தது.

மகனும் கைவிட்டுவிட்டான். மூத்த மகளிடம் எதுவும் எதிர்பார்க்க முடியாது. அதனால் துர்க்காவைத் தன் கைப்பிடியில் இருந்து போக அனுமதிக்கக்கூடாது. கடைசி மூச்சுவரை அவளை தம்முடனேயே வைத்துக் கொள்ள வேண்டும். அவள்தான் அவர்களைக் காப்பாற்றி கரை யேற்றப் போகிறவள் என்று தீவிரமாக நம்பிய ஞானம், கண்களில் எண்ணையை ஊற்றிக் கொண்டு மகளை ரொம்ப கவனித்துக் கொண்டிருந்தாள்.

அப்படியும் அவள் அவர்களை மீறிக்கொண்டு காதல் வயப்பட்டு அவர்கள் அனுமதி கொடுக்க மறுத்தும் பாராட்டாது டாக்டர் அரவிந்தனை பதிவுத் திருமணம் செய்துகொண்டாள். பின்னர் ஒரு கோவிலில் தாலி கட்டிக்கொண்டு வீட்டைவிட்டு வெளியேறினாள். கணவனுடன் வெறியேறி குடித்தனம் செய்யத் தொடங்கிய போது அம்மா அவர்களுக்குக் கொடுத்த சாபம்...

அதை இப்பொழுது நினைத்தாலும் குலை நடுங்குகிறது.

பின்னர் தானே வலியப் போய் அம்மாவின் வலை யில் விழுந்த துர்க்கா, குழந்தையைப் பெறுமுன், அப்பா அடுத்தபடியாக மாரடைப்பால் மரணமடைந்துபோனார்.

மாப்பிள்ளை அரவிந்தன் வந்த வேளை... மாமனாருக்கு மரணம் சம்பவித்தது என்று சதா அடிக்கடி தன் மகளிடம் சாடிக் கொண்டிருந்தாள். தந்தை இறந்து விட்ட செய்தியைக் கேட்ட மகன் ஓடிவந்து விடவில்லை. இறுதி காரியங்களுக்கு ஒரு தொகையை டிராப்டாக தாய்



பெயருக்கு அனுப்பிவிட்டு அத்துடன் ஒரு கடிதம் எழுதி தன் துயரத்தைத் தலை முழுகிவிட்டுத் தன் வெளிநாட்டு மனைவியுடன் வெளிநாட்டில் வசதியாக வாழ்ந்து கொண்டிருந்தான்.

பம்பாயில் பெரிய குடும்பத்தில் திணறிக் கொண்டிருந்த அக்காவுக்கும் விடிவு காலம் வந்துவிட்டது. கனடாவிலேயே ஒரு பெரிய வேலை கிடைக்க அவள் கணவன் முதலில் புறப்பட்டுப்போய் - பின்னர் மனைவி குழந்தைகளை அழைத்துக்கொண்டுவிட்டான். ஒரே வருஷத்தில் அவளது சகோதரியின் வாழ்க்கையில் வசதியான ஒரு திருப்பம் ஏற்பட்டுவிட்டது. அப்போதுகூட அவள் தாயாருக்கு எந்தவிதமான உதவியும் செய்ய வில்லை.

தந்தை இறந்ததைப் பற்றி துக்கம் தெரிவித்து கடிதம் எழுதி இருந்தாள்.

துர்க்காவுக்கு சுபாவத்தில் கொஞ்சம் இளகிய மனது. கண்மூடித்தனமான பாசம் தாய்மீது. ஆஸ்பத்திரியில் குழந்தை பிறந்த பின்னர் அவள் தன் வீட்டுக்கு வராது அம்மாவுடன்கூட துணையாக இருக்க விரும்புவதாகக் குழந்தையுடன் தாய் வீட்டுக்குப் போனவள்தான்.

அப்போது ஏற்பட்ட விரிசல் பெரும் பிளவாகி அவளை அரவிந்தனிடம் இருந்து நிரந்தரமாகப் பிரித்து விட்டது.

சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவள் தாய் தன் மூத்த மகள் கனடாவுக்கு வந்து தன்னுடன் இருக்க அழைக்கிறாள் என்று பெருமையுடன் பேசிக் கொண்டு அங்கே சமையற்காரியாக உழைத்துப் போடப் போனவள் காய்ச்சல் வந்து அங்கேயே இறந்து போனாள்.

கடந்த காலச் சிந்தனைகளினின்று திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள் துர்க்கா.

பகல் மணி இரண்டைத் தாண்டிவிட்டது. அழுது ஓய்ந்து, நடந்ததையெல்லாம் நினைத்துக்கொண்டு பித்தம் பிடித்தவள்போல முன்னறையிலேயே இன்னமும் உட்கார்ந்திருந்தாள்!

பரத் அறையில் திரைச் சீலையை இழுக்கும் சப்தமோ, புத்தக ஏடுகளைப் புரட்டும் ஓசையோ சில சமயம் அவன் தனக்குள்ளே லேசாக ஆங்கிலப் பாடல் களைப் பாடிக் கொண்டு கையைச் சொடுக்கியபடி நடையில் நடந்து பின்பக்கம் போகும்போது எழுந்த காலடி ஓசையோ, போதும். அந்த வீட்டில் அவன் எங்கும் நிறைந்து நின்றது போன்றதொரு நினைப்பு மனத் துணிவைக் கொடுத்தது.

ஆனால் இப்போது ஜன்னல்கள் இறுக்கமாக மூடி யிருக்க ஒரு அழுத்தமான அமைதி. அவளது மண்டையை இறுக்குவது போன்று பயங்கரமாகத் தென்பட்டது.

தன்னந்தனியே ஒவ்வொரு இரவும் தோட்டத்து மரத்து இலைகள் அசைந்தால்கூட மிரண்டு கொண்டு இவள் படுக்கையில் உறக்கமின்றி கிடக்க வேண்டும். ஒருநாள் அல்ல, இரண்டு நாள் அல்ல, மூன்று ஆண்டுகள்... அப்பப்பா, உடலைச் சிலிர்த்துக் கொண்டு எழுந்தாள்.

அவளுக்குப் பசியிருக்கவில்லை. சாப்பாட்டறையி லிருந்த பிரிஜ்ஜைத் திறந்து ஸ்டீல் சொம்பில் வைத்திருந்த குளிர்ந்த நீரை எடுத்துக் கொஞ்சம் குடித்தாள். பாத்திரத்தை வைத்து பிரிட்ஜை மூடியபோது கவனித்தாள். மறுபடியும்



பிரிட்ஜில் ஒரு பக்கத்திலிருந்து நீர் புக ஆரம்பித்து விட்டிருந்தது. அதை சரிபார்க்கத் தெரிந்தவரைக் கூப் பிட்டு, முதலில் அதை ஒழுங்குபடுத்த வேண்டும். மண்டை பிளக்கும் இந்த வெயில் காலத்தில் அது இல்லா மல் அவளால் வாழ இயலாது.

வீட்டை வாங்கியபோது அவள் கணவன் வாங்கி வைத்த பிரிட்ஜ். அதைச் சரிபார்த்து வைத்துக்கொண்டு வாழவே அவளுக்குப் பொருளாதாரம் இடம் தரவில்லை.

தொடர்ந்து இன்னும் சில நினைவுகள் சங்கிலிபோல வரவே அவள் கவலையுடன் சாப்பாட்டறை மேஜையைப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

கிணற்றுத் தண்ணீரை மின்விசை மோட்டாரினால் மேலேயிருந்த பெரிய தொட்டியில் ஏற்றி உபயோகித்துக் கொண்டிருந்தாள்.

அந்தத் தண்ணீர் தொட்டியில் ஒரு பக்கம் பெரிய தொரு விரிசல் கண்டுவிட்டிருந்தது. தண்ணீர் அதன் வழியே கசிந்து வீணாகிக் கொண்டிருந்ததைப் பார்த்துக் கவலையில் மூழ்கிப் போனாள்.

அதைச் சரிப்படுத்த ஒரு கொத்தனாரைத் தேடிப் பிடித்தாக வேண்டும். குளியலறை வெண்டிலேட்டர் கண்ணாடி உடைந்துவிட்டிருந்தது. அதை மாற்ற ஏற்பாடு செய்யவேண்டும்...

பள்ளிக்கூட விடுமுறை நாட்களைத் தவிர மற்ற நாட்களில் இவைகளைக் கவனிக்க அவளுக்குப் பொழுது ஏது?

ஆண்பிள்ளையின்றி தன்னந்தனியே ஒரு பெண் வாழ நேர்ந்தால்...

சின்னச் சின்னதாக இருந்தாலும் இந்த மாதிரியான தொல்லைகள் அசுர வடிவெடுத்து அச்சுறுத்துகின்றனவே.

சமையலறைக்குள் புகுந்து, விட்டுப்போன மீதிக் காரியங்களைக் கவனித்தாள். லகான் இல்லாத குதிரையாகப் பல வழியிலும் ஓடிய சிந்தனையை அடக்க ஏதாவது வேலை செய்து கொண்டிருந்தால் தேவலைபோல மனம் ஆதங்கப்பட்டது.

கொஞ்ச நேர வேலை என்றாலும் அவளுக்கு மனச்சோர்வினால் உடலில் அயற்சியேற்பட்டுவிட்டது. முகத்தில் வியர்வை வழிந்தது. குளியலறையில் குழாயைத் துடைத்துக் கொண்டு கூந்தலை வாரி ஒழுங்கு செய்து கொண்டு வந்தாள். ஆனால் பரத்தின் நினைவு நெஞ்சை வருடியதை உதற முடியவில்லை.

பம்பாய் வாசம் பணத்துக்கு நாசம் என்பார்கள். வாசல் படியைவிட்டுக் கீழே இறங்கினால் போதும்,

நூறுரூபாய் நோட்டு சில்லறையானதும் மாயமாகி விடும். அவன் கையில் செலவுக்கு அதிகப் பணம் ஏதும் கிடையாதே. சிநேகிதனுடன் அவன் இந்நேரம் கடைத்தெருவில் சுற்றிக் கொண்டிருப்பானோ?

யாரோ புண்ணியவான் தயவில் படிக்கப்போகிறான். கண்டபடி செலவழிக்க கைசெலவுக்கு வேறு, அந்தப் புண்ணியவான் பணம் தருவாரா என்ன?

அவளால் இருபது ரூபாய்க்குமேல் அவனிடம் ஏதும் கொடுக்க இயலவில்லை. அம்மா போன பின்பு, அவளது சம்பளம் ஒன்றையே நம்பிக்கொண்டு அந்தப் பெரிய வீட்டையும் படிக்கும் பிள்ளையையும் வைத்துச் சமாளிக்க அவளால் முடியவில்லை. நல்லவேளை, பரத் நன்றாகப் படித்தான். உபகாரச் சம்பளம் கிடைத்தது. கல்விக்



கட்டணம் செலவை அவனே தானே கவனித்துக் கொண்டான். எப்போதாவது அவள் செலவுக்குப் பத்தோ, இருபதோ கொடுத்து உதவினான்.

சும்மா சொல்லக்கூடாது. பரத் ரொம்ப நல்ல பிள்ளை. அவன் வயதை ஒத்த அந்தக் குடியிருப்புப் பகுதியில் உள்ள பையன்கள் சிலர் பெற்றவர்களுக்குக் கொடுக்கும் தொல்லைகள் ஏராளம்.

சிகரெட் குடிக்கும் பழக்கம்கூட பரத்திடம் கிடையாது. வீட்டில் தங்கியிருக்கும் நாட்களில் அவன் அருகிலிருக்கும் ஆஞ்சநேயர் கோவிலுக்குப் போய் வருவது வழக்கம்.

பாட்டியோ, அவளோ கோவிலுக்குப் போக வேண்டும், பிரார்த்தனைகளை மனப்பாடம் செய்து கொள்ள வேண்டும் என்று அவனிடம் சொன்னதே யில்லை.

பக்திப் பழக்கங்கள் அவனுக்கு இயற்கையாகத் தானாக வந்திருந்தன.

திங்கள் கிழமைகளில் தலைமுழுகிவிட்டு பட்டையாகத் திருநீறு அணிந்து கொண்டு... மருந்தீஸ்வரரை வணங்கிவிட்டு வருவான். சனிக்கிழமைகளில் ஆஞ்சநேயரை வழிபடுவான். ஆங்கிலப் பாடல்களை முணு முணுப்பதுபோல்... சில சமயங்கள் வீட்டில் நடமாடும் போது அவனையறியாது அபிராமி அந்தாதியைப் பாடுவான். இந்த வழக்கங்கூட அவனுக்குப் பிறவியிலேயே பாரம்பரியமாக வந்த குணம்தான்.

அறுவை சிகிச்சை நிபுணராகிவிட்டபோதிலும் அவள் கணவன் அரவிந்தனுக்குக் கடவுள் பக்தி அதிகம்.

குடும்பத் தலைவி என்ற ஸ்தானம் வகித்த அவளிடம் கூட அத்தனை பக்தியைக் காண முடியாது.

காலையில் எழுந்ததும் அவசரமாகக் குளியலை முடித்துக் கொண்டு பள்ளிக்கூடத்து வேலைக்குப் போய் வந்த அவள் விடுமுறை நாட்களில்தான் பூஜையறையை எட்டிப் பார்ப்பாள்.

ஆனால் அவனோ விடியற் காலையிலேயே எழுந்து குளித்து மாற்றுடை அணிந்துகொண்டு தேவாரத்திலிருந்து ஏதாவது ஒரு பாடலை பூஜையறையிலுள்ள தெய்வப் படங்கள் முன் முணுமுணுத்துவிட்டு ஊதுபத்தியைக் கொளுத்தி வைத்துவிட்டுதான் காப்பி சாப்பிடுவான்.

பிள்ளையும் அந்த வரையில் அப்பனைப் போலவே தான் நடந்து கொண்டான்.

பாட்டி ஞானத்திற்கு அதனைக் காண எரிச்சலாகத் தானிருந்தது.

''இவனுக்கு என்னத்துக்கு காலேஜ் படிப்பு. ஏதாவது ஒரு கோயிலில் பூசாரியாக இருக்கத்தான் லாயக்கு'', ஞானம் சொல்வது வழக்கம்.

''பாட்டி! பூசாரி வேலை ஒண்ணும் அப்படி கேவலமல்ல. பெரிய கோடீஸ்வரன்கூட கோவிலுக்குள் வந்ததும் பூசாரி கொடுக்கும் பிரசாதத்தை வாங்க கையைத் தாழ்த்திக் கொண்டு தலை குனிந்து நிற்க வேண்டியிருக்கு தெரியுமா? பணம், பங்களா, கார், இதுகளை வச்சு இன்னொரு தொழிலாளியின் அந்தஸ்தை எடைபோடுவது முட்டாள்தனம். தெருவைக் கூட்டும் தொழிலாளியிடம் கூட சரஸ்வதி அன்னையின் கடாக்ஷம் இருப்பதாகப் பாரதியார் கூறியிருக்கிறார்.''



''போதும் வாயை மூடு.''

''வயதாகியும் விவேகமில்லாமல் பேச வேண்டாம்.''

''உன் மகன் குணத்திற்கு அப்படியே அப்பனைக் கொண்டு வந்திருக்கான். அந்தக் கடன்காரனுக்கு என்னைக் கண்டால் ஆகாது... பிள்ளைக்கும் அப்படியே என்னைக் கண்டால் ஆவதில்லை. நானும் மானம் கெட்டுப்போய் உங்களோடு இன்னும் வாழறேனே'' - அடிக்கடி ஞானம் புலம்புவாள்.

தாயையும் தம் மகனையும் சமாதானப்படுத்து வதற்குள் துர்க்காவுக்குப் போதும் என்று ஆகிவிடும்.

அந்த வீட்டில் பொருளாதார நிலைமை சரிந்து கொண்டுபோயிற்று.

வீடு வாங்கிப் பல ஆண்டு ஆகிவிட்டதனால் சாயம் இழந்து காணப்பட்டது.

இங்குமங்கும் சிறு வெடிப்புகள் தெரிந்தன. ஜன்னல் கிரில்களில் துரு ஏறிக்கொண்டுவிட்டிருந்தது.

சாயமடித்து, வீட்டை ஒழுங்கு செய்யப் பணம் தேவைப்பட்டது. மாதச் செலவுகளை சமாளிக்க இயலாது கராஜையும் அதை ஒட்டிய சிறு அறையையும் கொஞ்ச செலவில் சரிப்படுத்தி ஒரு வயதான தம்பதியருக்கு வாடகைக்கு விட்டிருந்தாள். அந்த வாடகை, வீட்டுவரி, தண்ணீர் வரி, மின்விசை செலவு இத்யாதிகளைச் சமாளிக்க உதவியது. அவளது சம்பளம் அவர்கள் மூவரும் சாப்பிட்டு, கடன் இல்லாது ஏதோ வாழ்ந்தோம் என்ற ஒரு நிலையைச் சமாளிக்கத்தான் உதவியது. அம்மா போன பின்பு அவளால் வங்கியில் மாதம் இருபதோ, ஐம்பதோ சேமிக்க முடிந்தது. ஆனால் அந்தச் சேமிப்பு எம்மாத்திரம்?

ஒரு திடீர் செலவு வந்துவிட்டால்...?

மழை பொழிந்துதான் பயிர்கள் செழிக்க முடியுமே தவிர, பனி பெய்து பயிர்கள் வாழ முடியாது...

பெருமூச்சுடன் அவள் தன் படுக்கை அறைக்குள் வந்தாள்.

தலைமாட்டில் அவள் எப்பொழுதும் ஒரு டைரியை வைத்துக் கொண்டு தூங்குவது வழக்கம்.

அந்த டைரி, அவள் கணவன் அவளுக்குக் கொடுத்தது... இருபது வருஷத்துக்கு முந்திய டைரி. அதில் அவன் அப்பொழுது எழுதிவைத்த இரண்டொரு குறிப்புகளைப் படுக்குமுன் மீண்டும் திறந்து பார்த்துப் படித்துவிட்டு ஒரு கணம் அந்த நாட்களுக்குள் மனதை வளையவிட்டுப் பின்னர்தான் தூங்கப் போவது வழக்கம். அதைவிட மிக முக்கியமானது அவள் அம்மாவுக்கோ பிள்ளைக்கோ தெரியாதது - அந்த டைரிக்குள் வைத்துக் கொண்டிருந்த அவளது திருமணப் புகைப்படம். அதைத் தினமும் ஒரு தடவை பார்த்துவிட்டுத் தனது பேரிழப்பை எண்ணிப் பெருமூச்செறிந்துதான் உறங்கப் போவாள்.

அந்தப் படம் காலத்தால் பழுப்படைந்து... உருவம்கூட சரியாகத் தெரியாது... மங்கிவிட்டிருந்தது.

ஆனால், அவள் மனதில் ஒட்டிக் கொண்டிருந்த அவனது உருவம் மங்கவில்லை.

அந்த அரும்பு மீசை... குறும்புப் பார்வை... கேலிப் பேச்சு எல்லாம் நினைத்த மாத்திரத்தில் நினைவில் விரிந்து நின்றன. தலையணையை நகர்த்தி, அந்த டைரியை எடுத்தாள். கழுத்தை நிறைத்த பூமாலையுடன் முகத்தை



நிறைத்த மகிழ்ச்சியுடன் தெரிந்த அந்தத் தம்பதியரை அவள் தன் கண்ணாடியைத் துடைத்துப் போட்டுக் கொண்டு உற்றுப் பார்த்தாள்.

கண்கள் ஈரமாகிப் போயின.

மோகனமாகச் சிரித்த அரவிந்தனைப் பார்த்தாள். நெஞ்சை என்னவோ அமுக்கியது. 'அரவிந்த்... உங்க குழந்தை... என்னைத் தனியா விட்டுட்டுப் படிக்க வெளிநாட்டுக்குப் போயிருக்கான்...அவன் இப்போ எப்படி வளர்ந்திருக்கான் தெரியுமா?' தன்னுள்ளே பேசிக் கொண்டு... விம்மியபடி... கட்டிலின்மீது உட்கார்ந்து விட்டாள்.

## 3

அன்று பள்ளிக்கூடத்துக்குத்தான் விடுமுறை நாள். கடைகளுக்கு விடுமுறைநாள் அல்ல.

மகன் ஹாஸ்டலில் தங்கிப் பரீட்சைக்குத் தோழர்களுடன் படிக்க நேரும் நாட்களில் தனிமையில் தவித்த துர்க்கா அந்திப்பொழுது அமுங்குமுன் தன் வீட்டைப் பூட்டிக் கொண்டு அவுட் ஹவுசில் குடியிருந்த அந்தத் தம்பதியரிடம் தன் வீட்டையும் ஒரு கண் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுக் கடைத்தெருவுக்குக் கிளம்பி விடுவாள்.

கூடை நிறையக் காய்கள் வாங்க அவளுக்குத் தேவையில்லை. வேண்டியதை விரைவாக வாங்கிப் போட்டுக் கொண்டு பொடி நடையாகச் சென்று போகும் வழியில் அமைந்திருந்த அந்தப் பூங்காவில் ஒரு கல் ஆசனத்தின் மேல் பிளாஸ்டிக் கூடையுடன் உட்கார்ந்து விடுவாள்.

தன் வாழ்க்கை பாலை நிலமாகிவிட்டது என்ற உள்உணர்வின் நெருடலோ என்னவோ, அவளது கண்களும் பசுமையான செடிகளை, ஓங்கி உயர்ந்து தலைவிரித்துக் கொண்டு நின்ற மரங்களை, பூத்துச் சொரிந்த மலர்க்கொடிகளைப் பார்த்து ரசிக்க விரும்பின.

அந்திப்பொழுது பூங்காவில் உள்ள குழல் விளக்குகள் பளிச்சிட்டு, அதன் நடுவே அமைக்கப்பட்டிருந்த செயற்கை ஊற்றிலிருந்து வண்ண வண்ணமாக நீர் கொப்புளித்துக் கொட்டும்வரை அங்கேயே உட்கார்ந்திருந்து விட்டு மெல்லத் திரும்புவது வழக்கம்.

மகனது பரீட்சை காலத்திலே ஏற்படும் தனிமை அல்ல, நீண்ட காலத் தனிமை இது என்று மனதில் திடீர் என்று ஒரு திகில் உலுக்கவே அவளுக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை.

அருகிலிருக்கும் பஸ் நிலையத்திற்குப் போய் பஸ்பிடித்து அண்ணாசாலைவரை ஒருநடை போய் வந்தால் என்ன?

பிரமை பிடித்தவள் போல நாலு சுவருக்குள்ளே அவள் ஏன் நாள் முழுவதும் உட்கார்ந்து இருக்க வேண்டும்?

சட்டென்று எழுந்து மறுபடி முகத்தைக் கழுவி முடியை வாரிக் கொண்டையிட்டுக் கொண்டாள்.

கை கழுவும் பீங்கான் மேல் தெரிந்த தன் முகத்தைப் பார்த்தபோது அவளுக்கே வியப்பு.

நடுவயதைத் தாண்டிவிட்ட அவள் முகத்திலே இன்னமும் இளமை மங்கவில்லை. அந்த அழகும் அதிகம் குறையவில்லை.



தலைமுடியில் மட்டும் இழையாக நரை ஓடிக்கொண்டிருந்தது.

குங்குமச் சிமிழைத் திறந்து விரலால் தொட்டுப் பொட்டு வைத்துக் கொள்ள முயன்றபோது அவளது விரல்கள் நடுங்கின.

அந்தப் பொட்டிற்கும் அவள் கழுத்திலே இன்னமும் தொங்கிய தாலிக்கும் சொந்தமானவரை ஒதுக்கிவிட்டவள் அவைகளை ஒதுக்கமாட்டாது... இன்னமும் சுமங்கலி வேடத்தில்தான் வளைய வந்து கொண்டிருந்தாள்.

துர்க்கா! நீ ஒரு போலி வேஷக்காரி. தெருவில் படியிறங்கினால் உன் முன் எதிர்படுகிறவர்களுக்கு நல்ல சகுனம் தர இந்த வேடம் இல்லையா?

பொட்டு இல்லாது பாழ் நெற்றியுடன் காணப் பட்டால் பழக்கங்களில் ஊறிப் போனவர்கள் மனதில்... ஒரு பகீர் உணர்வு ஏற்பட்டுவிடுமே... சனியன்! ஒரு விதவை வந்து தொலைத்துவிட்டாள். இன்னிக்குக் காரியம் உருப்பட்டால் போல்தான் என்று முன்பின் தெரியாதவர்கள்கூட வீணாகத் திட்டித் தொலைப்பார்கள் என்ற அச்சம்.

பொட்டும் பூவும் தாலியும் அணிந்து கொண்டு விட்டால் மட்டும் நீ ஒரு நல்ல சகுனமாகிவிட முடியுமா?

உண்மை தெரிந்தவர்கள் ''அந்த வாழாவெட்டி வெளியே கிளம்புகிறாள். அவள் போய்த் தொலையட்டும். பிறகு கிளம்புங்கள்'' என்று கணவன்மார்களை எச்சரிப் பார்களே!

உள்ளே சென்று பீரோவைத் திறந்து நடமாடும் இஸ்திரிக்காரரிடம் பெட்டிபோட்டு வாங்கி அடுக்கி

வைத்திருந்த நூல் சேலை ஒன்றை எடுத்து உடுத்திக் கொண்டாள்.

கைப்பையை எடுத்துத் திறந்து பார்த்தாள்.

கணவனைத் துறந்து தனது சம்பாத்தியத்தில் வாழத் தலைப்பட்ட பின்னர், அவள் சிக்கனத்தைச் சிரமப்பட்டு அனுசரிக்க வேண்டியிருந்தது. கடைத்தெருவில் கண்டதை வாங்க அவளிடம் என்றுமே கை நிறையக் காசு இருந்ததில்லை.

இது தேவைதானா என்று யோசித்து விட்டுத்தான் அவளால் எதையும் வாங்க இயலும். அவளது பொருளாதார நிலை அப்படிப்பட்டது.

புடவை மடிப்புகள் இடையே சேமித்து வைத்திருந்த ஐம்பது ரூபாய் நோட்டுக்களை எடுத்துத் தன் பையில் உள்ளே இருந்த சிறு தடுப்புக்குள் பத்திரமாக வைத்து ஸிப்பை இழுத்து மூடினாள்.

அதற்குள் கிடந்த சிறு மணிபர்சில் பஸ் சவாரிக்குத் தேவைப்பட்ட சில்லறையை எண்ணி வைத்துக் கொண்டாள். வீட்டை இருமுறை சுற்றிப் பார்த்து ஜன்னல்களை மூடிவிட்டு, காஸ் அடுப்பை நன்றாகத் திருகி உள்ளதா என்று சரிபார்த்துவிட்டு, பின் கதவை உள்ளே தாழிட்டுப் பூட்டி முன் கதவு காட்ரெஜ் பூட்டை இழுத்து மூடிக் கொண்டு, சாவிக்கொத்தை இடையில் சொருகியபடி காலில் செருப்பும், கையில் குடையும், தோளில் பையுமாக வெய்யில் வேளையில் கிளம்பினாள்.

கோழித் தூக்கம் போட்டுக் கொண்டிருந்த அவுட் ஹவுஸ் பெரியவர் விழித்துக் கொண்டு வெளியே வந்தார்.



அவர் வாயைத் திறக்கும்முன் அவள் சொன்னாள், அவசரமாக அண்ணா சாலைவரை ஒரு புத்தகம் வாங்கப் போக வேண்டியிருக்கு. வீட்டைக் கொஞ்சம் பார்த்துக் கொங்க.'' மேலே அதிகம் தெரிவிக்க விரும்பாது வேகமாக முன் தோட்டத்தைத் தாண்டி நடந்தாள்.

பஸ் நிலையத்தில் அவள் வெகுநேரம் காத்திருக்கத் தேவை ஏற்படவில்லை. கூட்டமும் அதிகமிருக்கவில்லை.

இறங்கவேண்டிய நிறுத்தத்திலே இறங்கினாள். குடையை விரித்துப் பிடித்துக்கொண்டு அந்த ஷாப்பிங் செண்டருக்குள் நடப்பதற்குள் அவளுக்கு வியர்த்துக் கொட்டிவிட்டது. புடவைத் தலைப்பால் கழுத்தையும் முகத்தையும் துடைத்துக் கொண்டு படிகளில் மெல்ல ஏறி, ஒரு பக்கம் வைக்கப்பட்டிருந்த பீங்கான் கண்ணாடி பாத்திரக் கடைக்குள் நுழைந்தாள்.

அவள் வழக்கமாகச் சாப்பிடும் பீங்கான் மக் சில தினங்களுக்கு முன்னர்தான் உடைந்து போய்விட்டது. அதற்குப் பதிலாக புதிதாக ஒன்று வாங்க அவளுக்கு நேரம் இருக்கவில்லை.

பஸ்ஸுக்குச் செலவழித்துக் கொண்டு வந்திருக்கும் போது அந்தக் காரியத்தை முடித்துவிட வேண்டும் என்ற ஆதங்கத்திலே அலமாரியில் பார்வைக்கு வைக்கப் பட்டிருந்த பல பீங்கான் 'மக்கு' களைக் கையில் எடுத்துப் பார்வையிட்ட வண்ணம் நின்றாள். ''அது பிடிச்சிருக்கா கட்டித் தரவா?'' விற்பனையாளரின் குரல் பின்னிருந்து ஒலித்ததும் சட்டென்று அவள் தன் தேர்வை முடித்துக் கொண்டாள்.

நான்கு ரூபாய்க்கு ஒரு பீங்கான் கோப்பையை வாங்கி கடைக்காரர் தந்த சில்லறையையும் காகிதத்தில்

சுருட்டித் தந்த பொருளையும் தன் கைப்பையில் போட்டுக் கொண்டு மெல்ல ஷாப்பிங் சென்டர் வராந்தாவின் நிழலிலேயே நின்றபடி ஒவ்வொரு கடையாக வேடிக்கை பார்த்துக் கொண்டு வந்தாள்.

நேரம் நத்தையாக நகர்ந்தது. தாகம் நாக்கை வாட்டியது. பகல் உணவை அவள் சாப்பிடாது கிளம்பி விட்டிருந்தாள். ஆனால் வயிற்றுக்கும் உள்ளத்து உணர்வுகளுக்கும் நீண்ட நேரம் சம்பந்தம் இருப்பதில்லை. மகத்தான துயரம் ஏற்பட்ட போதிலும் ஒருவேளைதான் சோறு இல்லாது வயிறு சுருட்டிக் கொள்ளும். அடுத்த வேளையின்போது யானைப் பசியாகக் காதை அடைத்துக் கொண்டு பசி குடலை முறுக்கும். இது இயற்கையின் நீதி.

பிள்ளையும் பிரிந்துவிட்டானே என்ற துக்கத்தில் அவளுக்கு அப்போது பசியிருக்கவில்லை.

ஒருமுறை அந்த ஷாப்பிங் சென்டரில் உலாவ நேர்ந்ததும் பசிக்கத் தொடங்கிவிட்டது.

எதிர்ப் பக்கத்திலிருந்த கடையிலிருந்து மசாலாவின் வாசனை மூக்கில் மோதியதும் அவளது பசி அதிகமாகியது.

மெல்லப் படி இறங்கி எதிர்ப்பக்கம் வந்தாள். வெளிச்சத்திலிருந்து உள்ளே நுழைந்தபோது கண்களுக்கு எதுவுமே தெரியாது உணவுக் கடையின் உட்புறம் இருளில் மூழ்கிக் கிடந்தது போன்று பிரமை. மெல்ல நிதானமாக நடந்து ஒரு மேஜையைப் பிடித்துக்கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

''ஹலோ! துர்க்கா! நீயா, எப்படி இளைச்சுப் போயிட்டே'' - மிகவும் பழக்கமான அந்தக் குரலைக்



கேட்டு அதிர்ந்துபோய் அவள் கண்களைக் கொட்டிக் கொண்டு எதிரே முதலில் மங்கலாகப் பின்னர் பளிச்சென்று தெரிந்தவளின் முகத்தை வியப்புடன் பார்த்தாள்.

அவளது பள்ளித் தோழி, கல்லூரித் தோழியான சுகுணா. அவளைப்போல ஏதோ சாப்பிட அங்கே வந்திருந்தாள்.

''பார்த்து எத்தனை நாளாச்சு. நீ எப்படி இருக்கே?'' படபடவென்று பேசிய சுகுணா கைகளை நீட்டி அவள் கரங்களை அன்போடு பற்றிக் கொண்டாள்.

அவள் பிறந்த வீடு, புகுந்த வீடு இரண்டுமே பெரிய இடங்கள். பெரிய தொழிலதிபர் மகள். பெரியதொரு தொழில் நிர்வாகியின் மனைவி. பள்ளிக்கூட நாட்களிலேயே பள்ளி விழாக்களின்போது கைகளில் தங்க வளைகள் குலுங்க, கழுத்தில் வைர அட்டிகை மின்ன வீட்டிலிருக்கும் அத்தனை நகைகளையும் மேலே சுமந்து கொண்டு மிதமிஞ்சிய ஒப்பனையில் வருவது வழக்கம்.

திருமணமாகி மேல் மட்டத்து வாசியாக வசிக்கும் அவள் இப்பொழுதும் மிதமிஞ்சிய ஒப்பனையில்தான் காணப்பட்டாள். நரை தெரியாது தலைக்கு டை அடித்துக் கொண்டு சின்னப் பெண்ணைப் போலச் சிங்காரமாக அமெரிக்கன் ஜார்ஜெட் சேலை உடுத்திக் கொண்டு முகத்திலே பவுடரும் உதட்டிலே சாயமுமாக வயதை ஒப்பனைக்குள் திணிக்க முயன்றிருந்தாள்.

''என் மருமகனும் மகளும் அமெரிக்காவிலிருந்து வந்திருக்காங்க. இங்கே நீங்க வேண்டியது வாங்கிக் கொண்டு இருங்கோ. நாங்க டவுன்வரை போயிட்டு வரோம்னு என்னை இங்கே தள்ளிட்டு அதுகள் காரை

எடுத்துக்கிட்டுப் போயிட்டாங்க. மனசுக்குத் தோணிய தெல்லாம் வாங்கினேன். இதோ பார்'' என்று சிரித்தபடி தன் காலடியில் வைத்துக் கொண்டிருந்த சில பொட்டலங் களை அவளுக்குக் காட்டிச் சிரித்தாள்.

''ஆமாம் உன் மகன் அவன் எப்படி இருக்கான்? எனக்கு முன்னமே சில மாதங்களுக்கு முன்தானே நீ தாயானே? இல்லையா?''

''என் மகன் மேல் படிப்புக்கு இங்கிலாந்து போயிருக்கான்'' - பெருமையோடு தான் விட்டுக் கொடுக் காது சொல்லிக் கொண்டாள் துர்க்கா. ஆனாலும் சட் டென்று துன்பம் தொண்டையை அடைப்பதை உணர்ந் தாள்.

''சந்தோஷம். இத்தனை நாள் கழிச்சு சந்திச்சிருக் கோம். நான் நடுவிலே இவரோடு அடிக்கடி வெளி நாட்டுக்குப் போய் வருவது வழக்கம். கம்பெனி காரிய மாகத்தான் என் கணவர் போவார். நான் அட்டைபோல ஒட்டிக் கொண்டு கிளம்பிடற பழக்கம். அதனால்தான் ஒரே ஊரிலிருந்தும் நாம் சந்திக்க முடியாம அப்படி விலகிப் போச்சு. என்ன சாப்பிடற சொல்லு. எனக்குப் பூரி மசாலா கொண்டுவரச் சொன்னேன். உனக்கு?'' என்று கேட்டாள் சுகுணா.

''எனக்கும் அதே போதும்'' என்று மெல்லிய குரலில் முணுமுணுத்தாள்.

''கூச்சப்படாதே. இன்னிக்கு இந்த டிபன் செலவு என்னுடையது. அதனாலே வேண்டியதை வாங்கிச் சாப்பிடு. கடைசியாகக் காப்பியோட ஐஸ்க்ரீமும் சாப்பிடலாம். ஓ.கே.'' என்று சிரித்தாள் சுகுணா. துர்க்காவுக்குக் கூட சிரிக்க முடியவில்லை.



சில தினங்களுக்கு முன்னர் மகன் பரத் அருகிலிருந்த ஒரு ஐஸ்க்ரீம் கடையிலிருந்து ஒரு சிறுபெட்டி ஐஸ்க்ரீமை வாங்கிக் கொண்டு வந்து பிரிஜில் வைத்தான்.

''என்ன விலை கொடுத்தே...''

''இருபது ரூபாய். ஏன் கேட்கறீங்க?''

''இருபது ரூபாய்க்கு ஐஸ்க்ரீம் வாங்கித் திங்க நமக்கு என்ன யோக்கியதை இருக்கு. ஹாஸ்டலுக்குப் போய் தங்கி மத்த பசங்களைப் பார்த்து நீ அடாவடி செலவு களையெல்லாம் கத்துக்கொண்டு வந்திருக்கே.''

''அம்மா இது என் பணம். என் உபகாரச் சம்பளத்தி லிருந்து சேர்த்து வச்சிருந்த பணத்தில் ஊருக்குப் போகப் போகிறோமே, இன்னிக்கு அம்மாவின் பிறந்த நாள், அவங்களுக்கு ஐஸ்க்ரீம் வாங்கித் தந்து அவங்களை கொஞ்சம் சந்தோஷப்படுத்துவோம் என்கிற நல்ல எண்ணத்தில்தான் வாங்கிட்டு வந்தேன்.''

ஓங்கி கன்னத்தில் அறைந்துவிட்டது போன்ற வேதனையில் துடித்துப் போனாள். குழந்தை ஆசையுடன் செய்த காரியத்தை அவள் தவறாகப் புரிந்து கொண்டு அப்படி படபடவென்று பேசியது எத்தனை தவறு!

அதற்குப் பின்னர் அவள் மகனுடன் வேறு என் னென்னவோ கதைகளைச் சிரித்துக் கொண்டு பேசினாள்.

ஆனால் முகம் சிறுத்துப் போன பரத் அவளுடன் சேர்ந்து சிரித்து அவள் சொன்ன கதைகளை ரசிக்கவில்லை.

அந்தச் சிறிய தவறுக்காக அவள் அன்று இரவு முழுவதும் தூங்கவில்லை. ஆனால் வாழ்க்கையில் அவள் செய்துவிட்ட பெரிய தவறுக்கு என்னவிதமான பிராயச்சித்

தம் செய்து சமாளிக்கப் போகிறாள்? டிபன் வந்ததும் இருவரும் சாப்பிடத் தொடங்கினார்கள்.

அப்பொழுது சுகுணா சொன்ன இன்னொரு தகவல் ஈட்டியாக அவள் மனதைக் குத்தியது உண்மை.

''என் மகளும், மருமகனும் அமெரிக்காவிலேயே தான் இருக்காங்க. கிரீன் கார்ட் ஹோல்டர்கள், நமக்கென்ன வெளியூர் சலித்துப் போனதும் ஒருநாள் திரும்ப பிறந்த நாட்டுக்கு வந்திடப்போறாங்கன்னு நான் அவங்களுக்கு எந்தவித புத்திமதியும் சொல்வதில்லை. எதுக்குச் சொல்ல வந்தேன்னா... மகளும், மருமகனும் சில சமயங்களில் தங்கள் சிநேகிதர்களைப் பார்க்க நியூயார்க்குக்கு ஒரு ஹாலிடே டூர் போனாங்களாம். அப்படிப் போன சமயத்திலே, ஒரு இந்தியர் வீட்டு விருந்தில் கலந்து கொண்டபோது, டாக்டர் அரவிந்தன் என்பவரை சந்தித்தாங்களாம். கூட ஒரு இளம்பெண். அவர் மகளாம். அவளையும் சந்தித்தாங்களாம்.

''இப்படிப் பேச்சுவாக்கிலே அந்த டாக்டர் யார்னு என் மகள் தெரிஞ்சு கொண்டு விட்டாளாம்.''

துர்க்காவின் நெஞ்சு வேகமாகத் துடித்தது. ''டாக்டர் அரவிந்தன் அங்கே எப்படி இருக்கிறாராம்? அவர் மனைவி கூட வரவில்லையா?''

''அந்தக் கூட்டத்திலே அதையெல்லாம் தூண்டித் துருவிக் கேட்க முடியவில்லையாம். இது நடந்து ஆறு வருஷத்துக்கு மேலாச்சு. நான் மூணு வருஷத்துக்கு முன் போய் அவ வீட்டிலே இருந்தப்போ சொன்னது உன்னைப் பார்த்ததும் நினைப்பு வந்தது.''

''டாக்டர் அரவிந்தன் அக்கா பாஸ்ட்டனில் வேலை பார்த்துக் கொண்டு எக்கச்சக்கமாக சம்பாதிப்பதாகக்



கேள்விப்பட்டாளாம். இவர்கள் இருப்பது ஒரு மூலை. அவர் இருப்பது வேறு ஒரு மூலை. அப்படி அடிக்கடி சந்திக்கும் தொலைவில் இல்லை. மேலும் அவர் நமது தலைமுறையைச் சேர்ந்தவர் இல்லையா? கேள்விப்பட்டதை மட்டும் சொன்னாள்.

''அம்மா, இந்த டாக்டர் அரவிந்தனுக்கு முதல் மனைவி தானே உங்க சிநேகிதி துர்க்கா அம்மான்னு என் மகள் கேட்டபோது எனக்கு உண்மையில் மனம் ரொம்ப வேதனைப்பட்டது. நீ மட்டும் ஆத்திரப்படாமல் பொறுமையா இருந்திருந்தால்... இப்போ நீ அமெரிக்காவில் உன் கணவருடன் அமோகமாக வாழ்ந்துகிட்டு இருப்பே இல்லையா?''

துர்க்காவின் நெஞ்சிலே நெருப்பாக என்னவோ எரிந்தது. பூரியைப் பிட்டு மசாலாவுடன் வாயில் போட்டுக் கொண்டவள் விழுங்க முடியாது தவித்தாள்.

''எல்லாம் என் தோழியான உனக்குத் தெரியும், தெரிஞ்ச பின்னும் இப்படி ஒரு கேள்வியை நீ கேட்கிறது அதிசயமா இருக்கு!''

''ரொம்ப நாளா உன்னைக் கேட்கணும்னு இருந்த கேள்வி அது. அரவிந்தன் ஏதோ தவறு செய்துட்டார். அதை உன்னிடம் ஒத்துக்கொண்டுவிட்டார். அதுக்காக நீ அவரையும் தண்டித்து உன்னையும் தண்டித்துக் கொண்டது தான் தப்பு.''

''சாதாரணமான தவறா?'' ஒரு வாய் தண்ணீரை விழுங்கிக் கொண்டு கண்களில் புரள பயமுறுத்திய கண்ணீரைச் சமாளித்துக் கொண்டாள் துர்க்கா.

''ஊர் உலகத்திலே ஆம்பிளைகள் சிலர் செய்யாத தப்பையா அரவிந்தன் புதுசா செய்துட்டார்?''

''சுகுணா நீ என்ன திடீர்னு அவருக்கு வக்காலத்து வாங்கிட்டு பேசறே! என் இதயம் எப்படி சுக்கல்-துகளா உடைஞ்சு போச்சுன்னு உனக்குத் தெரியாதா?''

''போடி பைத்தியக்காரி. இன்னிக்கு உன்கிட்டே ஒரு ரகசியம் சொல்றேன் கேட்டுக்கோ, நீயும் அரவிந்தனும் காதல் திருமணம் செய்துக்கிட்டவங்க. என் விஷயம் அப்படியில்லே. பெரியவங்க பார்த்துச் செய்து வச்ச கல்யாணம் என்னுடையது. அதை 'உடைச்சுக்கிட்டு நானும் புரட்சி செய்து எத்தனையோ முறை வெளிவந்து சுயேச்சையா என் பிறந்த வீட்டுச் சொத்தை வச்சுக்கிட்டு நல்லாவே வாழ்ந்திருக்க முடியும்.

''என் கணவர்கூட எத்தனையோ தவறுகள் செய்திருக்கார். அதற்காக நான் ஆங்காரப்பட்டிருக்கேன், அழுதிருக்கேன், அவரோட சண்டை போட்டுக் கொண்டு பிறந்தகத்துக்குப் போய் ஒரு மாசத்துக்கு மேல் தங்கி விட்டிருக்கேன். ஆனால் நிரந்தரமாக அவரைப் பிரிய நான் ஒருநாளும் முயன்றதில்லை. முடிஞ்சவரை அவரை திருத்தித்தான் பார்த்தேன். ஏன் தெரியுமா?''

''அதையும் சொல்லு கேட்கிறேன்.''

''ஆணும் பெண்ணும் சமம். அது இதுன்னு மேடையிலே நிறையப் பேசுவாங்க. அது மாதிரி சம உரிமை இன்னும் பெண்ணுக்கு நம் நாட்டில் கிடைக்கலை. ஏன் மேல்நாட்டில்கூட பெண்கள் சில காரியங்களை ஆண்கள்போலச் செய்ய முயன்றால் கட்டுப்பாடான சமூகத்தின் முன் அவர்கள் தலை குனிய நேர்கிறது.

''உலகத்திலே எங்கே வசித்த போதிலும் எந்தப் பண்பாட்டில் வாழ்ந்த போதிலும் பெண் என்பவளின் சில உணர்வுகள் ஒரே மாதிரியானதுதான்.''



''சமூகத்திலே ஒரு பாதுகாப்பு வேணும் என்று நம் அடிமனதிலே ஆழமாக உருவாகிவிட்டிருக்கும் அந்த உணர்ச்சியை நாம் மெலெழுந்த வாரியாக ஒதுக்க முடியாது இல்லையா?''

''சொல்லு கேட்டுக் கொண்டுதானே இருக்கேன்.''

''என் கணவரிடம் குடியிலிருந்து, சகல கெட்ட குணங்களும் இருந்தன. இப்போ மனுஷனுக்கு வயசாயிடுச்சு. கோயில், குளம், பக்தி, பஜனைன்னு ரொம்பவே மாறிட்டார். ஆனால் சின்ன வயசில் ரொம்பவே ஆட்டம் போட்டார். எத்தனையோ தவறுகளை நான் கண்டும் காணாததுபோல இருந்தேன். ஏன் தெரியுமா? விவாகரத்துச் செய்து கொண்டு விலகிவிட முடியும். குழந்தைகள் கதி? அவர்கள் வருங்காலம் அப்படீன்னு தாய்மை உணர்வில் எல்லாக் கஷ்டங் களையும் நான் தாங்கிக் கொண்டேன். புரட்சின்னு பெண்கள் பேசலாம். ஆனால் அந்தப் புரட்சிகளைச் செய்தபின் சமூகத்திலே அவங்களுக்குக் கிடைக்கிற பல இடைஞ்சல்களை நினைத்தால்...''

''உன்னைப்போல கோழையா அரவிந்தன் செய்த தவறை மன்னித்து அவரது மனைவியா வாழாதது என் தப்புன்னு சொல்ல வர்றே இல்லையா'' - காப்பியை வேகமாகப் பருகிவிட்டு சற்றுக் கோபமாகக் கேட்டாள்.

''நீ உன்னைப்பத்தியே நினைச்சுக் கொண்டிருந்த தால்தான்... அரவிந்தன் செய்த ஒரு தவறை மன்னிக்காம பிரிஞ்சிட்டே. உன் பிள்ளையைப் பத்தி நினைச்சிருந்தா நடந்து போனதை ஒரு கனவுபோல நினைச்சுக்கிட்டு சந்தோஷமாக அவரோடு அமோகமா வாழ்ந்து கிட்டிருப்பே...''

''என் பிள்ளையை நானே சிரமப்பட்டுப் படிக்க வச்சிட்டேன். என் கடமைகளை நல்லாவே செய்திட்டேன்.''

''நீ என்ன சொன்னாலும் என்னால் ஏற்க முடியாது துர்க்கா. ஒரு ஆண் குழந்தைக்கு அவன் வளரும்போது அப்பாவின் துணை ரொம்பத் தேவை. அவன் கல்வி பற்றி அவனுக்குச் சில அறிவுரைகள் எல்லாம் கொடுக்க அப்பாவின் தகுதியை தாய் ஒருக்காலும் பெறமுடியாது. விதவையாகிவிட்டால் என்ன செய்வதுன்னு கேட்பே. அப்போ வேறே வழி இல்லை... தாயாகவும், தந்தையாகவும் இருந்து ஓரளவு உதவ முடியும். தாயும் ஒரு மகனுக்குத் தேவை, தந்தையும் தேவை. சொல்லப் போனால் ஒரு ஆரோக்கியமான குடும்பச் சூழ்நிலை ஒரு வளரும் குழந்தைக்கு மிகவும் முக்கியம்.

''செல்லம் கொடுத்து கொஞ்சி உன் மகன் கையில் சாக்லெட் பொட்டலமோ, மிட்டாயோ வாங்கிக் கொடுத்துவிட்டால் போதாது.

''பசிக்கும்போது அவனுக்குப் புடிச்ச சாப்பாட்டை உன் கையால் சமைத்துப் போட்டுவிட்டால் மட்டும் போதுமா?

''அவன் இளைஞனாக வளரும்போது... கூட ஒரு தோழன் போல முதல் படியில் அவனுக்கு உதவுகிற துணை... ஒரு தந்தைதான். அதை நீ மறக்க முடியாது. ஒரு பள்ளிக்கூட ஆசிரியை, உனக்கு உளவியல் நிறைய தெரிஞ்சிருக்கும்.

''என் மகனும் என் கணவரும் சில சமயம் கிரிக்கெட் மாட்ச் பார்க்க ஜோடியாகக் கிளம்புவாங்க. அவர்கள் பேசிக் கொள்வதையும், சிரிப்பதையும் பார்த்தால் நண்பர்கள் போலத் தெரியுமே ஒழிய அப்பா பிள்ளை



என்ற உறவினர்களாகத் தெரியாது. அதுக்குத்தான் பெரியவங்க சொல்லியிருக்காங்க. தாயோடு ருசியான உணவு போய்விடும். தந்தையோடு கல்வி போய்விடும்.''

துர்க்காவின் கண்ணில் கோடிட்ட கண்ணீரைக் கண்டு, திடுக்கிட்டுப் போனாள்.

''மன்னிச்சுக்கோ துர்க்கா. உன்னைப் பார்த்ததும் தோழி என்கிற வேதனையைத் தாங்க முடியாம என்னென்னவோ பேசிட்டேன். விதின்னு ஒண்ணு இருக்கு. அதுக்கு முன்னால் நாம் வெறும் துரும்பு... ஸாரி துர்க்கா... கண்ணைத் துடைச்சுக்கோ. ஐஸ்க்ரீம் சாப்பிடு. வேறு ஏதாவது கதை பேசலாம். வீட்டிலே வேலையாள் யாராவது இருக்காங்களா? காலம் கெட்டுக்கிடக்கு... பார்த்து வேலைக்கு ஆளை வச்சுக்கோ. தனியா இருப்பது எப்பொழுதும் ஒரு தொல்லையான சங்கதி. இனிமே அடிக்கடி அந்தப் பக்கம் வந்தா வருவேன்'' என்று கூறிவிட்டு எழுந்தாள். கை கழுவிக் கொண்டு பில்லுக்கான பணத்தைக் கொடுத்துவிட்டு இருவரும் வெளியே வந்தபோது சுகுணா வீட்டுக் கார் மகளையும் மருமகனையும் சுமந்துகொண்டு வெளியே காத்து நின்று கொண்டிருந்தது.

''இவங்கதான் என் தோழி துர்க்கா அம்மா. பள்ளி ஆசிரியர் வேலை பார்க்கிறாங்க'' - அறிமுகப்படுத்தினாள் மருமகனுக்குத் தன் தோழியை சுகுணா.

''இவங்களை நான் என் கல்யாணத்தின்போது பார்த்தது'' என்று சுகுணாவின் மகள் கூறியதைக் கேட்டு முகம் இறுகிப் போனாள் துர்க்கா.

நியூயார்க்கில் அவளது கணவனை சந்தித்து இருக்கிறாள் இந்தப் பெண். மற்ற விவகாரங்களைக்

கொஞ்சம் வம்பு பேசியிருக்கிறாள். என்ன செய்வது நேற்று முளைத்த முளைகள் எல்லாம் அவளைப் பற்றி வம்பு பேசி அலசும் அளவு அவள் ஒரு விவகாரத்தை நிரந்தரமாக அமைத்துவிட்டாளே.

''இந்த வெய்யிலில் நீங்க ஏன் பஸ்ஸில் போகணும் நாங்க கொண்டு விட்டுடறோம்'' - வற்புறுத்தி அவளைத் தங்களுடன் காரில் ஏற்றிக் கொண்டனர்.

''நாழியாச்சு இன்னொரு நாள் பார்க்கிறேன்'' என்று கேட்டருகே அவளை இறக்கிவிட்டு சுகுணா விடை பெற்றுக் கொண்டு விட்டாள்.

ஆனால் பூட்டைத் திறந்து உள்ளே சென்ற துர்க்காவின் நெஞ்சினின்று, அரவிந்தனைப் பற்றிய சிந்தனைகள் விடைபெற்றுக் கொள்ள மறுத்தன.

## 4

''அமைதியைத் தேடிக்கொண்டு வெளியே ஏன் செல்ல வேண்டும். அதை மனதிற்குள் அல்லவா தேட வேண்டும்'' என்று விநாயகர் கோவிலில் நடந்த உபன்யாசமொன்றில் அவள் கேட்ட நினைவு. அது எத்தனை பெரிய உண்மை.

மகனது பிரிவால் பரபரத்த மனதை அடக்கிச் சமாதானம் அடைய அவள் கடைத் தெருவுக்குப் புறப்பட்டாள்.

அங்கே தோழி சுகுணாவைச் சந்தித்ததின் பயன்? மனதிலிருந்த கொஞ்ச அமைதியும் குறைந்து அவள் உணர்ச்சி கொந்தளிக்க உடல் சோர மனம் தொய்ய வீடு வந்து சேர்ந்திருந்தாள்.



ஆமாம்! அவரது இரண்டாவது மனைவி. அந்தப் பாவி, நயவஞ்சகி, துரோகி மாலதி! அவளைப்பற்றி ஏதும் சொல்லவில்லையே! அவளைப்பற்றி தெரிந்து கொண்டு ஆவது ஒன்றுமில்லை. சிநேகிதி என்று மிகவும் அன்போடு பழகி, கூடவே இருந்து அவளது வாழ்க்கையில் மண்ணை அள்ளிப்போட்ட பாதகியாயிற்றே.

கணவன் கொள்ளையாகக் குவிக்கும் பணத்தில் வெளிநாட்டின் சுகங்கள் அனைத்தையும் அனுபவித்துக் கொண்டு சுகுணாவைப்போல வைரமும் தங்கமும் மேனியில் சுடர்விட கணவனுடன் பலமுறை உலகம் சுற்றி வந்து அலுத்துப்போய் மகளை துணையாக அவருடன் அனுப்பி வைத்திருக்கிறாள் போலிருக்கு.

அரவிந்தனை அவளிடமிருந்து எப்படிப் பறித்துக் கொண்டாள் என்பது தெரியும் அவளுக்கு.

தான் திருடியதுபோல வேறு ஒருத்தி அவனைத் திருடிக் கொண்டுவிட்டால் என்ற பயம் உள்ளூர இருக்கும்.

மாலதி பெற்ற மகள் எல்லா வசதிகளையும் பெற்றுக் கொண்டு தந்தை, தாய் அரவணைப்பில் வளர, அவள் பெற்ற மகன் அனாதைபோல எதையோ பறிகொடுத்தவன் போன்று வாழ்க்கையிலே, அவனுக்கு மற்ற இளைஞர்கள் போல விதவிதமாக உடுத்தவும், வேண்டியபடி வாழவும் வசதி இல்லாது... கண்கள் கலங்கிப் போனாள்.

ஒரு சமயம் அவள் சுகுணா சொன்னபடி பொறுமையாக இருந்து அந்தத் தவறை அசட்டை செய்திருந்தால் அவளல்லவா இப்போது அரவிந்தனுடன், மகன் பாத்துடன் அமெரிக்காவில் சுக போகத்திலே திளைத்துக் கொண்டிருப்பாள்.

அவளை வாழவிடாது அவள் தாயே சதி செய்து விட்டாளே!

தாயை நொந்து கொண்டு என்ன பயன்? தன் வாழ்க்கையைப்பற்றித் தானே முடிவெடுக்க ஒரு படித்த பெண்ணுக்கு... பல குழந்தைகளுக்குப் புத்திமதிகளைப் போதிக்கும் தகுதியில் இருந்த ஒரு பள்ளி ஆசிரியைக்குத் தெரியவில்லை என்றால் அது அவளுடைய தவறுதான்.

குளியலறைக்குள் புகுந்து குழாயைத் திருப்பி சில்லென்று கொட்டிய நீரில் கடைத் தெருவில் அலைந்த களைப்புப் போகக் குளித்து மாற்றுடை அணிந்து கொண்டாள். வெய்யிலினால் உடலில் ஏற்பட்டிருந்த தகிப்புத் தணிந்தது.

ஆனால் சுகுணா சொன்னதைக் கேட்டுப் பொறாமையில் வெந்த மனதை அவளால் ஏதும் செய்ய இயலவில்லை.

சதா பொங்கிப் புரண்டு எரிமலையாக எரிந்து கொண்டிருந்த அவளது உணர்வுகளின் தாபம், அவளது ஆவி அடங்கும் போதுதான் கூடவே அடங்கிப் போகும் போலும்.

அமைதி... அவளது வாழ்க்கையில் இனி அதற்கு இடமே இல்லை.

பூஜையறை விளக்கை ஏற்றித் தானே மேற்கொண்டிருந்த பழக்கத்தினைக் கவனமாகத் தன்னுள் ஏதோ ஒரு பிரார்த்தனையை முணுமுணுத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

பொழுது அமுங்கி இருள் லேசாகப் பரவத் தொடங்கி விட்டிருந்தது. மறுநாளும் அவளுக்கு விடுமுறைதான்.



பரத் வீட்டில் இல்லாததால் இரவு சமையல் என்று அவள் எதுவும் செய்யத் தேவையிருக்கவில்லை. சமையலறை மேடைமீது ஒரு பக்கம் ஸ்டீல் டப்பாவுக்குள் காலையிலேயே தயாரித்து பத்திரப்படுத்தியிருந்த சுக்கா ரொட்டிகளில் இரண்டைத் தட்டில் போட்டுக்கொண்டு அதன்மீது கொஞ்சம் சாம்பாரை வார்த்து எடுத்துக் கொண்டு வந்து சாப்பிட உட்கார்ந்தாள்.

ஆமாம் பரத் இந்நேரம் பம்பாயில் என்ன பண்ணிக் கொண்டிருப்பான்?

இனி... அப்படித்தான் அவ்வப்போது அவனைப் பற்றி எண்ணி எண்ணி ஏக்கத்தில் உருகப் போகிறாள்...

பெருமூச்சு விட்டபடி சாப்பாட்டை முடித்துக் கொண்டு கதவுகளைச் சாத்திவிட்டு, நடையில் விடி விளக்கை எரிய விட்டுவிட்டுப் படுத்துக் கொண்டாள். உறங்க முடியாது சிந்தனைகள் அரவிந்தனைச் சுற்றி வளைய வந்து கொண்டிருந்தன.

முதல் முதலாக அவள் அவனைச் சந்திக்க நேர்ந்ததை நினைத்தபொழுது தலையணையினின்று நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

அவள் வேலைக்கமர்ந்த அந்தப் பெண்கள் பள்ளியில் ஆசிரியையாகப் பணிபுரிந்து கொண்டிருந்த சமயம் கூட வேலை பார்த்து வந்த நித்யா அது சமயம் அவளுக்கு நெருங்கிய தோழியாக இருந்தாள்.

ஒருநாள் வேலையின் நடுவே அவள் வயிற்றுவலி தாங்க முடியாது மயங்கிவிழுந்துவிட்டாள். பள்ளிக்கூடமே அமர்க்களப்பட்டது. அவசரமாக ஒரு நர்ஸிங் ஹோமில் அனுமதிக்கப்பட்டாள்.

அக்குயூட் அப்பெண்டிஸைட்டிஸ் என்று வைத்தியரால் கண்டுபிடிக்கப்பட்டு பின்னர் அறுவை சிகிச்சை செய்யப்பட்டது.

சில நாட்களுக்குப்பின் ஓய்வாக வீட்டிலிருக்க அனுப்பப்பட்டிருந்த தன் தோழியைப் போய் பார்த்துவரத்தான் அந்த ஞாயிற்றுக்கிழமை மாலை துர்க்கா புறப்பட்டிருந்தாள்.

கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவள் மேல் இடித்துத் தள்ளிக்கொண்டு அவசரமாக வெளியேறிய வாலிபன்மேல் அவளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்துவிட்டது.

''இடியட்! கண் தெரியலை. இல்லை வேணும்னு செய்கிற காரியமா?'' பளிச்சென்று கேட்டுவிட்டு அவனை எரிப்பவள் போலப் பார்த்தாள்.

''ஸாரி மேடம், மன்னிச்சுக்கோங்க. ரொம்ப அவசரமா போயிண்டு இருக்கேன்...'' கூறிப் புன்னகைத்தபடி தன் மோட்டார் சைக்கிளில் ஏறிக்கொண்டு விரைந்தான் அவன்.

பின்னர் உள்ளே வந்து தன் அறையில் படுத்துக் கிடந்த தோழி நித்யாவிடம் அந்தச் சங்கதியைச் சொன்ன போதுதான் அவளுக்கு உண்மை தெரிந்தது.

அவசரமாக வெளியே போனவன்தான் டாக்டர் அரவிந்தன் எனும் அறுவை சிகிச்சை நிபுணன்.

அபிராமி நர்சிங் ஹோமில் நித்யா அனுமதிக்கப்பட்ட போது அவன்தான் அவளுக்கு அறுவைச் சிகிச்சை செய்து உயிரைக் காப்பாற்றியவன். இப்போது அவள்



எப்படி இருக்கிறாள், அறுவை செய்தபோது ஏற்பட்ட காயம் நன்கு ஆறிவிட்டிருக்கிறதா என்று பார்த்துப் போக, ஒரு விசிட் செய்ய வந்தான். அவளைக் கவனித்து முடித்துவிட்டு அவன் கையைக் கழுவிக் கொள்வதற்குள் அபிராமி நர்சிங் ஹோமிலிருந்து ஒரு அவசர அழைப்பு. எமர்ஜென்சி கேஸ் என்று தொலைபேசியில் அதன் தலைவர் அழைக்கவே விழுந்தடித்துக் கொண்டு புறப்பட்டுப் போனான்.

தவறாக அவசரத்தில் அவள்மீது மோதிவிட்டிருக்கிறான்.

டாக்டர் அரவிந்தனுக்கு அந்த நர்சிங் ஹோமில் நல்ல மதிப்பு.

நித்யா தன் கண்ணாலேயே பார்த்து, கவனித்த சங்கதி, அவன் அனாவசியமாக அங்குள்ள பெண் மருத்துவர் மற்ற ஊழியர் யாரிடமும் சிரித்துக் கொண்டு வெட்டிப் பொழுதைப் போக்கியதில்லை.

துர்க்காவுக்கு மிகவும் அவமானமாக இருந்தது. சிநேகிதிக்கு சிகிச்சை செய்த வைத்தியரை, அவன் யாரோ வேலை வெட்டியில்லாத, விவஸ்தை இல்லாத இளைஞன், நித்யாவின் வீட்டிற்கு அவள் தந்தையைப் பார்க்க வந்த அலுவலக ஊழியர்களில் யாராவது இருக்கலாம் என்ற அசட்டை மனப்பான்மையில் மட்டமாகப் பேசித் திட்டிவிட்டாள். கட்டாயம் அவரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்.

மறுநாள் மாலை அவளைக் கவனிக்க அரவிந்தன் வரக்கூடும் என்று நித்யா கூறியதால் திங்கட்கிழமை வேலை முடிந்ததும் தன் வீட்டுக்குப் போகாது அவள்

நேரே நித்யா வீட்டுக்கு வந்தாள். வாயிலில் அந்த மோட்டார் சைக்கிளைக் கண்டதுமே அவள் மார்பு படபடத்தது.

உள்ளே நுழைந்தபோது, நித்யாவின் அறையினின்று வெளிப்பட்டான் அரவிந்தன். அவனை நிமிர்ந்து நேருக்கு நேர் பார்த்த அவளது கண்கள் சிரித்தன.

''டாக்டர் அரவிந்தன்!'' அவளையுமறியாது அவள் அழைத்துவிட்டாள்.

''எஸ்'' என்று அவன் அருகில் வந்தபோது பேச முடியாது ஏதோ ஒன்று தொண்டையைப் பிடித்துக் கொள்வதை உணர்ந்தாள்.

''என்ன வேணும்'' மறுபடியும் அந்தக் கண்களில் சிரிப்புடன் கேட்டான்.

காதும் மூக்கும் சிவந்து கழுத்திலே உஷ்ணம் படிவதை உணர்ந்தாள். நெஞ்சு படபடக்க சிரமப்பட்டு தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''நித்யாவுக்கு இப்போது எப்படி இருக்கு? பூரணகுணம் அடைஞ்சிட்டாளா? வேலைக்கு எப்போ திரும்பி வருவான்னு கேட்க விரும்பறேன்'' - துர்க்கா பேசவேண்டுமே என்று கேட்டாள்.

''உடம்பு விரைவில் குணமாகிக் கொண்டு வருகிறது. இந்தக் காலத்தில் நாங்கள் அறுவை சிகிச்சை செய்த போதிலும் சீக்கிரமே எழுந்து நடமாடவேண்டும் என்று உற்சாகப்படுத்துகிறோம். அப்பதான் உடம்பில் தெம்பு ஏற்படும். இன்னும் சில நாட்களில் அவங்க வேலைக்குச் சேர்ந்துவிடலாம். நோய்க்குத் தரப்படும் விடுப்பு நிறைய இருந்தால் அந்தச் சலுகையை



உபயோகித்துக் கொண்டு வீட்டில் இருக்கலாம். என்னைப் பொறுத்தவரை அவங்களுக்கு இப்போ உடம்பு குணமாகி அருது. கவலைப்படுவதற்கில்லை'' - லேசாகச் சிரித்தான்.

உதட்டுக்குப் பின் தெரிந்த அந்த வரிசைப் பற்கள், செதுக்கி வைத்தது போன்ற கூரிய மூக்கு, அலையாகச் சரிந்த கிராப்பு சிகை, கச்சிதமான தோற்றம், சுத்தமான ஆடைகள், எல்லாம் அவளுக்குப் பார்த்த மாத்திரத் திலேயே பிடித்துப் போயிற்று.

அவனுக்கும் அவளைப் பார்த்த மாத்திரத்திலேயே பிடித்துப் போயிற்று என்பதை அவன் கண்கள் கனிவாகச் சொல்லின.

''நேற்று உங்களைத் தள்ளிக்கொண்டு அவசரத்தில் வெளியேறியதற்காக மன்னிப்புக் கேட்கிறேன்.''

மறுபடியும் முகம் சிவந்து போனாள் அவள்.

''மன்னிப்புக் கேட்க வேண்டியவள் நான்'' - மேலே பேச வெட்கப்பட்டுக்கொண்டு கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

அப்படியாக ஏற்பட்ட சந்திப்பு, பின்னர் நித்தியா வின் பேரில் பொறுப்பைப் போட்டுவிட்டு இருவரும் தினம் அங்கே சந்திக்க, அந்தச் சந்திப்பு அழகான காதலாக, காதல் காவியமாக மலர, பின்னர்தான் அவளது பெற்றோர்களுக்கு விஷயம் தெரிந்தது.

''ஆமாம் ஏன் இத்தனை நாழி? பள்ளிக்கூடம் முடிஞ்சதும் நேரே வீட்டுக்கு வரவேண்டியதுதானே?'' அம்மா கோபத்துடன் குறுக்கு விசாரணை செய்தாள்.

என்ன பதில் சொல்வது என்று யோசிக்குமுன் அம்மா கேட்டுவிட்டாள்.

''யார் அவன்? உன்னைக் கடற்கரையில் பார்த்ததாகக் கோடி வீட்டு அம்மாள் சொன்னாங்க. கண்டவனோடு திரிய ஆரம்பிச்சிட்டியா? ஊர் சிரிக்கிறாப்பல ஏதாவது ஏடாகூடமா செஞ்சியோ...'' அம்மா மிரட்டினாள்.

''கடற்கரைக்கு நித்யா என்னை அழைச்சிட்டுப் போனா. மணலில் நடந்தால் உடலில் சீக்கிரம் வலுவரும் என்று டாக்டர் சொன்னாராம். துணைக்கு வரும்படி கூப்பிட்டாள். மறுக்க முடியவில்லை. அங்கே அவளுக்குச் சிகிச்சை செய்த டாக்டரைப் பார்த்தாள். பேசினாள். என்னை அறிமுகம் செய்து வச்சா. நானும் பேசினேன். இது ஒரு தப்பா? ஆம்பளைங்களையே பார்க்கக்கூடாது பேசக்கூடாதுன்னா நான் வேலைக்குப் போய் வருவது சாத்யப்படாதே! காலையில் நம் வீட்டு வாசலில் மாட்டைக் கட்டிப் பால் கறந்து கொடுக்கிறவரும் ஆண் தானே? பஸ் கண்டக்டர் ஆம்பிளை. ஏன்? எங்க பள்ளிக் கூடத்திலே மாதச் சம்பளம் பட்டுவாடா செய்கிறவரும் ஆம்பிள்ளை'' என்று படபடவென்று பேசி மகள் வெடித்த போது அம்மா ஞானம் மவுனமாகினாள். ஆனால் தினமும் மகளின் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினாள்.

தாயார் எச்சரிக்கையுடன் இருக்கிறாள் என்று தெரிந்ததும் மகள் அதற்குமேல் ஒருபடி எச்சரிக்கையாக நடக்கத் தொடங்கினாள்.

ஆனாலும் சில சங்கதிகளை மூடி மறைக்க முடியாது. அதுவும் காதல் சங்கதியை மறைப்பது கஷ்டம்! டாக்டர் அரவிந்தன் தன்னை நேசிக்கிறான் என்பதை அறிந்ததும் அந்தப் போதையிலே அவள் உலகத்தை மறந்து போனாள்.



படிக்க வேணும் என்று துடிப்பாக உள்ள மாணவனுக்குத் தூக்கம் வராது. பசி இருக்காது.

அதேபோலக் காதல் கொண்டவர்களுக்குப் பயம் இருக்காது, வெட்கம் இருக்காது என்பது பழங்காலத்திலிருந்து வழக்கிலிருக்கும் ஒரு பழமொழி.

அவள் விஷயத்தில் அது உண்மையாகிவிட்டது.

''துர்க்கா! என்ன பண்றே?'' என்று அம்மா அதட்டல் போட்டால் நடுங்கிப்போகும் பள்ளிச் சிறுமியாக வளர்க்கப்பட்டுப் பின் அம்மா பேச்சுக்கு ஆடும் பொம்மையாக ஆளாகி, ஆசிரியை என்று வேலை பார்க்கத் தொடங்கியும் சுதந்திரம் ஏதும் இல்லாது கொத்தடிமையாக வீட்டில் நடத்தப்பட்ட துர்க்காவுக்குக் காதல் ஏற்பட்டதும் பயம் குறைந்து போனது.

ஆரம்பத்திலே டாக்டர் அரவிந்தன் மோட்டார் சைக்கிளில்தான் தன் கேஸ்களை கவனிக்கப் போய் வந்து கொண்டிருந்தான். பகிரங்கமாக அவன் பின்னால் சைக்கிளில் ஏறி உட்கார்ந்து கொண்டு ஊரைச் சுற்றி பவனி வர அவளுக்குக் கொஞ்சம் அச்சமாகத்தான் இருந்தது. இதனால் கடைத்தெருவில் எதேச்சையாகச் சந்திப்பது போல, கடற்கரையில் எதிர்பாராத விதமாகப் பார்த்துப் பேசுவது போல கொஞ்ச காலம் நடித்தாள்.

காதல் போதை தலைக்கேறிவிட்ட பின்னர் அரவிந்தன் அவளை மணக்க விரும்புகிறான் என்பதைத் தெரிந்து கொண்ட பின்னர் அவள் பயம் தெளிந்து போனது. மாதம் வாங்கும் சம்பளத்தை அம்மா கையில் கொடுத்துவிட்டு பஸ் சவாரி செலவுக்கும் பகல் வேளை டிபன் வாங்கிச் சாப்பிட ஆசைப்படும்போது ஏற்படும் செலவுக்கும் அம்மாவிடம் கணக்குச் சொல்லிக் கொண்டு

அவள் எண்ணித் தரும் சில்லறையில் வாழ்க்கையை நடத்திக் கொண்டு அவள் இளமையைப் பெற்றோரின் நலனுக்காகப் பலி கொடுத்துக் கொண்டு இருந்தால் அவள் பிற்காலம் என்னாவது?

பெற்ற பிள்ளைக்கு இல்லாத கடமை... பெண்ணுக்கு எப்படி வந்து சேரும்? மனம் புரட்சி செய்தது.

ஒரு நாள்! -

''ஏன் இந்த மாசம் சம்பளத்திலே முப்பது ரூபாய் குறைகிறது?'' அம்மா குறுக்குக் கேள்வி கேட்டபோது அவளுக்கு ஆத்திரம் மண்டிக்கொண்டு வந்தது.

''எனக்குன்னு செலவழிக்க எடுத்துக் கொண்டேன்!''

''அப்படி உனக்கு என்னதான் தனிப்பட்ட முறையில் செலவு?''

''ஏம்மா என் சிநேகிதியோட சினிமாவுக்குப் போகப் பிரியப்படுவதோ, ஓட்டலில் போய் டிபன் சாப்பிட ஆசைப்படுவதோ தப்பா? அப்படிப் போனால் என் கையிலும் காசு இருக்க வேண்டாமா? எப்போதும் ஓசி டிபன் சாப்பிடச் சொல்கிறீர்களா?''

''ஓட்டலுக்குப் போவது என்ன பழக்கம்? அப்படிப் பட்ட சிநேகிதிகள் உனக்கு என்னத்துக்கு?''

''வீடு, அதைவிட்டா வேலை... அப்படின்னு என்னால் வாழ முடியாது. எனக்கும் அக்காவைப்போல காலாகாலத்திலே கல்யாணம் செஞ்சுகொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்கணும்னு ஒரு ஆசை தோணிடுச்சு'' - தைரியமாகத் தன் எண்ணத்தை ஒருநாள் பளிச்சென்று வெளியிட்டுவிட்டாள்.



''அடி பாவி! உன்னை நம்பிக்கிட்டு இருக்கிற எங்க [illegible]?''

''உங்களுக்கு மகன் இருக்கான். இன்னொரு மகள் இருக்கா.''

''துர்க்கா உன் மனதை அந்தப் பாவி நித்யா ரொம்பவே கலைச்சிருக்கா. தன் வீட்டுக்கு உன்னை அடிக்கடி கூப்பிட்டு இல்லாததையெல்லாம் போதிச்சிருக்கா.''

கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்த அப்பா எழுந்து இருமினார். இந்தத் தர்க்கத்தில் தமக்கும் உரிமை உண்டு என்பதுபோல அவர் எழுந்து வந்து கூடத்திலே கையைக் கட்டிக் கொண்டு நின்றார்.

''இரு ஞானம்! நான் கேட்கிறேன்... சரி காலா காலத்தில் கல்யாணம் செய்துக்கணும் என்பதை நான் ஒத்துக்கறேன். எத்தனை வயசிலே ஒரு பெண் கல்யாணம் செய்துக்கணும்னு சொல்ல முடியுமா?''

எச்சிலை விழுங்கிக் கொண்டாள் துர்க்கா. சம்பாதிச்சுப் போடும் பெண். இவளை வெளியே விடக் கூடாது என்று அப்பாவும் அவளைக் கெட்டியாகப் பிடித்துத் தங்கள் குடும்பத்துக்குள்ளேயே இருத்தி வைக்கப் பார்க்கிறார்.

''அந்தக் காலத்தில் அம்மாவுக்கு பதினைந்து வயசில் கல்யாணம் ஆச்சு. ஆனால் அக்காவுக்கு பதினெட்டு வயதில்தான் கல்யாணம் கூடியது. இந்தக் காலத்திலே என்னைப் போல வேலை செய்கிற பெண்களுக்குக் கல்யாண வயசு இதுதான்னு எப்படி நிர்ணயிக்க முடியும்? மாப்பிள்ளை தேவைன்னு பத்திரிகையிலே வர விளம்பரங்

களைப் பார்க்கும்போது அநேகமாக எல்லாரும் பதினெட்டு வயசைத் தாண்டின பெண்களாகத்தான் இருக்காங்க.''

''அவங்களை விடு... உனக்கு என்ன வயசாகிறதுன்னு தெரியுமா?''

''இதென்ன கேள்வி அப்பா? இருபத்து நான்காகிறது.''

''உன் வயசில் நான் மூணு குழந்தைக்குத் தாய். ஞாபகம் இருக்கட்டும்'' - அம்மா சீறினாள்.

''இத்தனை வயதான உன்னை கட்டும் மாப்பிள்ளைக்கு என்ன வயசு இருக்கணும்னு நினைக்கிறே?''

''இரண்டு மூணு வயசு வித்தியாசமிருக்கலாம்.''

''இரண்டாந்தாரமாகக் கட்டிக்க இஷ்டமிருந்தா நாற்பது வயதுக்கு மேற்பட்ட இடம் கிடைக்கும். ஒரு பெண்ணைக் கட்டிக் கொடுத்து வாழ வைக்கிறதுங்கிறது ரொம்பச் சுலபம் இல்லை. எனக்கு என் பொறுப்பு தெரியும். இந்த வயசிலே உள்ள உன்னை முதல் தாரமா எவனும் கட்டிக்க முன்வர மாட்டான்னுட்டுதான்...''

''அப்படி வர யாராவது தயாராக இருந்தால்...?'

அம்மாவும் அப்பாவும் திடுக்கிட்டு அவளைப் பார்த்தனர். ''காதல் கீதல்ன்னுட்டு ஜாதி கெட்டு ஜாதியில் எவனையாவது பிடிச்சுக் கொண்டு வந்து நின்னையோ, மறுநாளே நாங்க ரெண்டுபேரும் மூட்டப்பூச்சி மருந்தைத் தின்னுட்டு போயிடுவோம். ஞாபகமிருக்கட்டும்.''

''ஏம்மா... நான் கல்யாணமே செய்துக்கக் கூடாதுன்னு சொல்றீங்களா?''



''படிச்சுட்டோம். சரிசமமா பேசலாம் என்கிற எதிரிலே நீ அப்பா எதிரிலே வெட்கத்தைவிட்டு கல்யாணத்தைப் பத்தி விளக்கிப் பேசறே. என் காலத்திலே நாங்க பெரியவங்க பேசும் போது அந்த இடத்திலேகூட நிக்க மாட்டோம்.''

''ஞானம் நில்லு. நானே அவளுக்குப் பதில் சொல்றேன்.'' அப்பா துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு அவளை முறைத்தார்.

''துர்க்கா, உனக்கு கல்யாண வயசு தாண்டிப் போச்சு. காலாகாலத்திலே உன்னையும் கட்டிக் கொடுக்கணும்னு நினைச்சோம். நம் அந்தஸ்துக்கேத்த இடத்திலே கொடுக்கக்கூட வரதட்சிணை சீர் இதெல்லாம் இல்லாம முடியாதுன்னு புரிஞ்சு கொண்டேன். வீணா ஜாதகத்தைத் தூக்கிக் கிட்டு மட்டும் நாலுபேரைக் கேட்டு அவமானப் படறதைவிட என் பெண் கல்யாணமாகாமலேயே எங்களோட இருந்துட்டுப் போகட்டுன்னு கம்முனு இருந்துட்டேன். கல்யாணம் செய்து கொண்டவர்கள் எல்லாரும் என்ன சுகப்பட்டிருக்காங்க? நீ இப்போ நிம்மதியா தனியா இருக்கிற இந்தச் சுகம் இல்லறத்திலே இருக்காது. அது ஒரு கானல் நீர்.''

'நீங்க ஏன் அப்பா கல்யாணம் செய்து கொண்டீங்க? அண்ணா ஏன் செய்து கொண்டார்?' கேட்க வார்த்தைகள் வாய்வரை வந்துவிட்டது. ஆனால் மௌனமாகினாள்.

இந்தப் பெற்றோர்கள் வேலை செய்து தங்கள் வயது காலத்தில் காப்பாத்துகிற பெண் அவள் என்று விட்டுக் கொடுக்க மனமின்றி பலியாடாக அவளை நடத்துகிறார்கள். இவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும். கோபத்தில் கொதித்த நெஞ்சம் கறுவியது.

டாக்டர் அரவிந்தன் அவளைத் திருமணம் செய்து கொள்ளத் தயாராக இருக்கிறான். கட்டின புடவையுடன் அவள் வெளியேற நேர்ந்தாலும் அவளை ஏற்கத் தயார் என்ற உறுதிமொழி கொடுத்து உற்சாகப்படுத்தியதும் ரொம்பவும் துணிந்துவிட்டாள்.

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை அவனைத் தன் வீட்டிற்கு வர ஏற்பாடு செய்திருந்தாள்.

அப்பா கதவைத் திறந்தார்.

''நீங்கள்?'' என்று அப்பா கேட்டதும் ''நான் உள்ளே வந்து பேச விரும்பறேன்'' என்றபடி புன்முறுவலுடன் நுழைந்த வாலிபனை அம்மா சந்தேகத்துடன் பார்த்தாள்.

அரை மனதுடன் அப்பா காட்டிய நாற்காலியில் கூடத்தில் அவன் அமர்ந்து கொண்டதும் உள்ளேயிருந்து அவள் விரைவாக வந்தாள்.

''அப்பா! இவர்தான் டாக்டர் அரவிந்தன்...'' மேலே பேச முடியாது சிவந்த முகத்துடன் அம்மாவைப் பார்த்தாள் துர்க்கா.

''இங்கே யாருக்கும் உடம்புக்கு எதுவும் இல்லையே. டாக்டரை கூப்பிட அவசியம் என்னன்னு சொல்ல முடியுமா?'' அப்பா ஓரளவு புரிந்து கொண்டு விட்டு ஆத்திரத்துடன் ஏளனமாகக் கேட்டார்.

டாக்டர் அரவிந்தன் அவள் பதிலளிக்குமுன் முந்திக் கொண்டான்.

''நானும் உங்கள் மகள் துர்க்காவும் ஒருவரை ஒருவர் நேசிக்கிறோம். நாங்கள் திருமணம் செய்து கொள்ள உங்கள் அனுமதியைக் கோரி வந்திருக்கிறேன். எங்கள் விவகாரத்தில் ஜாதிமதப் பிரச்சினைகள் இல்லை. நீங்கள்



ஒப்புதல் கொடுத்ததும் நான் இந்தத் தகவலை என் வீட்டவர்களிடம் கூறி ஒப்புதல் வாங்க வேண்டும். அதனால்...''

ஞானம் கோபாவேசத்தில் காளியாக மாறிப் போனாள்.

''துர்க்காவுக்குக் கல்யாணம் தேவையில்லை. உன்னைப் போன்று காதல் கத்திரிக்காய் என்று கூறிக் கொண்டு வீட்டுக்குள் நுழைகிறவனை எவ்வளவு தூரம் நம்ப முடியும்? அதனால் வார்த்தைகள் தடிக்கு முன் தயவு செய்து கிளம்பிப்போய்விடுங்கள்'' - அம்மா சூடாகச் சொன்னாள்.

''அம்மா!...'' என்று குறுக்கே பேச வந்த மகளின் கன்னத்தில் ஓங்கி ஒரு அறை கொடுத்தாள் ஞானம்.

''என்ன துணிச்சல் உனக்கு! எவனையோ வீட்டுக்கு வரச்சொல்லி... காதலாம், கல்யாணமாம், போடி உள்ளே'' கத்தினாள்.

''டாக்டர் ஸார், இடத்தைக் காலி பண்ணு றீர்களா?'' ஏளனமாக அப்பா கூவியதும் அரவிந்தன் எழுந்து நின்றான்.

அவன் தயங்கி நிற்பதைக் கண்ட ஞானம், ''அவர் சொல்வது காதில் விழலையோ... எங்க பெண்ணை உங்களுக்கு கல்யாணம் செய்து கொடுக்க நாங்கள் விரும்பலை. கல்யாணம் என்பதில் பெண்ணைப்பெற்றவர் களின் விருப்பம்தான் முதல் இடம் பெறும். அதற்குப் பின்னர் பிள்ளை வீட்டுக்காரர் சம்மதம் தேவைப்படும். டாக்டருக்குப் படிச்சிருக்கே. நீ எங்கே மகளை வரதட் சிணை, சீர் இல்லாம், பெரியவங்க முன்வந்து ஏற்பாடு

செய்யாம கல்யாணம் பண்ணிக்கிறேன் சம்மதம் கொடுங்க ன்னா இதில் ஏதோ சூது இருக்கு; நான் ஒப்பமாட்டேன். ப்ளீஸ் கெட் அவுட்'' என்று கத்தினாள்.

திரும்பி அரவிந்தனைப் பரிதாபமாகப் பார்த்த மகளை நெட்டிக் கொண்டு உள்ளே தள்ளினாள்.

அரவிந்தன் திகைப்புடன் வாயிலைக் கடந்து வெளியேறிப் போனதைக் கண்டு அவள் அழுதபோது அம்மா அவள் தலைமுடியைப் பற்றி குலுக்கி மீண்டும் ஒரு அறை அவள் கன்னத்தில் விட்டாள்.

''எனக்கு இப்படி ஒரு காரியம் நடக்கும்னு தெரியும். நாங்கள் உயிரோடு இருக்கிறவரை இதுக்குச் சம்மதிக்க மாட்டோம். அவன் முகரக் கட்டையிலே அயோக்யன்னு எழுதி வச்சிருக்கு. இந்த வெட்கக்கேட்டை யார்கிட்ட சொல்வது'' தொடர்ந்து கத்தினாள்.

ஒரு வார விடுப்பில் அவள் வெளியே போகாது வீட்டோடு தங்கியிருந்தாள். அப்பொழுதுதான் அந்த யோசனை அவள் மனதில் எழுந்தது.

## 5

அரவிந்தனது வீட்டிலும் பலத்த எதிர்ப்பு என்பதைப் பின்னர் விடுப்பு முடிந்து மறுபடி வேலைக்குப் போக ஆரம்பித்ததும் ஒருநாள் ரகசியமாக அவனைச் சந்தித்த போது தெரிந்து கொண்டாள்.

டாக்டருக்குப் படித்த பெண்கள் வரதட்சிணையுடன் அவனை மாலையிடக் காத்திருக்கும்போது, அவன் தொழிலுக்குக்கூட உதவி செய்ய முடியாது ஆசிரியை



வேலை பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணை சீர், வரதட்சிணை ஏதுமில்லாது, அவன் கட்டிக்கொள்ள அனுமதிக்க முடியாது என்று அவனைத் தந்தையைப்போல வளர்த்து ஆளாக்கிய அண்ணா ஆகாசத்திற்கும் பூமிக்கும் குதித்தார். கோபத்தில் தாயார் விம்மி விம்மி அழுதாள்.

காதல் கல்யாணம் என்பதைக் கேட்டதும் இரு தரப்பு வீட்டவர்களுக்கும் அது ஏதோ ஒரு பயங்கர வியாதிபோல ஒப்புதல் தர மறுத்து ரகளை செய்தனர்.

அரவிந்தனின் அண்ணன் தாம் தூக்கில் தொங்கி விடப் போவதாகப் பயமுறுத்தினார்.

படித்துப் பட்டம் பெற்றதும் தாமே காத்துக் கொள்ள நிலை ஏற்பட்டும், ஏன் நம் நாட்டில் பெற்றவர்களும், உறவினர்களும் பிள்ளை, பெண்களிடமிருந்து அதிகப்படியான அடிமைத்தனத்தை எதிர்பார்க்கின்றனர்?

மேலை நாட்டில் இப்படியெல்லாம் நிகழ்வதில்லையே. படித்து வேலைக்கு அமர்ந்ததும் பெண்ணோ பிள்ளையோ வீட்டைவிட்டு சுயேச்சையாக வாழத் தொடங்குகிறார்கள். காதலிக்கிறார்கள், கல்யாணம் செய்து கொள்கிறார்கள். பழங்காலத்தில் பணக்காரர் என்று தனிப்பட்டு வாழ நேர்ந்த சமயத்தில் பெண் தமது அந்தஸ்திற்குக் குறைவான இடத்திலோ தமது விரோதியின் மகனையோ காதலித்துவிட்டுக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புவதைத் தெரிவித்ததும், பெற்றவர்கள் பொங்கி எழுந்தனர்.

காதலர்கள் வாழ்க்கை கல்லறையாகியது.

அதன் கருத்தை வைத்துக் கொண்டுதான் ரோமியோவும், ஜூலியட்டும் அமரக் காதலர்களாகப் படைக்கப் பட்டனர்.

ஆனால் அந்த மேலைநாட்டில் இப்போது நிலைமை முற்றிலும் வேறாகிவிட்டது. பழம்பெரும் பெருமைக்குரிய பணக்காரக் குடும்பத்து வாலிபன் ஒரு சாதாரண குடிமகனின் மகளை மணந்து கொள்கிறான். காதலைப் பொறுத்தவரை அங்கெல்லாம் சமத்துவம் நிலவி உள்ளது.

நம் நாட்டில்தான் ஜாதி, மதம், அந்தஸ்து என்று குறுக்கீடுகள் போதாது போல... பெற்றோர்கள் இப்போது வேலை செய்யும் பிள்ளையையும் பெண்ணையும் தங்கள் வாழ்க்கையின் பாதுகாப்பு நிதிகளாகத் தாங்களே பத்திரமாக வைத்துக் கொண்டு தங்கள் இஷ்டப்படி ஆட்டிப் படைக்க நினைக்கிறார்கள்.

இருவரும் கூடிப் பேசி அந்த முடிவுக்கு வந்து விட்டிருந்தனர்.

உரியமுன் அறிக்கை விடுத்து ஒருமாத கால அறிவிப்பின்படி இருவரும் பதிவுத் திருமணம் செய்து கொள்ளத் துணிந்து விட்டிருந்தனர்.

ஒருநாள் காலை வேலைக்குப் புறப்பட்டுப் போன துர்க்கா - அரவிந்தனின் முன் ஏற்பாட்டின்படி அன்று வேலைக்கு லீவு போட்டுவிட்டுப் பதிவுத் திருமண அலுவலகத்தில் தக்க சாட்சிகளுடன் தங்கள் திருமணத்தை மிக விரைவில் முடித்துக் கொண்டுவிட்டார்கள்.

பின்னர் அருகிலிருந்த ஒரு கோவிலுக்குச் சென்று புரோகிதரை வைத்து ஒரு சாஸ்திரக் கல்யாணத்தையும், நண்பர்கள் உதவியால் செய்து முடித்துக் கொண்டு விட்டனர் அவர்கள் இருவரும்.

அதற்குப் பின்னர் நண்பர்களுடன் ஒரு ஹோட்டலில் கல்யாணவிருந்து சாப்பிட்டுவிட்டு, அரவிந்தன் திருமணத்



திற்காகச் சேர்த்து வைத்திருந்த பணத்தைப் போட்டு வாங்கிய புதிய காரில் ஏறிக் கொண்டு... அடுத்தபடியான போராட்டத்தை எதிர்நோக்கி கொஞ்சம் அச்சத்தோடு முதலில் அரவிந்தன் வீட்டிற்குப் போனார்கள்.

வாட்டசாட்டமான தோற்றத்தில் வந்து கதவைத் திறந்த அரவிந்தனது அண்ணனைக் கண்டதுமே துர்க்கா மிகவும் அரண்டு போய்விட்டாள்.

''என்ன? கல்யாணம் செய்து கொண்டுவிட்டீர்களா? பேஷ்! பேஷ்! அதைச் சொல்லக்கூட இங்கே வந்திருக்கத் தேவையில்லையே.''

அண்ணன் கூப்பாடு போட, வயதாலும் வியாதியாலும் ஒடுங்கிப்போன அவன் தாய் வாயைப் புடவைத் தலைப்பால் மூடிக்கொண்டு விம்ம... அண்ணி அலற அந்த வீட்டில் அப்போது யாரோ இறந்துவிட்டது போன்றதொரு துக்கம் தலைதூக்கியது.

''எங்களை ஆசீர்வதியுங்கள்'' என்று இருவரும் வணங்கியபோது அண்ணன் வெடித்தார்.

''வெளியே போ... என் கோபத்தை அதிகமாகத் தூண்டினால் வெட்டிப் போட்டு விடுவேன்... ஆமாம்!'' என்று உறுமவே... அரவிந்தன் தன் தாயைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டு, மனைவியுடன் வெளியேறிவிட்டான்.

அதைவிட ஒரு பயங்கர வரவேற்பு அவள் வீட்டில் அவர்களுக்குக் காத்திருந்தது.

வாசலில் காரை நிறுத்திவிட்டு அவர்கள் இறங்கும் முன்பே சொல்லி வைத்தாற்போல அப்பா கதவைத் திறந்தார். அவர்களை ஜோடியாகக் கண்டதும் அவர் கண்கள் நெருப்பாகின.

எட்டிப் பார்த்த அம்மா புதுப்புடவையும் கழுத்திலே மஞ்சள் சரடுமாக வந்து நின்ற பெண்ணையும் அவனையும்... வியப்பும் கோபமுமாகப் பார்த்தாள். விஷயம் பளிச்சென்று அவளுக்கு விளங்கிப்போயிற்று.

''எனக்கென்னவோ மனசிலே சந்தேகம் ஏற்பட்டது. கோடி வீட்டு போனில் உன் பள்ளிக்கூடத்திற்குக் கூப்பிட்டு விசாரித்தேன். நீ இன்னிக்கி வேலைக்கு வரவில்லை லீவு போட்டிருக்கேன்னு கணக்கர் சொன்னார். அப்பவே எனக்குப் பகீர்ன்னு ஆயிட்டது. என்ன துணிச்சல் இருந்தா இப்படி ஒரு காரியம் செய்வே?''

அப்பா இரைந்து கத்த... எதிர்வீட்டு ஜன்னல் வழியே சில தலைகள் தெரிய... அவர்களிருவருக்கும் அவமானமாக இருந்தது.

''உள்ளே போய் பேசலாமா?'' என்று கூறிக்கொண்டு அப்பாவைத் தாண்டி அரவிந்தன் உள்ளே வந்ததும் அம்மா கையிலிருந்த தண்ணீர் செம்பை முற்றத்திலே விட்டெறிந்தாள்.

''பாவி! சண்டாளா நீ உருப்படமாட்டே! என் பெண்ணை ஏமாத்தி திருட்டுத் தாலியா கட்டி அழைச்சிட்டு வந்திருக்கே?'' கைகளைச் சொடுக்கினாள், சபித்தாள்.

''இந்தக் கல்யாணம் உருப்படப் போறதில்லை. பெரியவங்க மனசை நோகச் செஞ்சு செய்த எந்தக் காரியமும் உருப்படாது. காகிதத்திலே கையெழுத்துப் போட்டுவிட்டு மஞ்சள் கயிற்றை கட்டிவிட்டா கல்யாணமாகிடாது. முப்பத்து முக்கோடி தேவதையும் அக்கினிப் பகவானும் சாட்சியாக இருந்து பெரியோர்கள் ஆசி வழங்க முறைப்படி நடந்தாத்தான் அந்தக் கல்யாணம் வெற்றி



பெறும். இவனை நம்பி கழுத்தை நீட்டிவிட்டு காகிதத்தில் கையெழுத்துப் போட்டுட்டு வந்து நிற்கிறாயே, உன்னை...'' என்று அப்பா கோபத்துடன் கையை ஓங்க - அரவிந்தன் குறுக்கிட்டான்.

''நிறுத்துங்க... அவள் ஒன்றும் பச்சைக் குழந்தை அல்ல. எப்பவோ மேஜராகிவிட்ட பெண். இந்த வயதிலும் நீங்க அவளை அடக்கி ஆளப் பார்ப்பது மதியீனம். அவள் என் மனைவி. சட்டப்படி சாஸ்திரப்படி, நீங்க சொன்ன தேவதைகள், அக்னிபகவான்...' பெரியவங்க எல்லார் முன்னிலையிலும் தெய்வ சந்நிதானத்தில் நாங்க செஞ்சு கொண்ட கல்யாணம் இன்னும் சட்டபடி உறுதியா இருக்கு. பதிவுத் திருமணம் வேறே செய்துக்கிட்டிருக்கோம்.''

அரவிந்தன் உறுமியபோது அவன்மீது தூக்கி எறியாத குறையாக அம்மா ஞானம் மேசை மேலிருந்ததொரு தடிமனான புத்தகத்தைத் தூக்கி வாயிற்பக்கம் வீசினாள்.

''இவளைப் படிக்க வச்சிங்களே, பண்ணியிருக்கிற துரோகத்தைப் பார்த்தீங்களா? பள்ளிக்கூட வாத்யார் அம்மாவாம். இவகிட்டே படிச்ச பிள்ளைகள் உருப்பட்டாப்போலத்தான்'' - ஆத்திரத்துடன் கத்தினாள்.

''அம்மா... அது லைப்ரரி புத்தகம்'' என்று துர்க்கா கிரீச்சிட்டாள்.

''உன் மூஞ்சிக்கு இனி புத்தகம் ஒரு கேடா? உன் சாமான்களை தூக்கிட்டு நட'' என்று அப்பா இரைந்தார்.

''துர்க்கா வேண்டாம். இந்த வீட்டிலிருந்து நீ ஒரு மாற்று புடவைகூட எடுது வரத் தேவையில்லை. நாம் தனியாக குடித்தனம் ஆரம்பித்து வாழ்ந்து காட்டுவோம்.

பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த லைப்ரரி புத்தகத்தை மட்டும் எடுத்துக்கொண்டு வா போதும்'' என்று உத்தரவிட்டான் அரவிந்தன்.

தாழ்வாரத்தில் கிடந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு அப்படியே அவள் கணவனுடன் வெளியேறி விட்டாள்.

அந்தக் காட்சியைத் தெருவே வேடிக்கை பார்த்தது.

''அங்கே என்ன சண்டை?'' ஆவலுடன் கேட்டாள் ஒரு கிழவி.

''ஞானத்தின் மகள் - அந்த வாத்தியாரம்மா எவனையோ இழுத்துக்கிட்டு ஓடிட்டா. பெத்தவங்க அடிச்சிக்கிறாங்க.''

தன்னைப் பற்றிய வம்புப் பேச்சைக் கேட்டபோது துர்க்காவுக்குக் கோபந்தான் வந்தது.

''நீ மெல்ல நடந்துதான் வீட்டைவிட்டு வந்து பஸ் ஏறி என்னை உரிய இடத்தில் சந்தித்தே. அதற்கு சமூகத்திலே பெயர் ஓடிப்போவது. காதலித்த பின் கல்யாணம் செய்துகொள்ள உன்னை ஒத்த மேஜர் அடைந்த பெண்ணுக்கு உரிமை இல்லை என்று இன்னமும் பத்தாம் பசலியாக இருக்கு நம் சமூகம்'' என்று சிரித்தான் அரவிந்தன்.

ஆனால் அவளுக்கு அழுகை வந்தது. அந்தச் சமூகத்தின் முன் பெற்ற மகளை தாயே அவமானப் படுத்தித் துரத்திவிட்டாளே.

மூத்த மகளுக்கு இருந்த பணத்தைப் போட்டு கடன் வாங்கியாவது கல்யாணம் செய்து ஒருவன் கையில்



ஒப்படைக்கத் துடித்த தாய்... இளைய மகள் செலவு வைக்காது தானே அந்தத் திருமணம் செய்து கொண்டதை வெறுக்கிறாள்?

காரணம் இல்லாமல் போகவில்லை. மூத்தாள் வீட்டுக்கு சுமையாக இருந்தாள்.

இளையாள் பொன் முட்டையிடும் வாத்தாக இருந்தது அவளுக்கே தீங்காகிவிட்டது. போகட்டும் காலம் மாறும். அவர்கள் மனமும் மாறும் என்று தன்னைத்தானே சமாதானம் செய்துகொண்டாள்.

ஒரு சிறிய ஃபிளாட்டை வாடகைக்கு எடுத்து அவர் களிருவரும் தனிக்குடித்தனம் துவங்கினார்கள்.

அந்த இரண்டு ஆண்டு காலமும் அவர்கள் எப்படி இருந்தார்கள்!

நகமும் சதையும் போல, பூவும் மணமும் போல என்று எத்தனை உதாரணங்கள் சொன்னாலும்கூடப் பொருந்தாது. அத்தனை நெருக்கமான, நேசமான ஓர் உயிராகிவிட்ட இனிய தம்பதியராக வாழ்ந்தனர்.

அவள் தாய்மையடைந்தபோது, தங்களுக்கு ஒரு குழந்தை பிறக்கப்போகிறது என்கிற இனிய எதிர்பார்ப்பின் போது அவள் உள்ளத்தில் ஏற்பட்ட சபலமும் ஆசையும் அவளது வாழ்விற்கே நாசம் விளைத்து விட்டதைப் பின்னர் தானே உணர்ந்து கொண்டாள்.

அவள் தாய் வீட்டில் உறவாடிக்கொண்டிருந்த சமயம் ஆஸ்பத்திரியிலிருந்து கைக் குழந்தையுடன், விதவையாகித் தனிமையில் தவித்த தாயுடன் சில மாதங்கள் தங்கியிருக்க நினைத்தபோதுதான் அந்தத் தவறு ஏற்பட்டது.

அப்பொழுதும் அதைப்பற்றிக் கண்டுபிடித்துத் தூண்டிக் கெடுத்தவள் அவள் தாய்தான்.

அரவிந்தன் அவளையும், குழந்தையையும் பார்க்க தினமும் தனது கிளினிக்கினின்று அந்திப் பொழுதில் வருவது வழக்கம். வாயிற் கதவைத் தாண்டி உள்ளே தாழ்வாரம் வரைதான் அவனை அம்மா அனுமதித்திருக்கிறாள்.

''துர்க்கா, என்ன இருந்தாலும் நீ என் பெண். உன்னை மன்னிச்சுட்டேன். அதனாலே உள்ளே சேர்த்துக்கிட்டேன். அந்தக் கடங்காரனை கண்டால் என் வயிறு பத்திக்கிறது. தெரு சிரிக்கப் போகிறதேன்னு அவனை உனக்காக உள்ளே விடறேன். அவன் இங்கே வந்து சாப்பிடக் கூடாது. தங்கக்கூடாது. இதெல்லாம் நான் அனுமதிக்கமாட்டேன்'' - அம்மா கண்டிப்பாக உத்தரவிட்டாள்.

அம்மாவின் உறவும் அன்பும் திரும்ப கிடைத்துவிட்டதே என்ற திருப்தியில் துர்க்கா அதற்கெல்லாம் தலையாட்டினாள்.

அரவிந்தன் அந்த அவமானத்தைத் தன் மனைவிக்காகப் பொறுத்துக்கொண்டு ஒரு பாயில் மாமியார் கிடத்தும் தன் மகனை வாரி எடுத்து கொஞ்சிவிட்டு தான் வாங்கி வந்த பொம்மைகளையும் மனைவிக்கு வாங்கி வந்த பூப்பொட்டலத்தையும் அருகே வைத்துவிட்டு அந்த வீட்டில் ஒரு டம்ளர் தண்ணீர்கூட தாகத்திற்குக் குடிக்காது போய் விடுவது வழக்கம்.

பரத் பிறக்கும் முன்பே அரவிந்தன் அந்த அழகான வீட்டை வாங்கி மனைவி பெயரில் எழுதி வைத்துவிட்டிருந்தான்.



அதுவும் அம்மாவின் ஏற்பாடாக இருந்தது.

''துர்க்கா, வெய்யில் காலத்தில் ஓட்டிலிருந்து தேள் விழுகிறது. தூங்கும் குழந்தையை கொட்டிவிடப் போகிறதுன்னு எனக்கு பயமா இருக்கு. வீடு உன்னுடையது தானே, அதில் குழந்தையோடு நான் வந்து இருக்கப் போறேன். இத்தனைக்குப் பிறகு எனக்கு அவன் வாங்கிய வீட்டில் தங்கப் பிரியமில்லை. ஆனால் இங்கே வாடகை கொடுத்துக் கொண்டு... கடல் போல அங்கே ஒரு வீட்டை போட்டுவிட்டு இருக்க மனமில்லை'' என்றாள்.

''உங்களுக்கு மருமகனைக் கண்டால் பிடிக்கவில்லையே அம்மா'' என்று துர்க்கா கேட்டாள்.

''வெட்கத்தை விழுங்கிவிட்டு குழந்தையை வளர்த்துக் கொடுக்க உதவிக்கு உன்னோட வீட்டில் தங்கிக்கிறேன். ஆனால் உன் புருஷனோட பேசமாட்டேன். அவனுக்கு எந்தவித பணிவிடைகளும் செய்யமாட்டேன். அந்த நிபந்தனைக்கு உட்பட்டா நான் தங்கிக்கிறேன். இங்குள்ள சாமான்களை வித்து காசாக்கிக் கொண்டு தேவைப்பட்ட சில துணிமணிகளுடன் ஒரு சின்ன பெட்டியோட என்னால் புறப்பட முடியும்'' என்றாள் அம்மா.

விற்றுக் காசாக்க ஒரு பழைய புத்தக அலமாரி, கொஞ்சம் பித்தளைப் பாத்திரங்கள்... உடைந்த நாற்காலிகள், அலுமினிய சட்டிகள், சில ஸ்டீல் பாத்திரங்கள் இவைதான் அம்மாவிடம் மீதமிருந்தவை. கழுத்தில் வெறும் துளசி மாலையும், காதில் சிவப்புதோடும், கையில் தேய்ந்து போனதொரு தங்க வளையலும்தான் அவளது கையிருப்பு. வங்கியில் சில நூறு ரூபாய்கள்தான் ஆஸ்தி.

கணவனிடம் இதைப்பற்றி ஆலோசித்தபோது அரவிந்தன் தன் மாமியாரை பெருந்தன்மையோடு மனதிற்குள் மன்னித்துவிட்டான்.

''தாராளமாக அவங்க நம் வீட்டில் தங்கிக்கலாம் எனக்கு மறுப்பு இல்லை'' என்றான் மகிழ்ச்சியுடன்.

மருமகனைக் கண்டால் பிடிக்கவில்லை. ஆனால் அவன் வீட்டில் தங்கி, அவனது குழந்தையை வளர்க்கும் பாவனையில் அவனது சம்பாத்தியத்தில் உட்கார்ந்து தின்ன வெட்கமிருக்கவில்லை. வேறு கதியில்லை என்ற நிலையில் அவள் தங்கியிருந்தாள். ஆனால் உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்யத் துணிந்துவிட்டாள்.

கை நிறைய சம்பாதிக்க துவங்கிவிட்ட அரவிந்தன் துர்க்கா வேலையைவிட்டு வீட்டில் தங்கவேண்டும் என்று பிரியப்பட்டான்.

வீட்டின் தலைவியாக, குழந்தையின் தாயாக அவள் வாழ வேண்டும். வேலை, வேலை என்று ஓடிக் கொண்டிருக்கக் கூடாது என்று அவன் அவளுக்கு ஒய்வு தர விரும்பினான்.

ஆனால் அவள் தாயின் போதனை வேறாக இருந்தது. ''துர்க்கா எக்காரணம் கொண்டும் வேலையை விடாதே. பின்னால் பென்ஷன், அது,இது என்ற சலுகைகள் போய்விடும். என்னதான் உன் கணவன் சம்பாதித்துக் கொட்டினாலும் உன்னுடையதுன்னு நாலு காசு நீ சம்பாதித்துக் கொண்டிருந்தால்தான் அவன் மதிப்பான். இல்லாவிட்டால் காலில் போட்டு மிதிப்பான்.''

கணவனைவிட அவளுக்குத் தாயின் பேச்சுத்தான் தலைக்கேறியது. வேலையைத் தொடர்ந்து பிடிவாதமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள்.



அப்பொழுதுதான் ஒருநாள் அவளது தாய் ஞானம் கடைத் தெருவிலிருந்து மூச்சிரைக்க வந்தவள் ஒரு கூடையுடன் வந்தாள்.

துர்க்கா அப்பொழுதுதான் வேலையிலிருந்து வந்திருந்தாள். மூன்று வயதாகிக்கொண்டிருந்த தன் மழலைச் செல்வத்தை வாரி மடியில் வைத்துக் கொஞ்சியபடி அம்மா பிளாஸ்கில் போட்டு வைத்திருந்த காபியை டம்ளரில் ஊற்றிச் சாப்பிட கையில் எடுத்தவள், ''துர்க்கா'' என்று அலறுவதைக் கேட்டு நடுங்கிப் போய் டம்ளரை மேஜை மேல் வைத்துவிட்டு குழந்தையை வாரி அணைத்தபடி வாசலுக்கு ஓடி வந்தாள்.

தூக்கி வந்த காய்கறிக் கூடைகளை தொப்பென்று நடை மீது வைத்துவிட்டு கதவைத் தாளிட்டுக் கொண்டு முன் அறை இருக்கை மீது சரிந்தாள் தாய் ஞானம்.

''என்னம்மா உங்களுக்கு? கனமான கூடைகளை தூக்கிக்கிட்டு ஏன் நடந்து வந்தீங்க? ஒரு ரிக்ஷாவிலே வந்திருக்கலாமே. மயக்கம் வரதா?'' அனுதாபத்துடன் கேட்ட மகளை கோபத்துடன் பார்த்தாள் தாய்.

''காய்கறி கூடை கனக்கலை. இத்தனை படிச்சும் என் மகள் ஏமாந்தவளாகிட்டாளேங்கிற வயிற்றெரிச்சல் மனதை கனக்குது. வேதனை தாங்கலை. விவரத்தைச் சொல்ல மூச்சைப் பிடிச்சுகிட்டு ஓடி வரேன்.''

''என்னம்மா? என்ன நடந்தது சொல்லுங்கோ'' - துர்க்கா வற்புறுத்தினாள்.

''உன் புருஷன் வேறு ஒருத்தியோட ஒரு ஆறுமாசமா சுத்திக்கிட்டு இருக்கான். அது தெரியாம நீ இருக்கிறாயே!''

''யார் அப்படி சொன்னது?'' கோபத்துடன் கேட்டாள் துர்க்கா. அவள் நெஞ்சு படபடவென்று துடித்துக் கொண்டது. அவளது அரவிந்தன் அவளை உயிருக்குயிராய் நேசிக்கிறவன் - அப்படி ஒரு காரியம் செய்யமாட்டான் என்று உள்ளுணர்வு கூச்சலிட்டது.

''நீலச் சாயம் பூசின அந்த கடைசி பங்களாவிலே வசிக்கிறாளே ஒரு வயசான அம்மா இந்த ஆம்பிளைப் போக்கைப் புரிந்துகொண்ட மகராசி அவுங்க. அதனாலே ஒரு பெரிய அலுவலகத்தில் தலைமை கணக்கராக வேலை செய்த காலத்திலேயே தனக்கு கலியாணம் வேண்டாம்னு தீர்மானிச்சு அப்படியே தனி மரமாக நின்று போனவங்க. வேலையில் இருந்து ஓய்வடைஞ்சு இப்போ சமூக சேவை அது இதுன்னு தன்னால் ஆனதை செய்துகிட்டு ஒரு வீட்டை வாங்கிப்போட்டுக்கிட்டு தன்னந்தனியா வாழ்ந்து கிட்டிருக்காங்க. அவுங்களைப் போய் ஏன் வம்புக்காரின்னு அசட்டையா பேசறே. அவுங்க கண்ணாலே பார்த்ததை என்கிட்டே சொல்லி எச்சரிக்கை செய்தாங்க. அந்தம்மா தான் சொன்னாங்க. உன் கணவன் யாரோ ஒரு பெண் ணோட காரில் பீச்சில் உட்கார்ந்திருந்தானாம். ஒரு தடவை அவங்க ரெண்டு பேரையும் அண்ணாசாலையில் பார்த்தாங்களாம்.''

எச்சிலை விழுங்கிக் கொண்டாள். ''பொய். இது சுத்தப் பொய். நான் நம்பமாட்டேன். என் கணவர் அப்படி எனக்குத் துரோகம் செய்ய மாட்டார்'' ஆத்திரத்துடன் கத்தினாள் துர்க்கா.

''உண்மையைச் சொன்னால் உடம்பெரியும்பாங்க. ஒரு நாள் பொறு. நான் அந்தம்மாகிட்டே கேட்டு அந்தப் பொண்ணு யார், பேர் என்ன என்கிற விவரத்தோடு விளக்கமா வந்து சொல்றேன். பிறகு நீ உன் புருஷனை



விசாரிச்சுக்கோ. உண்மையைச் சொல்லாட்டா அவங்களை கையும் களவுமா உன் முன்னாலே காட்டித்தர எனக்கு ரொம்பவே சாமர்த்தியம் உண்டு.'

இருபத்து நான்கு மணிநேரம் பொறுமையாக அவள் இருக்கப்பட்ட பாடு! அவள் தாய் ஞானம் வாக்குக் கொடுத்தபடியே வந்து விஷயத்தைச் சொன்னாள்.

''அந்தப் பெண் பெயர் மாலதியாம். அவனோட கிளினிக்கில் உதவி டாக்டராக வேலை பார்க்கிறாளாம்.''

திடுக்கிட்டுப் போனாள் துர்க்கா. கிளினிக்கில் வேலை அதிகமாகி விட்டதால் கூட உதவி செய்ய ஒரு பெண் டாக்டரை பெண்கள் பகுதிக்கு நியமித்து இருப்ப தாகச் சொன்னான் அரவிந்தன். பின்னர் அந்த டாக்டரை ஒரு நாள் வீட்டிற்கு அழைத்து வந்தான். பார்க்க மாநிறமாக ஒடிசலான தோற்றத்தில் இருந்த அவளைப் பற்றி துர்க்கா கவலைப் படவில்லை.

மாலதி அதற்குப்பின் பல தடவை அவர்கள் வீட்டுக்கு வந்து போனாள். சில சமயங்கள் அவளையும் கூட கணவருடன் சினிமாவுக்கு அவள் அழைத்துச் சென்றதுண்டு. அடிக்கடி சாப்பிட வீட்டிற்கு அழைத்தாள். விடுமுறை தினங்களில் விமரிசையாக சமைப்பதை கணவனுக்கும் அவளுக்கும் தன் கைகளினாலேயே பரிமாறி உபசரித்ததும் உண்டு.

தன் குடும்பத்துக்கு அவள் ஒரு நல்ல சிநேகிதி என்றுதான் நினைத்திருந்தாள்.

இப்போது அந்த சிநேகிதியே... அவளைக் குழி பறித்து மூடத் துணிந்து விட்டிருக்கிறாளே.

ஆமாம், என்னத்தைக் கண்டு இந்த அரவிந்தன் இப்படி திசை திரும்பிப் போனார்?

டாக்டருக்குப் படித்தவள் என்ற தகுதியைத் தவிர அழகிலோ, மற்ற சாமர்த்தியங்களிலோ அவள் துர்க்காவை மிஞ்சவே முடியாது.

துர்க்கா அழகாக எம்பிராய்ட்ரி செய்வாள். வீணை வாசிப்பாள். நல்ல சங்கீத ஞானம்.

வைத்திய சம்பந்தப்பட்ட விஷயங்களைத் தவிர மாலதிக்கு வேறு எதிலும் திறமை கிடையாது.

இப்போது மற்றவளின் கணவனை அபகரிப்பதற்குத் திறமை வந்துவிட்டிருக்கிறதுபோலும். ஆத்திரத்தில் எரிமலையாக கனன்றாள் துர்க்கா.

## 6

கணவன் துரோகம் செய்கிறான் என்பதைக் கேள்விப்பட்டுவிட்டு பொறுமையாக இருப்பது என்பது சாதாரணமாக எந்தப் பெண்ணுக்கும் சாத்யப்படாத சங்கதி.

சிலருக்கு கோபமும் அழுகையும் வரும். சிலருக்கு ஒரே ஆவேசமாகப் பொறாமை சீறிக் கொண்டு எழும்.

கணவனிடம் நேர்முகமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளும் துணிச்சல் பலருக்கு இருப்பதில்லை.

ஒரு சிலருக்கு அந்தத் துணிச்சல் உண்டு. ''ஆமாம் நான் கேள்விப்பட்டேன். உண்மையா?'' என்று நேரிடையாகக் கேட்டு விடுவார்கள்.

கணவன்மார்களிலும் பலவிதமானவர்கள் உண்டு.



மனைவிக்குத் தெரியாது ரகசியமாகத் தவறு செய்துவிட்டு இல்லை என்று மழுப்பிவிட்டுத் தப்பிக் கொள்பவரும் உண்டு.

''ஆமாம்! செய்தேன். இப்போ நீ என்ன பண்ணப் போறே'' என்று தமது ஆண்பிள்ளை ஆதிக்கத்தைக் காட்டி அதட்டிப் பதில் அளிப்பவரும் உண்டு.

அரவிந்தன் எந்தவிதமாக நடந்து கொள்வான் என்று துர்க்காவால் ஊகிக்க முடியவில்லை. மேலும் விஷயத்தைத் தட்டிக் கேட்க தடயம் தேவைப்படுமே.

மிகவும் சிரமப்பட்டு பொறுமையுடன் இருக்கிறாள். ஆனால் அவளது தாய் அவளைச் சும்மா இருக்கவிட்டால் தானே?

''ஆமாம் நேத்து ராத்திரி ரொம்ப நேரம் கழிச்சு மருமகன் வீட்டுக்கு வந்தார். ஏன்னு நீ ஒரு வார்த்தை கேட்டியா?''

''கேட்டேன் அம்மா. என்னவோ அவசர கேஸாம், அறுவை செய்ய அம்பிகா நர்ஸிங்ஹோம் போயிருந்தாராம்.''

''கூடவே அந்த அம்பிகையையும் அழைச்சிட்டுப் போனானான்னு கேட்டியா.''

''கேட்கலை அம்மா.''

''உனக்குத் துணிச்சல் ஏது? எங்கள் கண்களைக் கட்டிட்டு திருட்டுக் கல்யாணம் செஞ்சுக்க மட்டும் துணிச்சல் இருந்தது. நான் சொன்னதை அப்பவே கேட்டிருந்தால் உனக்கு இந்த நிலை வந்திருக்காது. வாயை மூடிட்டு இருந்தா அரவிந்தன் ஒரு நாளைக்கு உன்னை டைவர்ஸ் பண்ணிட்டு அவளைக் கட்டிக் கொள்வான். ஏன்னா தன்

அந்தஸ்துக்கு இப்போ ஒரு டாக்டர் மனைவி தேவைப் படுகிறது.''

அம்மாவின் போதனைகள் அவள் தலையை வெடிக்குமளவுக்கு இறுக்கின.

''தடயம் இல்லாமல் எப்படியம்மா விவகாரத்தை நான் ஆரம்பிப்பேன்'' என்று முனகினாள் கோபத்துடன்.

அம்மா வக்கீலின் மகள். வீட்டில் அப்பா தனது ஜூனியரிடம் பேசிக்கொண்டிருக்கும் சட்ட நுணுக்கங் களைப் பட்டும் படாததுமாக சிறு வயதிலிருந்து காதில் ஏற்றுக்கொண்டவள்.

''ஒரு கொலை செய்யப்பட்டால் யாரும் அந்தக் கொலையை நேரில் பார்த்ததில்லை என்றால் சந்தர்ப்பம், சூழ்நிலை இவைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு குற்றவாளியை தண்டிக்கிறார்கள்.''

''அம்மா அது கோர்ட். இது வீடு.''

''வீட்டையே கோர்ட்டாக்கி விட்டிருக்கானே அரவிந்தன்'' - அம்மா கசப்புடன் சீறினாள்.

''கொஞ்சம் பொறு, நான் அவரை ஒரு தடயத்தோடு கேட்கிறேன்.''

அம்மா ஆத்திரத்துடன் பற்களைக் கடித்தாள். ''நீ முடிவுவரை ஏமாந்துதான் இருக்கப்போறே.''

ஒருசில நாட்களில் அவள் எதிர்பார்த்த அந்தத் தடயம் கிடைத்துவிட்டது. துவைக்கப் போட்டிருந்த அரவிந்தனது சட்டைப் பையிலிருந்து அம்மா இரண்டு சினிமா டிக்கெட்டுகளின் பகுதியை எடுத்து வைத் திருந்தாள்.

''தடயம் வேணும்னாயே... இந்தா, நேற்று ராத்திரி உன் கணவன் எமர்ஜென்ஸி ஆப்ரேஷனுக்குப் போகலை.



தன் காதலியை அழைச்சிட்டு சினிமாவுக்குப் போயிருக் கான். இப்ப என்ன சொல்றே.''

அன்று காலை அவளுக்குப் பள்ளிக்கூட விடுமுறை. அதனால் துப்பு துலக்க நேரம் இருந்தது. சட்டென்று வெளியே வந்து கராஜைத் திறந்தாள். அன்று காலை உண்மையிலேயே அரவிந்தனுக்கு நகரத்து நர்ஸிங்ஹோம் ஒன்றில் அறுவை சிகிச்சை செய்ய முன் ஏற்பாடாகி யிருந்தது. நோயாளியின் வீட்டிலிருந்து கார் வந்து அழைத்துக்கொண்டு போனதால் அவன் தன் காரை வீட்டிலேயே விட்டுப்போயிருந்தான்.

காரின் கதவைத் திறந்து உள்ளே பார்த்தாள். டிரைவர் ஆசனத்திற்கு அடுத்ததான முன் இருக்கையின் காலடியில் கம்பளத்தின்மீது சில வாடின மல்லிகைப் பூக்கள் கிடந்தன. டாஷ்போர்டிற்குள்ளே ஒரு சிறு கைகுட்டை அகப்பட்டது. காருக்குள்ளே லேசாக அந்த ஃபாரின் செண்டின் மணம்.

துர்க்கா ஒரு கணம் திகைத்துப் போனாள். தலையில் அடித்தது போன்று அந்த மணம் மூளையில் பளிச்சிட்டது.

மாலதி அவர்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம், அவள் வாயிலிற்குள் நுழையுமுன் அவளுக்குப் பராக்குச் சொல்வதுபோல அந்த வெளிநாட்டு செண்ட் குப்பென்று முகத்தில் வீசும்.

இப்படி இவள் எதற்கு செண்டை மேலே அபிஷேகம் செய்துகொண்டுவருகிறாள்? என்று தன்னுள் எண்ணி அவள் வியப்படைந்ததுண்டு.

அதற்குக் காரணம் இப்போதல்லவா புரிகிறது.

தன்னிடம் துர்க்காவுக்கு ஈடான அழகு இல்லாததை இட்டு ரொப்ப தன் ஒப்பனையில் அவள் தீவிரமான

முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறாள். அரை பாட்டில் சென்டை மேலே கவிழ்த்துக் கொண்டு தலை நிறைய மல்லிகைப் பூவும் உதடு பளபளக்கச் சாயமும் பூசிக் கொண்டு அவனுடன் சினிமாவுக்குக் கள்ளத்தனமாகக் கிளம்பியிருக்கிறாள்.

அரவிந்தனுக்குத்தான் துரோக புத்தி துவங்கியது என்றால் படித்தவள் தன்னுடன் சிநேக பாவத்துடன் பழகும் துர்க்காவின் வாழ்க்கையைக் கவிழ்க்கக் கூடாது என்ற நல்ல மனம் மாலதிக்கும் இருக்கவில்லையே!

இமைகளை நனைத்த கண்ணீரைச் சமாளித்துக் கொண்டு வாடிக் கிடந்த பூக்களைப் பொறுக்கி ஒரு காகிதத்தில் சேகரித்துக் கொண்டாள். அந்தச் சிறு கைகுட்டையையும் எடுத்துக்கொண்டு கராஜை பூட்டிவிட்டு உள்ளே வந்தாள். அம்மா எடுத்து வைத்திருந்த சினிமா டிக்கெட் பகுதிகள் சாப்பாட்டறை மேசைமேல் அவளைப் பார்த்து வேடிக்கையாகச் சிரிப்பது போல... கண்ணாடி டம்ளர் அடியில் காற்றில் துடித்தன.

அவைகளையும் எடுத்து பத்திரமாக வைத்துக் கொண்டாள்.

அதற்குப் பின்னர் அவளுக்கு வேலையே ஓட வில்லை.

திங்கள்கிழமை மாணவிகளுக்கு அவள் போதிக்க வேண்டிய பாடங்களைத் தயாரிக்க அவள் நூல் நிலையத்திலிருந்து கொண்டுவந்த புத்தகங்கள் அப்படியே மேஜை மேல் அடுக்கப்பட்டிருந்தன.

தூக்கத்தினின்று விழித்துக் கொண்டு அழுத குழந்தையைக்கூட எடுத்துச் சமாதானப்படுத்தத் தோன்றாது... அவள் தொட்டிலின் அருகே பிரமை பிடித்துப்போய் நின்றாள்.



''துர்க்கா, குழந்தை கத்தறது காதுல விழலை...'' என்று அதட்டியபடி வந்த அம்மா குழந்தை பரத்தைத் தூக்கிச் சமாதானப்படுத்தியபடி வெறித்துப் பார்த்தாள்.

கண்ணீர் கன்னங்களில் கோடிட மகள் தொட்டில் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு லேசாக விசும்புவதைக் கண்டாள்.

''இப்ப எதுக்கு அழனும்'' - அதட்டினாள் அம்மா.

''நீங்க சொன்னது உண்மைதான் அம்மா. அவர்... அவர்...'' என்று விக்கினாள்.

''இப்ப மட்டுமில்லே, ஆரம்பத்திலேயிருந்து நான் சொன்னது அத்தனையும் உண்மை. அரவிந்தன் உன்னை நடுத்தெருவில் நிறுத்திவிட்டு அவளோடு போய் விடுவான். அயோக்கிய சிகாமணின்னு அவன் முகமே சொல்லுதே.''

கண்ணீரைத் துடைத்துக்கொண்டு அவள் தன் தாயைக் கேட்டாள்.

''இப்போ என்ன செய்வேன் அம்மா?''

''போதும் இவனோட வாழ்ந்ததுன்னு வெட்டிக்க வேண்டியதுதான்.''

''அப்படின்னா?'' திகைப்புடன் மகள் மீண்டும் கேட்டாள்.

''விவாகரத்து கோரி வக்கீலை வச்சு அவனுக்கு நோட்டீஸ் கொடுக்கவேண்டியது, பிறகு கேசைத் தொடர்ந்து விவாகரத்துப் பெற்றுக்க வேண்டியது. ஸ்பெஷல் மாரியேஜ் பிரகாரம் நீங்க பதிவுத் திருமணம் செய்துகிட்டிருக்கீங்க. இப்போ பலதார விவாக எதிர்ப்புச் சட்டம் அமுலில் இருக்கு. உயிரோட ஒரு பெண்ஜாதி

உரிமைக்குடையவள் இருக்கும்போது இன்னொருத்தியோட சுத்திக் கொண்டு... ரொம்பக் கொடுமை படுத்துறான்னு அவன் மேல் வழக்குத் தொடர வேண்டியதுதான். கணவன் தன் மனைவியைக் கொடுமைப்படுத்திறான்னா சூடுபோட்டு, அடிச்சு, உதைத்து, கீழே தள்ளி காயப்படுத்தி கொடுமைப்படுத்துவது மட்டும் அதில் சேர்த்தியில்லை. வார்த்தைகளாலும், அசட்டையான போக்காலும், தன் நடத்தையாலும், மனைவியின் உணர்வுகளை சித்திரவதை செய்வதும் அதில் சேர்த்திதான். மன அளவில் கணவன் மனைவியைக் குரூரமாக ஆட்டிப் படைக்கிறான் என்று வக்கீல் உன் பக்கமாக வாதிப்பார்.''

''விவாகரத்து வாங்கிட்டா... பிறகு?'' மகள் அதிர்ச்சியுடன் திணறினாள்.

''தொடர்ந்து இந்தத் துரோகியோட எப்படி வாழ முடியும்? அவன் முந்திக்கொண்டு உன் நடத்தை மேலே மாசு கற்பித்து விவாகரத்துக் கோரினால் என்ன பண்ணுவே? ஊரே சிரிச்சுப் போகும். அதைவிட நீ முந்திக் கறதுதான் முறை.''

''குழந்தை பரத் இருக்கானே அம்மா.''

''குழந்தை, குடும்பம் இதெல்லாம் பத்தி அரவிந்தன் யோசித்தால் இந்தக் காரியத்தைச் செய்யமாட்டான். இது அவனது முன்கூட்டிய திட்டம். இப்படிப்பட்ட சண்டாளன் கிட்டே குழந்தையை வளர அனுமதிக்கக் கூடாது. விவாகரத்து வழங்கும் நீதிபதி அநேகமாகக் குழந்தைக்குத் தாயைத்தான் பாதுகாவலாக நியமிப்பார். இந்தக் கேசில் உன் கணவன்தான் குற்றவாளி. அவனது பயங்கர நடத்தையால்தான் நீ பாதிக்கப்பட்டு விவாகரத்து வேண்டுகிறாய். நீ குற்றமற்ற அபலை, நல்லவள். உன் பாதுகாப்பில் குழந்தை வளர்வதுதான் நியாயம் என்று



நீதிமன்றம் உன்னிடம் குழந்தையைக் கொடுத்து விடுவாங்க. பிரியமிருந்தா நீ குழந்தை வளர்ப்புக்கு வேண்டிய தொகையை அவனிடமிருந்து மாதா மாதம் வசூலித்துக் கொள்ளலாம். என்னைக் கேட்டால் அது தேவையில்லை என்பேன். அந்தச் சாக்கை வைத்துக் கொண்டு அவன் உன்னிடம் மறுபடி தொடர்பு கொள்ள முயல்வான்.''

''அம்மா...!'' என்று தாங்க முடியாத துக்கத்துடன் அவள் விசும்பி அழுதாள்.

''இந்த மாதிரியான காதல் கல்யாணம்... இப்படித்தான் உடைந்துபோகும். நான் எதிர்பார்த்ததுதான். ஏன் அழவேணும். துணிவோடு அவனை எதிர்த்து நில். துரோகம் செய்துட்டேன் மன்னிச்சுக்கோ என்று மழுப்பப் பார்த்தால் ஒத்துக்காதே. ஆண்கள் என்ன வேணாலும் செய்யலாம். அதை மன்னித்து மறந்துடணும், பெண் அதே தவறைச் செய்தால் அவள் சமூகத்தின் முன் அவமானப்பட்டு ஒதுக்கப்பட வேண்டும். இந்தப் பத்தாம்பசலித் தனத்திற்கு பாரபட்சமான நியாயத்துக்கு நீ ஒத்துக்காதே.''

அம்மா ரொம்பவே அவளுக்குச் சொல்லிக் கொடுத்துவிட்டிருந்தாள்.

அன்று இரவு, வீட்டுக்குத் திரும்பிய கணவனிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. மேஜைமீது எடுத்து வைக்கப்பட்டிருந்த சாப்பாட்டைத் தானே எடுத்துப் போட்டுச் சாப்பிட்ட அரவிந்தன் கையை கழுவிக் கொண்டு உள்ளே வந்தான்.

''குழந்தை தூங்கிட்டானா?'' என்று கேட்டபடி படுக்கை ஓரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

''பாத் ஒரு குழந்தை! அதனால் உலகத்தின் போக்குத் தெரியாமல் தூங்கறான். ஆனால் நான் குழந்தை

யில்லையே, ஏமாந்து தூங்கிப்போக! நல்லா முழிச்சிட்டு இருக்கேன்'' - படபடவென்று துர்க்கா சொன்னதும் அதிர்ந்து போன அரவிந்தன், அவளை வியப்புடன் பார்த்தான்.

''நீ என்ன சொல்றே? உனக்கு வழக்கமாக வரும் தலைவலி போல இருக்கு, அதனால்தான் சாப்பாடு பரிமாறக்கூட வரலைன்னு நினைச்சேன்.''

''பாவம், என் தலைவலிக்கு இரக்கப்பட்டுக் கொண்டு இப்போ அதுக்காக வட்டியும் முதலுமாக மன வலியைக் கொடுத்திருக்கீங்களே...'' சீறிக் கொண்டு எழுந்த துர்க்கா விடிவிளக்கைப் பட்டென்று அணைத்து விட்டு பளிச்சென்று அறை முழுவதும் ஒளி பரப்பிய குழல் விளக்கைப்போட்டாள்.

அலமாரியைத் திறந்து, அதன் மேல் தட்டில் வைத் திருந்த கடிதப் பொட்டலத்தை எடுத்து வந்து அவன் முன் பிரித்து வைத்தாள்.

''இந்த மல்லிகைப்பூ, செண்ட் மணக்கிற இந்த கைக்குட்டை, இந்தச் சினிமா டிக்கெட்டின் மீதிப் பகுதிகள் இவையெல்லாம் எப்படி வந்ததுன்னு உங்களால் சொல்ல முடியுமா?''

கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டான் அரவிந்தன். அவன் கண்களும் காதும் சிவப்பாயின. சில நிமிடங்கள் மௌனமாக அவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஏன் பதில் சொல்ல மாட்டேன்கிறீங்க. எப்படி இவ கண்டு பிடிச்சாள்னு உங்களுக்கு அதிசயமாயிருக்கா? நேத்து நீங்க மாலதியோட கூட சினிமாவுக்குப் போயிருக் கீங்க, இதுதான் முதல் தடவையில்லை.

''கொஞ்ச நாட்களா நீங்க அவளோட நெருக்கமா பழகிட்டு வரீங்க. என்னைக் கழிச்சுக் கட்ட ரெண்டுபேரும்



சேர்ந்து செய்த சதி இது. உங்களுக்குத்தான் காமம் கண்ணை அவிச்சுதுன்னா படிச்சவ, என் தோழிபோல நடிச்ச அவளுக்கு எங்க புத்தி போச்சு!''

''நான் சொல்றதைக் கேட்டுட்டு... நீ பிறகு இப்படி இரைந்து கத்து'' - அரவிந்தன் அடிக்குரலில் அதட்டினான்.

''நீங்க செய்த மோசம் பெரிசா தெரியலை. நான் இரைஞ்சு பேசறது உங்களுக்கு அவமானமாக இருக்கா.''

''குழந்தை எழுந்து அழப்போகிறான். நம் சண்டையை அவன் ஏன் பார்த்து மிரளணும்?''

''எதிர்கால வாழ்க்கையே அவனுக்கு ஒரு பெரும் பிரட்சியாக இருக்க நீங்க அஸ்திவாரம் போட்டுட்டீங் களே. மனைவியைப் பத்திக் கவலைப்படாவிட்டாலும் போகட்டும். பெத்த மகனின் வருங்காலத்தையாவது யோசிக்கறீங்களா'' - தணிந்த குரலில் ஆத்திரமாகக் கேட்டாள்.

''விபரமா சொல்றேன் கேட்டுக்கோ, ஒரு நாளைக்கு இதைச் சொல்லணும்னுதான் இருந்தேன்.'' அரவிந்தன் வார்த்தைகளுக்குத் தடுமாறினான்.

தான் செய்த தவறை எண்ணி வெட்கப்பட்ட அவன் முகம் சுருங்கிப் போனான். கதவிடுக்கில் நிழலாடுவதைக் கண்டு வெகுண்டு சென்று மாமியார் முகத்தில் அறைந் தாற்போல் படுக்கையறைக் கதவைச் சாத்திக்கொண்டு வந்து மீண்டும் கட்டிலின் ஓரத்தில் உட்கார்ந்தான்.

''என்ன விளக்கம் சொல்லப்போறீங்க? உங்களுக்கும் மாலதிக்கும் உள்ள நெருக்கம் எவ்வளவு தூரம் இறுக்க மாகிவிட்டிருக்கு என்பதை முதலில் சொல்ல முடியுமா?''

''ஒரு மனைவியைப் போல அவள் என்னிடம் நெருக்கமாகிவிட்டாள்'' - மெல்லிய குரலில் அவன்

சொன்னபோது துர்க்காவின் தலைக்குள்ளே ஒரு எரிமலை வெடித்தது.

கண்களில் பொங்கிய கண்ணீரைச் சமாளித்துக் கொண்டு, ''எவ்வளவு காலமா இது நடக்கிறது?''

''ஒரே ஒரு முறைதான் தவறு செய்துவிட்டேன். அதற்குக் காரணம் உன் தாய். நாமிருவரும் கணவனும் மனைவியுமா இந்த வீட்டில் ஒற்றுமையாக வாழ்வதை தடுக்கும் நோக்கத்தோடேயே உள் புகுந்து விட்டிருக் காங்க.''

''நீங்க செய்த தப்புக்கு அவங்க தலையில் ஏன் பழியைப் போடறீங்க? உண்மையை சொல்லப்போனா நீங்க செய்து வந்த அக்கிரமத்தை அவங்க யாரோ சொல்லக் கேட்டு வந்து என்னை எச்சரிக்கை பண்ணினாங்க. நான் தான் உங்களை ரொம்பவுமே நம்பி, அப்படி இருக்கா துன்னு சண்டை போட்டேன். முடிவில் அவங்க பேச்சு தான் உண்மையாகிவிட்டது...'' தாங்க முடியாத துக்கத்திலே விம்மி அழத் தொடங்கினாள்.

''இதோ பார் துர்க்கா. ப்ளீஸ் அழாதே, தெரியாம ஒரு தவறு செய்திட்டு நான் உன்கிட்ட என்ன சொல்வது மாலதிகிட்ட எப்படி மன்னிப்புக் கேட்கிறதுன்னு தெரியாம தவிக்கிறேன்'' என்று கூறிக்கொண்டு அருகில் வந்து அவள் தோளைத் தொட முயன்றபோது, அவள் நீட்டிய கரத்தை வெடுக்கென்று தட்டிவிட்டு அப்பால் நகர்ந்து கொண்டாள்.

''கறைபட்ட அந்தக் கையை இனி என்மேல் வைக்காதீங்க. உங்க பிள்ளை மேல சத்தியம். இனி நான் உங்க மனைவியில்லை.''

''துர்க்கா! நடந்ததைக் கேளு. என்னோட கொஞ்சம் பீச்சுக்கு வரியான்னு நான் கேட்கிறதுக்கு முந்தி உங்கம்மா



இடையே புகுந்து குழந்தையை எடுத்துட்டு இருட்டின பிறகு எங்கே போறே? பக்ஷிதோஷம் வந்து குழந்தையைப் பிடிச்சுக்கும் என்பாங்க. நீ வர மறுப்பே. சினிமாவுக்கு வான்னு கூப்பிட்டா, பள்ளிக்கூட வேலை இருக்கு... சினிமாவுக்கா கிளம்பப்போறே அப்படின்னு உங்கம்மா இடை மறிப்பாங்க. உங்கம்மா பேச்சுக்குக் கீழ்ப்படிஞ்சு நீ என் பேச்சுக்கு மரியாதை கொடுக்க மறந்தே போனே.''

''தெரியும். இப்படி ஒரு பெரிய கதையை எங்கம்மா மேலே போடுவீங்கன்னு தெரியும்.''

''எனக்கேற்பட்ட தனிமையிலே நான் மாலதியோட கிளினிக்கிலேயே உட்கார்ந்து பல மணிநேரம் பேசத் தொடங்கினேன்.''

''கிளினிக் உங்கள் காதல் நாடகத்துக்கு அரங்கமாக மாறிவிட்டதாக்கும்?''

''எப்படி ஏற்பட்டது - ஏன் ஏற்பட்டது என்றெல் லாம் விவரிக்க முடியாது. ஒருநாள் என் பலவீனத்திலே அவளை மிகவும் நெருங்கிவிட்டேன். கல்யாணமாகாத ஒரு பெண்ணை நான் நாசப்படுத்திவிட்டேன்.''

''இதைச் சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லை?''

''இதே மாதிரி ஒரு தனிமையில்தானே நானும் வாழ்ந்தேன். அதற்காக எதிர்ப்பட்ட ஆண்களிடம் நான் என்னை அழிச்சுக்கலையே. ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி இல்லையா'' - கோபத்துடன், துக்கத்துடன் கேட்டாள்.

''அந்தத் தவறுக்காக நான் கடந்த மூணு மாசமா படும் வேதனை கொஞ்ச நஞ்சமல்ல. நடந்தது நடந்து விட்டது. அதற்காக நான் என் மனைவியைக் கைவிட

முடியாது என்று மாலதிக்கு அறிவுரை வழங்கி கிட்டிருக்கேன்.''

''பேஷ்! அதுக்காகத்தான் நேத்திக்கு சினிமாவுக்குப் போனீங்களா?''

''உண்மைதான். அங்கே உட்கார்ந்து கொண்டு படத்தைப் பாராது அவளது வருங்காலத்தைப் பத்திப் பேசினேன்.''

''பலதார விவாக மறுப்புச் சட்டம் அமுலில் இல்லாதிருந்தால் சிவனே என்று அவள் கழுத்திலும் ஒரு தாலி கட்டியிருப்பீங்க இல்லையா?''

''என் போன்ற படித்தவன் இப்படி ஒரு தவறு செய்துட்டா அதுக்கு ஒரு பரிகாரம் செய்துட வேண்டியது கடமைதான்.''

''இப்போ என்ன செய்கிறதாக உத்தேசம்?''

''நீ என்னை இந்த பயங்கர தவறுக்காக மன்னிச்சு கணவனாக ஏத்துக்கணும். மாலதி என் பேச்சை கேட்டுக் கொண்டு இங்கிருந்து வேறு எங்கேயாவது போய்விடு வதாகத் தீர்மானிச்சுட்டாள். அவளைப் பொறுத்தவரை அவள் இனி யாரையும் கல்யாணம் செய்துகொள்ள மாட்டாளாம். தன் தொழிலையே கணவன் என்று மதித்து முழு மனதுடன் வாழ்நாள் முழுவதும் தனியே இருக்கத் தீர்மானித்துவிட்டாளாம். என்னை அவள் மன்னித்து விட்டாள். இந்த மாதக் கடைசியுடன் அவள் கிளினிக்கின் வேலையை ராஜினாமா செய்துவிட்டு பம்பாயில் உள்ள தன் சகோதரி வீட்டுக்குப் போகப்போகிறாள்.''

''ஐயோ பாவம், பெரிய தியாகி! நீங்க மனம் உருகி அவளுக்காகக் கண்ணீர் விட்டிருப்பீங்களே?''



''என் தவறுக்காக நான் கண்ணீர் விடமாட்டேன். ஒரு மனிதன் தன் அறிவை இழந்து பலவீனமான உணர்வின் வசப்படக்கூடாது என்று என் மனச்சாட்சி என்னை இடித்துக் கொண்டிருக்கிறது. மாலதிக்கு நான் பெருத்த துரோகம் செய்து விட்டிருக்கேன்.''

''பாவம் அவள் ஒன்றும் தெரியாத பச்சைக் குழந்தை. உங்கள் முடிவை சொல்லிட்டீங்க... என் முடிவு உங்களுக்குத் தெரிய வேண்டாமா?''

''சொல்லு கேட்டுக்கிறேன், உன் மனம் ஆறு மட்டும் திட்டு பொறுத்துகிறேன்.''

''அறிவு கெட்டு நீங்க ஒரு சாக்கடைக்குள் விழுந்தீங் கன்னா கூடவே விழுந்து புரள நான் தயாரா இல்லை. கணவன் மனைவி இருவருக்கும் பொது என்பது கற்பு. அதை நீங்கள் உதறிவிட்டால் நான் அதை ஒத்துக்கொண்டு நீடித்து உங்களோட போலியான ஒரு வாழ்க்கையைத் தொடர என் மனம் இடம் கொடுக்காது.''

''துர்க்கா என்ன சொல்றே?'' அரவிந்தன் சற்றுக் கோபத்துடன் கேட்டான்.

''செய்கிற தப்பைச் செய்துவிட்டு ஆத்திரப்பட்டு என்ன பயன்? இனி இந்த வீட்டில் நாமிருவரும் சேர்ந்து கணவன் மனைவின்னு வாழ முடியாது. அதனாலே, எங்கம்மாவோடப் புறப்பட்டு நானும் குழந்தையும் வேறே எங்கேயாவது போய் வாழ்வதுன்னு தீர்மானிச் சுட்டேன்.''

''வீடு உன்னுடையது. நீ ஏன் போகணும்? வெளியே போய் நான் தங்கிக்கிறேன். உன் மனது மாறும்போது கூப்பிடு வருகிறேன். சரிதானே.''

''என் மனம் மாறப்போவது இல்லை. அதில் ஒரே ஒரு உறுதி பிடிவாதமாக உருவாகிவிட்டிருக்கு. உங்களது நடத்தையைச் சுட்டிக்காட்டி நீங்கள் எனக்கு இழைத்த துரோகத்தினால் என் மனம் எப்படிப் பாடுபட்டு உணர்வுகள் சிதைந்து போய்விட்டன என்பதை எடுத்து உதாரணம் காட்டி நான் விவாகரத்தை கோரப் போகிறேன்.''

''துர்க்கா? நீயாகவா இப்படிப் பேசறே?''

''என் அம்மா பின்னாலிருந்து பேசலை. புண்ணாகி விட்ட என் மனம் பேசறது. இந்த அவமானத்துக்குப் பிறகு உங்களை நிமிர்ந்து பார்க்கக்கூட எனக்கு ஆசையில்லை. டாக்டர் அரவிந்தன் நீங்கள் உண்மையில் ஒரு பண்பான மனிதனாக இருந்தால் வம்பு சண்டை போட்டு இழுத்தடித்துக் கொண்டு நீதிமன்றத்துக்கும் வீட்டுக்குமாக என்னை அலையவிடாமல் ரெஸ்ட்டிடுயஷன் ஆஃப் கஞ்சுகல் ரைட்ஸ் என்பதற்காகப் போராடாமல் விட்டுக் கொடுத்து எனக்கு விவாகரத்துக் கொடுத்துடுவீங்க. வீணாக்கின அந்த மாலதியை ரெண்டாந்தாரமாக கட்டிப்பீங்க.''

''இன்னிக்கு உன் மனது ரொம்பக் குழம்பியிருக்கு. அதனாலே இப்படிக் கடுமையாகப் பேசறே. நான் என் கிளினிக்கிலேயே ராத்திரி தங்கிவிட்டு நாளை காலை வந்து உன்கிட்ட பேசறேன்.''

''நாளை என்ன தொடர்ந்து அடுத்த நாள் அதற்கு... அடுத்த நாள் என்று வந்தாலும் என் முடிவு இதேதான். மாறப் போவதில்லை.''

''என்ன சொன்னே...'' கையை ஓங்கிக்கொண்டு அருகில் வந்த அரவிந்தன் திடுக்கிட்டு தன் செய்கைக்கு அவமானப்பட்டு கையைத் தாழ்த்திக் கொண்டான்.



''ஏன் அடிக்கிறதுதானே? படிச்சவராக இருந்தும் பெண்டாட்டியைக் கைதொட்டு அடிக்கிற மகராசன்கள் பலபேர் நம் நாட்டில் இன்னமும் இருக்காங்க. அடிச்சால் அந்த வர்க்கத்தில் நீங்களும் ஒருத்தராக சேர்ந்து விடுவீங்க. இப்ப மட்டும் என்ன, என் மனசை அடிச்சு நொறுக்கி விட்டிருக்கீங்க அது போதாதா...'' உறுமினாள் துர்க்கா.

கதவைத் திறந்து கொண்டு வெளியே வேகமாகச் சென்ற அரவிந்தன் தன் காரில் ஏறிக் கொண்டு புறப் பட்டுப்போய்விட்டான்.

மறுநாட்காலை அவன் வந்தபோது அம்மா அவனது சாமான்களையெல்லாம் ராத்திரியே கண் விழித்திருந்து கருத்தாக எடுத்து பெட்டிகளில் நிரப்பித் தயாராக வைத்திருந்தாள்.

உள்ளே வந்தவனிடம் அவளே பேசினாள்.

''உங்க சாமான்களையெல்லாம் எடுத்திட்டு நீங்க போகலாம்னு துர்க்கா சொல்லச் சொன்னா. உங்களை நேரில் பார்க்கக்கூட விருப்பமில்லையாம்.''

ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு அரவிந்தன் தன் வீட்டை அவளுக்கு விட்டுக் கொடுத்துவிட்டு சாமான் களுடன் வெளியேறினான். அதற்குப் பின்னர் அவர்களின் விவாகரத்து வழக்கு தொடர்ந்து கொண்டிருந்தபோது எத்தனையோ முறை அவன் வந்தான்.

அம்மா ஞானம் வராந்தாவிலேயே நிற்க வைத்துப் பேசித் துரத்திவிட்டாள். பின்னர் அவளது வாழ்க்கை யினின்றே அவனை விவாகரத்து மூலம் நிரந்தரமாகப் பிரித்துவிட்டாள்.

# 7

வீட்டுக் கதவைத் தட்டும் தொல்லையின்றி, தன் கடமையை எளிதாக முடித்துவிட்டுத் தபால்காரர் விரைய சௌகர்யமாக ஒரு தபால் பெட்டியை வாயில் கதவோரத்திலே அமைத்துவிட்டிருந்தாள் துர்க்கா.

அதற்குள் போடப்படும் கடிதங்கள் பத்திரமாக இருக்க பெட்டியின் வாயில் ஒரு பூட்டையும்போட்டு பாதுகாத்து வைத்திருந்தாள்.

பரத் வெளியூர் கிளம்பிச் சென்று இரண்டு வாரங்கள் விரைந்து விட்டிருந்தன.

தினமும் பள்ளியிலிருந்து திரும்பினதும் குடையை மடக்கி கை இடுக்கில் தொங்கவிட்டுக் கொண்டு வீட்டைத் திறப்பதற்குமுன் தபால் பெட்டியின் பூட்டைத் திறந்து உள்ளே கடிதங்களை ஆராய்வது அவள் வழக்கமாகி விட்டது.

விமானத் தபால் எதையும் காணாதபோது உணர்வுகள் சட்டென்று அடங்கிப் போக சிநேகிதிகள் உறவினர்கள் எழுதிய இரண்டொரு கார்டுகளை மட்டுமே எடுத்துக்கொண்டு உள்ளே வந்து உட்காரும்போது அவள் நிர்ஜீவனாகிப் போவது வழக்கம். தாயையே பெரும் துணை என்று நம்பி, அவள் வாக்கையே மந்திரமாகக் கொண்டு கணவனிடமிருந்து விவாகரத்துப் பெற்று அதே வீட்டில் மகனுடன் தாயின் துணையில் அவள் வாழ்ந்து கொண்டிருந்தாள். எத்தனை காலம்?

ஜீவனாம்சத் தொகை தேவையில்லை என்று மறுப்புத் தெரிவித்தும், குழந்தையை வளர்த்து ஆளாக்கப் பணம் தேவைப்படும் என்று அரவிந்தன் பெருமனதுடன் குழந்தையின் பெயரில் ஐம்பதாயிரம் ரூபாய்களை



வங்கியில் கட்டிவிட்டு, அவனை அதற்கு பாதுகாவலனாக நியமித்து விட்டிருந்தான். அந்த வட்டிப் பணத்திலே குழந்தைக்குத் துணியும், பள்ளிக்கூடப் புத்தகங்களும் வாங்கத்தான் சரியாக இருந்தது. அவள் சம்பாதித்த பணத்தில் மூன்று நபர்கள் சாப்பிட்டு தாராளமாக வாழ்க்கை நடத்த இயலவில்லை. ஆரம்பத்தில் அவளுக்குப் பக்க பலமாக இருப்பதாக வாக்குறுதி அளித்த தாய், பின்னர் நாளா வட்டத்தில் தன் சலிப்பை வெளிப்படையாகக் காட்டத் தொடங்கினாள்.

''வீட்டையும் குழந்தையையும் பார்த்துகிட்டு குடும்பப் பொறுப்பை நிர்வகிக்க சம்பளமா போட்டுத் தர்றா? மூணு வேளைக்கு ஏதோ வயிற்றுக்குப் போடுறா! வருஷத்துக்கு ரெண்டு புடவை எடுத்துக் கொடுத்துடுவா. நான் மாடாய் உழைக்கிறேன்'' என்று சதா முணுமுணுக்கத் தொடங்கினாள்.

தன் கோபத்தைப் பேரன்மீது அடிக்கடி காட்டத் தொடங்கினாள் பாட்டி.

''குளிப்பாட்டி, சுத்தமா உடுத்தி வெளியே அனுப்பிய உன் பிள்ளை எப்படித் திரும்பி வந்திருக்கான் பார்... சரியான குரங்கு, அப்பன் புத்தி எப்படிப் போகும்?''

''பாட்டி...! என்ன வேணுமானா திட்டு. என் அப்பாவைத் திட்டினியோ பல்லை உடைச்சுடுவேன்.''

''பார்த்தியா முளைச்சு மூணு இலை ஆகலை... பேச்சைப் பார். அந்தப் பரம்பரைக் குணம் எங்கே போகும்.''

''ஒல்ட் உமன் ஷட் அப்''- என்று பள்ளிக்குப் போகத் தொடங்கிய பாலகன் சீறத் தொடங்கினான். சதா வீட்டில் சண்டை. வேலையிலிருந்து களைப்புடன் வரும் மகள் முன் காப்பியை வைப்பதற்கு பதில் அம்மா, தன் புலம்பலை வைக்கத் தொடங்கினாள்.

அப்பொழுதுதான் துர்க்காவின் மூளையில், தான் செய்த காரியம் பிசகு என்ற ஞானோதயம் ஏற்பட்டது.

காலங்கடந்த அறிவு அது. அதனால் பயன் இல்லை. குழந்தையைப் பார்க்கக்கூட அரவிந்தன் வருவதை வெறுத்த ஞானம் விரட்டியடிக்க ஆரம்பித்ததும், அவன் ஒரேயடியாக வருவதை நிறுத்திக் கொண்டான்.

பின்னர் துர்க்கா கேள்விப்பட்டாள்.

அரவிந்தனுக்கும் மாலதிக்கும் திருமணம் நடந்தது என்றும் அவர்களிருவரும் அமெரிக்காவுக்குப் போய் விட்டனர் என்றும் தெரிய வந்தது.

அந்தச் செய்தி அவளை நெருப்பாகத்தான் எரித்தது.

அவளது வாழ்வின் குறுக்கே வந்த மாலதி, முடிவில் வாழ்க்கையையே திருடிக் கொண்டு போய்விட்டாள். நினைத்து நினைத்து ரகசியமாக அழுதாள்.

பரத் பத்து வயது பையனாகி விட்டபோது ஒருநாள் பாட்டிக்கும் பேரனுக்கும் பெரியதொரு யுத்தமே துவங்கி விட்டிருந்தது.

தந்தையின் முகத்தை நினைவில் கொண்டுவர இயலாவிடினும்... தனக்கு மற்ற பிள்ளைகளைப் போல வொரு தந்தை என்பவர் இல்லை என்ற குறையை உணரத் தொடங்கினான்.

ஒருநாள் மாலை அவன் பள்ளியிலிருந்து வந்தபோது துர்க்காவும் வீட்டுக்குத் திரும்பி விட்டிருந்தாள்.

பேரனுக்கும் மகளுக்கும் வேண்டா வெறுப்பாக உப்புமாவைப் பரிமாறி காப்பி டம்ளர்களைக் கொண்டு வந்து மேஜைமீது வைத்தாள் ஞானம்.

''அம்மா! இன்னிக்கு பள்ளிக்கூடத்திலே ஒண்ணு நடந்தது...'' ஆரம்பித்தான் மகன்.



''மத்த பசங்களை யாரையாவது அடிச்சிட்டியா? நீ ரொம்பத் துஷ்டத்தனம் பண்றேன்னு கேள்விப்பட்டேன்.'' ஞானம் முந்திக்கிட்டபோது உறுத்துப் பார்த்தான் பேரன்.

''பாட்டி நீங்க சும்மா இருங்கோ. உங்களால் ஆன உபகாரம்தான். இப்படி அப்பன் பேர் தெரியாத அனாதையா நிக்கறேன்.''

''பார்த்தியா துர்க்கா... எத்தனை பெரிய பேச்சு...'' அம்மா அலறினாள்.

''நான் பல தடவை பசங்களோட சண்டை போட்டிருக்கேன். அதுக்காக வாத்தியார் எனக்குத் தண்டனை கொடுத்திருக்கிறார். ஆனால் அதன் காரணத்தைச் சொன்னால், பிசகு என்னுடையதில்லைன்னு சொல்வீங்க.''

''ஏண்டா சண்டை போட்டே? சொல்லேன் காரணத்தை. ரொம்பப் பயமுறுத்திரியே. ஆண் குழந்தைகளை வளர்க்கிறது ரொம்ப கஷ்டம்னு சும்மாவா சொன்னாங்க...''

''எங்க பள்ளிக்கூடத்திலே பல பசங்களை அவங்க அப்பாவே ஸ்கூட்டர், சைக்கிள், கார் இதுகளிலே கூட்டி வந்து விட்டுவிட்டுப் போவதை நான் பார்த்து வரேன். நமக்கு ஒரு அப்பா இருந்தா இப்படி செய்யமாட்டாரானு பல தடவை நினைச்சு சங்கடப்பட்டதுண்டு... ஒருவாட்டி அழுதுவிட்டிருக்கேன். 'யார்டா உங்கப்பா?' அப்படின்னு என் கிளாஸ் பையன் ஒருவன் அடிக்கடி கேட்டு என்னைக் கிண்டல் பண்ணினான். ஒரு தடவை தாங்க முடியாது அவனை அடிச்சுச்சுட்டேன். அதுக்கு வாத்தியார் தண்டனை கொடுத்தார். ஏன் அடிச்சேன்னு நான் வாத்தியார்கிட்டே சொல்லலை... எனக்கு அப்பா இல்லைன்னு அவர்கிட்டே சொல்ல வெட்கமாக இருந்தது.''

துர்க்கா உப்புமாவை விழுங்க முடியாது... தவித்துக் கொண்டிருந்தாள். தாயை வேதனையுடன் பார்த்தாள்.

''செத்துப் போயிட்டார்னு சொல்றது'' - பாட்டி இரைந்தாள்.

''எப்படி சொல்றது? பக்கத்து வீட்டு அம்மா மாதிரி எங்கம்மா நெத்தியிலே பொட்டு வச்சுகிட்டு இருக்காங்க. எங்கப்பா செத்திருந்தா, உங்களைப் போல பாழ் நெத்தியாதானே இருக்கணும்!''

துர்க்காவுக்கு துக்கம் தாங்க முடியலை. ''பரத் நீ விவரம் கேட்கிற வயசுக்கு வந்துட்டே. நானே சொல்றேன். உங்கப்பா பேர் அரவிந்தன். அவர் டாக்டர் வேலை பார்த்தார்னு முன்பே சொல்லியிருக்கேன். இப்போது மீதி உண்மையைச் சொல்றேன்...'' திணறினாள்.

''ஒண்ணும் நீங்க சொல்ல வேண்டாம்... என் வகுப்புப் பையன் ஒருவன் இன்னிக்கு அந்த உண்மையைச் சொல்லி என்னை வம்புக்கிழுத்தான்.''

''என்னடா சொன்னான்'' - பாட்டி அதட்டினாள்.

''எங்கம்மாவை எங்கப்பா விவாகரத்து செய்துட்டு வேறே ஒருத்தியை கட்டிக்கிட்டாராம். எங்கம்மா கெட்டவங்களாம். அதனாலதானாம்.''

''அப்படியா சொன்னான்'' - அலறித் துடித்துப் போனாள் துர்க்கா. கதை இப்படி திசை திரும்பி பள்ளிக் கூடத்து பாலகர்கள் பேசுமளவுக்கு படுமோசமாகிவிடும் என்று அவள் கனவிலும் நினைக்கவில்லை. காதும், மூக்கும், சிவக்க நெஞ்சு பதைபதைக்க மகனைத் திகைப்புடன் பார்த்தாள்.

''கோபம் தாங்கலை... அந்தப் பையன் தலை முடியைப் பிடித்து இழுத்து... குலுக்கி உங்கம்மாதாண்டா கெட்டவ. எங்கம்மாவைப்பத்தி ஏதும் பேசினே கொன்னு குழியை வெட்டி புதைச்சுடுவேன்னு அவன் தலையை சுவத்திலே மோதிட்டேன்.''



அவன் சொல்லி முடிப்பதற்குள் வாயில் அழைப்பு மணி அழுத்தமாக ஒலித்தது. கதவைத் திறந்தாள் துர்க்கா... கண்களில் நெருப்பு பறக்க ஓங்கி உயரமாக, கோபா வேசமாக ஒரு நடுத்தர வயதுடைய பெண் வாசலில் நின்றாள்.

''பரத் என்கிற பையன்... உன் மகன்தானே?'' எடுத்த எடுப்பிலே கேட்டாள்.

ஆமாம் என்று தலையை துர்க்கா ஆட்டுமுன்... அவள் ஆத்திரத்திலே படபடத்தாள்.

''என் பேரனை உன் மகன் பள்ளிக்கூடத்திலே அடிச் சுட்டு வந்திருக்கான். அவன் தப்பு ஒண்ணும் சொல்லலை யாம். மூலை வீட்டுப் பாட்டி யார்கிட்டேயோ சொல்லிக் கிட்டிருந்ததை பள்ளிக்கூடம் போகும் வழியில் கேட்டா னாம். அதை அப்படியே உன் மகனிடம் சொன்னானாம். அதற்குக் கோபம் வந்து உன் மகன் குழந்தையை சுவத்தில் மோதி நெத்தி புடைச்சுப் போறாப்பல அடிச்சு நொறுக்கிட்டானாம்.''

''என் பேரன் சொன்னதும் உன் மகனுக்கு கோபம் பொத்துகிட்டு வரது. ஊரே பேசறாங்களே. அதுக்கு அவன் என்ன செய்யப்போறான். போகட்டும் திக்கில்லாதவன்னு நான் இதை இத்தோட விடறேன். இன்னொரு வாட்டி உன் மகன் இப்படி துஷ்டத்தனமாக நடந்தா நான் பொல்லாத வளாகி விடுவேன்'' - வந்த வேகத்தில் அவள் கத்தி முடித்ததும் திரும்பிப் போனாள்.

''ஏண்டா... இதெல்லாம் உண்மையா?'' துர்க்கா துக்கத்தை அடக்க முடியாது அழுகை கலந்த குரலில் மகனை அதட்டினாள்.

''இன்னும் ஒண்ணு சொல்லிடறேன். இந்த வருஷத்தோட என்னை நீங்க வேற பள்ளிக்கூடத்திலே

சேர்த்தா படிக்கிறேன். இங்கே ரொம்ப பசங்களுக்கு இந்தச் சங்கதி தெரிஞ்சிருக்கு. என்னைக் கேலி பண்றாங்க. இல்லாட்டி படிப்பிலிருந்து என்னை நிறுத்திடுங்க ஆமாம்.''

''என்னடா உன் தாயாரை பயமுறுத்தி பார்க்கிறே. யாருக்காகப் படிக்கிறே, உன் நன்மைக்கு, உன் பிற்காலத்துக்கு படிக்கிறே தெரிஞ்சுக்கோ'' - ஞானம் குறுக்கிட்டபோது உப்புமா தட்டை எடுத்துச் சுவரின் மீது வீசினான் பரத்.

''கிழவி! வாயை மூடுங்க. கோடி வீட்டு பாட்டி என்னைக் கூப்பிட்டு உங்களைப் பத்தி நிறைய சொல்லியிருக்காங்க. நீங்கதான் என் அப்பா ஊரை விட்டுப் போகக் காரணமாம். எங்க அப்பாவை வீட்டை விட்டு துரத்தின பூதம் நீங்கதானாம்.''

''அடப்பாவி சண்டாளி! இந்தப் பக்கமும் சொல்லிக் கொடுத்து, அந்தப் பக்கமும் குத்திக் கொடுத்திருக்காளே அவள்.''

''அம்மா அப்பவே சொன்னேன், அவங்க பெரிய வம்புக்கார அம்மான்னு. நீங்க கேட்கலை.''

''எங்க அப்பாவை துரத்திவிட்டு, எங்க வீட்டிலே வந்து உட்கார்ந்துகிட்டு நல்லா சாப்பிட்டுவிட்டு அதிகாரம் வேற பண்றீங்களா?'' சிறுவன் கிரீச்சிட்டு அலறியதைக் கேட்டு அயர்ந்து போனாள் ஞானம். தாங்கொணா கோபத்துடன் அவள் உள்ளே சென்று தன் அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டாள். மகள் எத்தனை சொல்லியும் அன்று இரவு அவள் சாப்பிடவில்லை. பல முறை துர்க்கா மகனுக்காக மன்னிப்புக் கேட்ட பின்னர்தான் மறுநாள் காலை ஞானம் அறையைவிட்டு வெளியே வந்தாள்.



அதற்குப் பின்னர் அந்த வீட்டினுள் மயான அமைதி நிலவியது. பாட்டியும் பேரனும் பாம்பும் கீரியுமாக வளைய வந்தனர். மகளிடம் சரியா முகம் கொடுத்துப் பேசாது தன் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள் அம்மா.

ஒரு மாத காலம் இப்படியே இதே நிலையில் நழுவியது. ஒரு நாள் அம்மா திடீரென்று தன் முடிவைத் தெரிவித்தாள்.

''உன் அக்காவிடமிருந்து கடுதாசி வந்திருக்கு. என்னை அமெரிக்காவுக்கு வந்து தன் வீட்டைப் பார்த்துக்கொண்டு உதவக் கூப்பிடறா... டிக்கெட் விசா எல்லாத்துக்கும் ஏற்பாடு பண்ணப் போறாளாம். ஒருநாள் இல்லாட்டா ஒருநாள் நீ தனியாத்தான் இருக்கணும். சதா உன்னைக் கட்டிக்காத்துகிட்டு இருக்க எனக்கு மட்டும் சின்ன வயசா? உடம்பிலே தெம்பு இருக்கா? அமெரிக்காவுக்கு வான்னு கூப்பிடறா. அங்கேயெல்லாம் நான் போய்ப்பார்க்க உன்னாலே வசதி செய்து தரமுடியுமா? ஒரு பத்து நாள் பங்களூருக்கு அனுப்பக்கூட முடியலை'' - அம்மா கடுமையாகப் பேசியதும் திடுக்கிட்டுப் போனாள் மகள்.

தனக்குச் சாதகமாக இருக்கும்வரை... அவள் தன் இளைய மகளின் வீட்டையும் சம்பாத்தியத்தையும் உபயோகிக்கத் தவறவில்லை. இப்போது புதுவாழ்வு வெளிநாட்டில் கிடைக்கிறது என்றதும் கிளம்பி விட்டாளே?

தாயும் மகளும் என்றாலும் வாயும் வயிறும் வேறு என்பதை நிரூபிப்பது போல இரண்டு மாதங்களில் அம்மா தன் மூத்த மகளுடன் வசிக்க புறப்பட்டுப் போய்விட்டாள். அங்கே அவள் இங்கிருப்பதைவிட மிகவும் பாடுபட்டு

உழைக்க நேர்ந்தது. அதில் சோர்வடைந்து போய் இரண்டே ஆண்டில் இறந்துபோய்விட்டாள்.

அம்மா போய்விட்டதும் வீட்டு வேலையும் பள்ளிக்கூட வேலையும் ஒருங்கே தன் தலையில் விழ துர்க்கா மிகவும் திண்டாடிப் போனாள்.

ஆண்களையெல்லாம் எப்படியோ சமாளித்தாள். ஆனால் அக்கம் பக்கத்தவர்கள் அவளைப்பற்றி பேசிய அவதூறுகளைக் கேட்கப் பொறுக்காது பல தடவை துடித்தாள்.

அத்துடன் மட்டுமா?

பள்ளிக் கூடத்தில் வேலை நடுவே தொலைபேசியில் அவளை யாரோ ஒரு முரடன் சில தடவைகள் அழைத்து "என்ன இன்னிக்கு ராத்திரி தனியாத்தானே இருக்கே நான் வரலாமா?" என்று கொச்சையாக வேண்டுமென்றே கேட்டு அவமதித்தான். முகம் சிவந்து நெஞ்சு பதறிப் போனாள் துர்க்கா. ஆனால் உண்மையை அறியாத தலைமை ஆசிரியை அவளை அழைத்து கண்டிப்பாகப் பேசிவிட்டாள்.

"உன்னுடைய தனிப்பட்ட தொலைபேசி உரையாடல்களை நீ வீட்டில் வைத்துக் கொள்ளணும். யார் அவன்... அடிக்கடி பள்ளிக்கூடத்தில் வேலை நடுவே கூப்பிடறது" என்று அதட்டினாள். துர்க்காவுக்கு மிகவும் வெட்கமாகத் தானிருந்தது. யாரோ செய்கிற விஷமத்தின் விளைவு அவள் தலையிலா விழவேண்டும்?

எத்தனை விவரமாகச் சொன்னாலும் தலைமை ஆசிரியை கேட்டுக் கொள்ள மாட்டாள். அவளுக்குத் தன் கீழ் வேலை பார்க்கும் ஆசிரியைகள் அனைவரையும் ஆட்டிப் படைப்பதில் பரம திருப்தி.



அலுவலகத்திலிருந்த தலைமைக் கணக்கரிடம் சொல்லியிருந்தாள்.

"வயதில் நீங்க என் தந்தையைப் போல, அதனாலே உங்ககிட்ட கேட்டுக்கறேன் ஸார். எவனாவது அனாவசியமாக என்னைத் தொலைபேசியில் கூப்பிட்டால் நான் இங்கே வேலை பார்க்கலைன்னு சொல்லிடுங்க" என்று கேட்டுக் கொண்டிருந்தாள்.

அந்தத் தொலைபேசி உபத்திரவம் ஒருவாறு ஒழிந்தது. ஆனால் அதற்குப் பதில் பயங்கரமான மொட்டை கடிதங்கள் பல அவள் பெயருக்கு வந்தன.

ஒரு பெண் கணவனுடன் வாழாது, சின்ன வயதுக்காரி, அழகி, தன்னந்தனியாக இருக்கிறாள் என்று தெரிந்துகொண்டதும் யார் யாரோ வேலையற்ற தடியன்கள், முரடன்கள், அவளுக்குத் தங்களது ஆசையைத் தெரிவித்துக் கொச்சையாக, பச்சையாக கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தனர்.

அந்தப் பயங்கர கட்டத்தை அவள் எப்படியோ ஓட்டிவிட்டாள். போஸ்ட் பெட்டியைத் திறக்கும்போது நடுங்கிக்கொண்டு கடிதங்களை எதிர்பார்த்த நாட்கள் ஓடிவிட்டன. மகன் பதினைந்து வயது இளைஞனாக வளர்ந்து நின்றபோது தனக்கு இனி பயமில்லை... துணைக்கு வாட்ட சாட்டமாக ஒரு மகன் இருக்கிறான் என்ற தெம்பில் காலத்தை ஓட்டினாள்.

இப்போது அவள் நடுத்தர வயதைத் தாண்டி விட்டிருந்தாள். இன்னும் கொஞ்ச காலத்தில் வேலையினின்று ஓய்வடையப் போகிறாள்.

ஒப்பனை ஏதுமின்றி எளிய தோற்றத்தில் ஆடம்பரமில்லாத ஆடையில் கையில் குடையுடன் தோளில்

பையுமாக அவள் வெளியே புறப்பட்டால் முன்போல் அவளை சட்டென்று யாரும் திரும்பிப் பார்ப்பதில்லை.

வயது என்பதுடன் தள்ளாமையும் கூடவே நிழலாக வந்துவிட்டால் அதனால் பெண்களுக்கு ஏற்படும் பாது காப்பு எத்தனை?

வயதான பெண்ணைப் பார்த்து எந்த இளைஞன் சீட்டியடிக்கப் போகிறான்? யார் இந்த உருப்படி என்று எந்த முரடன் பேசப் போகிறான்? என்ற துணிவில் அவள் நிம்மதியாக வேலைக்குப் போய் வந்து கொண்டிருந்தாள்.

அன்று மாலை பள்ளிக் கூடத்தினின்று வந்தவள்... வாயிற் கதவைத் திறக்குமுன் போஸ்ட் பாக்சின் பூட்டைத் திறந்தாள். மூச்சு முட்டிவிடும் போன்றதொரு ஆனந்தம். வெளிநாட்டு விமானத் தபாலான நீலக் கடித உறையைக் கண்டதும் அவள் பரபரப்படைந்து போனாள்.

திருமண அழைப்பிதழ், சந்தா தொகையைப்பற்றி நினைவுறுத்தும் ஒரு கார்டு இவைகளை அசட்டையா வாரிக் கொண்டு தபால் பெட்டியைப் பூட்டிவிட்டு வாயில் கதவைத் திறந்தாள். உட்புறம் கதவைத் தாளிட்டுக்கொண்டு முன்னறைக்குள் வேகமாகச் சென்றாள். ஜன்னல் கதவு களை படபடவென்று திறந்தாள். மின்விசை விசிறியை லேசாகச் சுழலவிட்டுவிட்டு விமானத் தபாலுடன் சோபா ஒன்றில் சாய்ந்து கொண்டாள்.

மணிகளைக் கோர்த்தது போன்ற கையெழுத்து அதைக்கூட பாரம்பரியச் சொத்தாக மகன் பரத் தன் தந்தையிடமிருந்து பெற்றிருந்தான்.

டாக்டரின் கையெழுத்து மிகவும் மோசமாக இருக்கும் என்பது பொதுவாகச் சொல்லப்படும் பேச்சு. ஆனால் அதற்கு மாறாக அரவிந்தனின் கையெழுத்து முத்துச்சரம் போல மிக அழகாகவே இருக்கும். துர்க்கா



வின் கையெழுத்துத்தான் அத்தனை நன்றாக இருக்காது. ஒரு எழுத்துடன் மற்றொன்று இணைந்துகொண்டு படிப்பவரின் மனதில் திகைப்பூட்டும் கோணல் வடிவமான கையெழுத்து.

விரல்கள் நடுங்க, நெஞ்சு படபடக்க... மகிழ்ச்சியும் துன்பமும் கலந்த கலவை உணர்வில் திணறியபடி கடிதத்தைப் பிரித்துப் படித்தாள்.

அன்புள்ள அம்மாவுக்கு,

வணக்கங்கள் பல. நான் கல்லூரியில் சேர்ந்து ஹாஸ்டல் வாழ்க்கையை ஓரளவு ஏற்றுப் பழகிய பின்னர் பதில் அளிக்கலாம் என்று ஒத்தி போட்டதினால்தான் இந்தத் தாமதம். என்னிடமிருந்து கடிதம் வராததைக் கண்டு நீங்கள் மிகவும் மனம் சோர்ந்து விட்டிருப்பீர்கள் என்பதும் தெரியும். மன்னிக்கவும்.

உங்களிடம் நான் கொஞ்ச காலமாக ஒரு பெரிய உண்மையை மறைத்து வைத்திருந்தேன். அதற்காகவும் மன்னிப்பு வேண்டுகிறேன்.

உங்கள் மனநிலை எப்படி இருக்குமோ? என்று நேரில் சொல்லாது அதற்கு உரிய காலம் வரட்டும் என்று காத்திருந்தேன். அந்த உரிய காலம் இப்போது வந்து விட்டிருக்கிறது.

என்னுடைய இந்தப் படிப்பிற்கு ஒரு கனவான் மனமுவந்து உதவி செய்கிறார் என்று புறப்படும்போது சொன்னேன் அல்லவா? அவர் வேறு யாருமல்ல... என்னைப் பெற்றெடுத்த என் தந்தை டாக்டர் அரவிந்தன் அவர்கள்தான்.

''ஆமாம்! அவரை நீ எப்படிச் சந்தித்தாய்? உதவ முன்வருமளவு உங்களுக்குள் எப்படிப் பழக்கமேற்

பட்டது...'' என்ற கேள்விகள் எல்லாம் உங்களிடமிருந்து எழுவது நியாயமே!

ஞாபகமிருக்கா?

பள்ளிக்கூடத்தில் மாணவன் ஒருவனுடன் வம்புச் சண்டை போட்டுக்கொண்டு வந்த அன்றிலிருந்து என் மனதில் ஒரே தீவிரம். என் தந்தையை எப்படியாவது சந்தித்துப் பேசிவிட வேண்டும் என்று கட்டுக்கொள்ளாத ஆசை. சில சமயம் நம்மையறியாது சில எதிர்பாராத சந்தர்ப்பம் நம்மை நோக்கி வந்து நிற்கும் இல்லையா? அப்படிப்பட்டதொரு நிகழ்ச்சி சில ஆண்டுகளுக்கு முன் என் வாழ்க்கையிலும் ஏற்பட்டது. என் பள்ளித்தோழன் ஒருவனின் தந்தை நோய்வாய்ப்பட்டு நர்ஸிங்ஹோம் ஒன்றில் அனுமதிக்கப்பட்டிருந்தார்.

அவரைப் பார்க்க நண்பனுடன் போயிருந்தேன். அந்த நர்ஸிங்ஹோமின் டாக்டர் என்னை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு வியப்புடன் ஆமாம் ''நீ... டாக்டர் அரவிந்தனுடைய மகன் பரத்தானே?'' சொல்லி வைத்தாற் போலக் கேட்டார்.

''ஆமாம்'' என்று தலையசைத்தேன். கண்களில் நீர் ததும்பி துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டது.

''டோன்ட் வொர்ரி பாய்!'' என்று என்னை அன்புடன் தழுவிக் கொண்டு தமது அறைக்குள் அழைத்துச் சென்றார் அந்தப் பெரியவர்.

''டாக்டர் அரவிந்தன் ரொம்பத் திறமைமிக்க அறுவை சிகிச்சை நிபுணன். அவரை இந்த நர்ஸிங்ஹோம் இழந்துவிட்டது ஒரு பெரிய துர்ப்பாக்கியம். அதைவிட இந்தச் சின்ன வயசில் நீ உயிரோட இருக்கிற ஒரு ஒப்பற்ற தந்தையை இழந்து விட்டது பெரும் துர்பாக்கியம். இது தொடர்ந்து நீடிக்கக் கூடாது. இதைத் தவிர்க்க வேண்டும்.



உன்னைப் பார்த்ததும் என் மனதில் ஒரு எண்ணம் ஏற்படுகிறது. ஒப்புக்குவியா?'' கேட்டார்.

பனிரெண்டு வயதுப் பள்ளிச் சிறுவன். அவர் ஒரு பிரபல டாக்டர், அறிவாளி, அனுபவஸ்தர். அவரிடம் குறுக்குக்கேள்வி கேட்க இயலுமா? ஆகட்டும் என்று தலையசைத்தேன். கன்னத்தில் உருண்ட கண்ணீரைத் துடைத்துக் கொண்டேன்.

நீ ஒரு ஆண்பிள்ளை, அழக்கூடாது என்று முதுகில் தட்டிக் கொடுத்தார் அவர். ''நேற்றுதான் தொலைபேசியில் டாக்டர் அரவிந்தன் என்னை பம்பாயிலிருந்து அழைத்தார். ஒரு சர்ஜிகல் கான்பரன்ஸிற்கு அவர் அமெரிக்காவிலிருந்து வந்திருக்கிறாராம். தாம் தங்கியிருக்கும் ஹோட்டலின் தொலைபேசி எண், அறையின் எண், நான் தொடர்பு கொள்ள உரிய நேரம் எல்லாவற்றையும் கொடுத்தார்.

''இன்று உன்னை நான் எதிர்பாராத விதமாகச் சந்திக்கிறேன். தெய்வத்தின் திருவருள் என்றுதான் நான் இந்தச் சந்திப்பை நினைக்கிறேன். ஏன் என்றால் நேற்று அரவிந்தனோடு பேசும்போது என் மனதில் அவனது மகனது நிழல் ஒன்று தோன்றி சஞ்சலப்படுத்தியது.

''நான் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன்.''

''இன்று இரவு டாக்டர் அரவிந்தனுடன் நான் பேசப் போகிறேன். கட்டாயம் அவர் சென்னைக்கு வர வேண்டும். என்னை வந்து நர்ஸிங்ஹோமில் சந்திக்க வேண்டும் என்று வற்புறுத்துவேன். அவர் வரும் நேரம் நாள் முதலியவற்றைக் குறித்து உன் நண்பனிடம் பள்ளிக்கு அனுப்பி வைப்பேன்.

''நீ யாரிடமும் எதுவும் கூறாமல்... நான் சொன்னபடி இங்கே வந்தால்... உன் தந்தையை நீ நேரில் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கும்.''

''உன் தாயாரிடம் இதைப்பற்றி தெரிவித்தால் ஒரு சமயம் இந்தச் சந்திப்பு நிகழாது போய்விடலாம். அதனால் நீ ரகசியமாக உன் மனதில் வைத்துக் கொள்வது நல்லது'' என்றார்.

அந்த இரண்டு நாட்கள் நான் எப்படி ஆவலில் துடித்தேன் என்பதைச் சொல்லவே தேவையில்லை.

பள்ளிக்கூட நண்பன் கொண்டுவந்த கடிதத்தின்படி அன்று மாலை பள்ளிக்கூடம் முடிந்ததும் நேரே அந்த நர்ஸிங்ஹோமுக்குப் போனேன். டாக்டர் வந்து என்னை வரவேற்பறையிலிருந்து தாமே தமது அறைக்குள் அழைத்துச் சென்றார்.

என்னைக் கண்டதும் எழுந்து கைகளை நீட்டிக் கொண்டு வந்த மனிதரைப் பார்த்ததும் என் உடம்பெல்லாம் புல்லரித்துப் போனது.

''பரத்!'' என்று அவர் கையை நீட்டிப் பிடித்து தமது அருகே இழுத்துக் கொண்டபோது... ''அப்பா... அப்பா'' என்று என்னையுமறியாது நன் அழுதுவிட்டேன்.

நீங்கள் நம்புவீர்களோ என்னவோ... என்னை மார்போடு அணைத்துக்கொண்டு அப்பா அழுதார்... நானும் விக்கி விக்கி அழுதேன்.

ஒருவாறு டாக்டர் எங்கள் இருவரையும் சமாதானப் படுத்தி ஆறுதல் வார்த்தை சொன்னதும் அப்பா... தாம் வாங்கி வந்த சாக்லட் டப்பாவை எனக்குத் தந்தார். அதைத் திறந்து ஒரு சாக்லெட் கட்டியை எடுத்து சரிகை காகிதத்தை உரித்து பாதியை கடித்துவிட்டு மீதியை அவர் வாயில் நான் திணித்தபோது டாக்டர் சிரித்தார். அப்பா சிரித்தார். நானும் சிரித்தேன். அன்று நான் அடைந்த மகிழ்ச்சியை மன நிறைவை உங்களுக்கு நான் வார்த்தைகளால் விவரிக்க இயலாது.



எனக்காக அப்பா சென்னையில் அந்த டாக்டர் நண்பர் வீட்டிலேயே ஒருவார காலத்துக்கு மேல் தங்கியிருந்தார். அந்த ஒரு வார காலத்திலும் நான் ஒவ்வொரு நாள் காலை, பகல், மாலை மூன்று வேளையிலும் என் தந்தையைச் சந்தித்தேன்.

பள்ளிக்கூடத்து தோட்டத்திலே வந்து நின்று கொண்டு என்னோடு வெகுநேரம் பேசினார். பகல் உணவுக்குத் தம்முடன் நண்பரின் காரில் என்னை பெரிய ஹோட்டல்களுக்கு அழைத்துச் சென்றார். மாலை இருவரும் சேர்ந்து சினிமா பார்த்தோம்.

நண்பன் ஒருவனுடன் ஹாஸ்டலில் பரீட்சைக்கு படிப்பதாகச் சொல்லிவிட்டு முதல் முதல் நான் ஒரு வாரம் வீட்டைவிட்டு வெளியே தங்கியிருந்தேன். அந்த நண்பன் என் தந்தை.

அதற்குப் பின் ஒவ்வொரு வருஷமும், பரீட்சைக்கு படிக்க ஹாஸ்டலுக்கு போய் நண்பனுடன் தங்குவதாக ஒரு வாரம், இரண்டு வாரம் கிளம்பி விடுவேன்.

அப்போதெல்லாம் என் தந்தை அமெரிக்காவிலிருந்து வந்து எனக்காக ஒட்டலில் அறை எடுத்துக் கொண்டு சேர்ந்து சாப்பிட்டு, ஊரைச் சுற்றி வந்து, பலபல பேசி மகிழ்வது வழக்கம்.

என் படிப்புச் செலவுக்கு அவ்வப்போது அப்பா தாராளமாக எனக்கு பணம் அனுப்பி வந்தார். அதை நான் ஒரு வங்கியில் சேமித்து வைத்துக் கொண்டிருந்தேன்.

உபகாரச் சம்பளத்தில் படித்தேன். அப்பாவோடு கூடவே வாழ வாய்ப்பு இருந்திருந்தால் நானும் டாக்டருக்குப் படித்திருப்பேன். அந்தக் குறையை நிவர்த்திக்க அப்பா என்னை ஹாஸ்பிட்டல் அட்மினிஸ்ட்ரேஷன் எனும் படிப்பிற்கு லண்டனுக்கு அனுப்பி வைத்து ஆவன

செய்துள்ளார். இந்தப் படிப்புச் செலவு முழுவதின் பொறுப்பு அவருடையது.

ஷீத்ரு விமான நிலையத்தில் வந்து சந்தித்த அப்பா என்னை ஆனந்தத்துடன் கட்டி அணைத்துக் கொண்ட போது அவரது இதயத் துடிப்பை என்னால் உணர முடிந்தது.

கன்னங்களில் கோடிட்ட அவரது கண்ணீரை நான் மெல்ல என் கைக்குட்டையால் துடைத்து விட்டேன்.

''அப்பா... எனக்கு இப்படி ஒரு வெளிச்சமான வருங்காலம் அமைத்துக்கொடுக்கிறீங்களே, அதுக்கு நன்றி'' என்றபோது அவர் நெகிழ்ந்துபோனார். ''உன் அம்மாவை சுகமாக வைத்துக் காப்பாற்ற முடியாது. விதி ரொம்பவே சதி பண்ணிவிட்டது.

''அதை நினைச்சு நான் வேதனைப்படறேன்'' என்றார்.

அம்மா... நான் என் தந்தையை ரொம்ப நேசிக்கிறேன். அவர் ஒரு பண்பான மனிதர். திறமை மிக்கதொரு அறுவை சிகிச்சை நிபுணர். அவரைத் தகப்பனாக அடைந்ததைப்பற்றி பெருமைப்படறேன். அம்மா, உங்களையும் நான் உயிருக்குயிராக நேசிக்கிறேன். இப்போது என் மனதில் ஒரு அலாதியான நிறைவு ஏற்பட்டிருக்கிறது. இதுதான் நான் பிறகு சொல்கிறேன் என்ற ரகசியம்.

- உங்கள் அன்புள்ள மகன் பரத்.

தாரையாகக் கண்ணீர் கன்னங்களில் வழிய உணர்ச்சிக் குமுறலின் உந்துதலைத் தாங்காது அப்படியே வெகுநேரம் அவள் உட்கார்ந்துவிட்டாள்.



## 8

கடிதத்தை மீண்டும் ஒருமுறை படித்தாள். மடித்து பத்திரமாக மேஜையின் இழுப்பறைக்குள் வைத்துவிட்டு குளியலறைக்குள் புகுந்தாள்.

சில்லென்று ஷவரில் பூவாய் உதிர்ந்த நீரில் குளித்து விட்டு மாற்றுடை அணிந்து கொண்டு பூஜையறை விளக்கை ஏற்றிவிட்டு கையில் மீதமாக வைத்திருந்த உணவை எடுத்து காஸ் அடுப்பில் சூடாக்கிக் கொண்டு சாப்பிட உட்கார்ந்தாள்.

ஒரு பக்கத்தில் சுவரோடு ஒட்டியிருந்த முக்காலி மீது ஒரு பூசட்டியருகே சாய்ந்தவாக்கில் சமீபத்தில் எடுத்த பரத்தின் போட்டோவை வைத்திருந்தாள்.

பற்கள் அனைத்தும் தெரிய கண்களின் ஓரங்களில் இருக்கும் வெடிச் சிரிப்பு நிலையில் எடுத்த படம்.

''பார்த்தீங்களா அம்மா. நான் முடிவில் என் அப்பாவோடுபோய் சேர்ந்திட்டேன்'' என்பது போன்ற பாவனையில் தெரிந்த அந்த சிரித்த முகத்தைப் பார்த்ததும் அவள் கண்கலங்கிப் போனாள்.

அந்த வீடு முன்னைவிட பெரிதாகிவிட்டது போலும். அதற்குள் சூன்யமாகிவிட்ட அந்த வீட்டிற்குள் அவள் உடல் சிறுத்துப் போய் ஒரு சிறு புள்ளியாகத் தன்னந்தனியாக தவிப்பது போன்ற பிரமையில் இடிந்து போய் உட்கார்ந்துவிட்டாள்.

இத்தனைக்கும் காரணமாக இருந்த அவளுடைய அம்மா தக்க சமயத்தில் மகளைவிட்டுப் பிரிந்துபோய் விட்டாள்.

துணை என்று நம்பியிருந்த ஒரே மகனும் இப்போது அப்பாவுடன் இணைந்துகொண்டுவிட்டான்.

இத்தனை அன்பும் ஆசையும் காட்டும் தந்தையை விட்டு அவன் இனி தாய் பக்கம் வரப்போகிறானா? ஊகூம்.

மூன்றாண்டு படிப்பு முடிந்ததும் எங்கேயாவது வெளிநாட்டு ஆஸ்பத்திரியிலேயே அவனுக்கு தந்தை அரவிந்தன் தகுந்த வேலை வாங்கித் தந்துவிடுவார்.

பிறகு அவனுக்குப் பிடித்த பெண்ணைப் பார்த்து அவனே திருமணம் செய்து கொண்டு அப்பாவுடன் அதிகப் போக்குவரத்து வைத்துக்கொண்டு அம்மாவுடன் பட்டும் படாமலும் 'ஹலோ ஹவ் ஆர் யூ' என்று கேட்கும் அளவிற்கு விலகிப் போய்விடப் போகிறான்.

அம்மாவின் பேச்சைக் கேட்காது அவள் அரவிந்தன் செய்த தவறை பெருந்தன்மையுடன் மறந்து மன்னித்து விட்டிருந்தால்...

இப்போது மாலதி இருக்கும் இடத்தில் அவள் கௌரவமாக உட்கார்ந்திருப்பாள். அவள் அனுபவிக்கும் சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டு... அரவிந்தனுடன் உலகம் முழுவதும் பவனி வந்துகொண்டு... மகன் பரத்தை ஒரு பிரபல அறுவை சிகிச்சை நிபுணனாகத் தந்தை வழியில் உருவாக்கக் கணவனுக்குத் துணை செய்து கொண்டு...

எல்லாம் மண்ணாகிப் போனது. பரத் டாக்டருக்குப் படிக்கும் வாய்ப்பு தனக்கில்லாது போய்விட்டதைப்பற்றி கசப்புணர்வுடன் அவளை வெறுக்கிறான்.

''பரத்! ப்ளீஸ், என்னை வெறுத்து ஒதுக்கிவிடாதே. எனக்கு உன்னைத் தவிர யாருமே இல்லையடா கண்ணா''



தாங்க முடியாத துயரத்தில் எழுந்து சென்று அவனது புகைப்படத்தை எடுத்து மார்புடன் அணைத்துக்கொண்டு உரத்த குரலில் தேற்றுவார் இன்றி அழுதாள்.

அன்று அவளுக்கு உணவு வேப்பங்காயாக இருந்தது. உறக்கம் லேசில் வரவில்லை.

நாட்கள் வேகமாக நகர்ந்தன. வாரத்திற்கு ஒருமுறை பரத்திடமிருந்து அவளுக்குக் கடிதம் வந்தது.

முதல் கடிதத்தில் அவன் தெரிவித்த விஷயங்களை அப்படியே நிறுத்திவிட்டிருந்தான்.

அவன் தந்தை எங்கு வசிக்கிறார்? முகவரி என்ன? கடிதமூலம் அவன் தொடர்பு கொண்டு வருகிறானா? அவன் சின்னம்மா எப்படி இருக்கிறாள்? இரண்டாவது மனைவி மூலம் அரவிந்தனுக்கு எத்தனை குழந்தைகள்? பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள அவள் மனம் ஆவல் கொண்டது. மகனுக்கு அதுபற்றி எழுத அவளுக்கு வெட்கமாக இருந்தது. துணிவும் இருக்கவில்லை.

அவனது முதல் கடிதத்திற்கு சுருக்கமாக அவள் பதில் போட்டாள். சின்ன வயதிலிருந்து உள் மனதில் வளர்ந்து கொண்டிருந்த ஆவலை எதிர்பாராத சந்திப்பின் மூலம் நீ பூர்த்தி செய்துகொண்டுவிட்டாய் என்பதுபற்றி மகிழ்ச்சி.

கல்விக்கு உன் தந்தை உதவுகிறார் என்பதுபற்றி எனக்கு ஆட்சேபனை ஏதும் இல்லை. மறுப்பு சொல்ல தகுதியும் இல்லை. அவர் கல்விக்கு கைகொடுத்து உதவும் தந்தை, உன் மரியாதைக்கும் அன்புக்கும் தகுதியானவர்.

உன்னைப் பெற்று வளர்த்து ஓரளவு ஆளாக்கப் பாடுபட்டது தாய் என்பதை நீ என் மூச்சு முடியும்வரை உணர்ந்து என்னையும் துளியளவு நேசித்தால் போதும். எப்படியாவது, எங்கேயாவது நீ க்ஷேமமாக இருந்தால்

அதுவே எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி தரும் செய்தி. உடம்பை கவனித்துக்கொள். கவனமாகப் படி - அம்மா துர்க்கா.

அதற்குப் பின்னர் அவனிடமிருந்து வந்த பதிலில் அப்பாவைப்பற்றிய தகவல் எதுவும் இருக்கவில்லை.

அம்மாவின் மனதை நோகச் செய்ய வேண்டாம் என்ற காரணம் போலும். அவன் தன் ஹாஸ்டல் வாழ்க்கை, படிப்பு, ஊரின் சிதோஷ்ண நிலை இவைகளை மட்டுமே அவ்வப்போது எழுதி அவளது உடல் நலனை விசாரித்துக் கொண்டிருந்தான்.

அவனது படிப்பு, உடல் நலன் பற்றி விசாரிப்பு செய்து அவளும் சுருக்கமான பதில் எழுதினாள்.

இப்படியே ஓராண்டு காலம் ஓடிவிட்டது. அவளுக்கே நம்ப முடியவில்லை. ஆனால் தனிமையில் இந்த ஓராண்டு காலத்திலே அவள் மிகவும் வயதானவள் போல ஆடிப்போய் விட்டிருந்தாள்.

முட்டிக்காலில் நோவு, கழுத்தில் வலி, வெய்யிலில் நாட்டமில்லாத ஒரு வெறுப்பு என்று பல தொந்தரவுகள் அவளைச் சங்கிலித் தொடராக பிடித்துக் கொள்ளத் தொடங்கின.

ரத்த அழுத்தமும் துவங்கி விட்டிருக்கிறது. உப்பைக் குறைத்து பத்தியமாக சாப்பிட வேண்டும். அனாவசியக் கவலைகூடாது. வெய்யிலில் அலைவது தவறு. வயதாகி விட்டால் இந்த மாதிரி நோய் வருவது சகஜம் என்று அவளைப் பரிசோதித்த வைத்தியர் ஆலோசனை பல வழங்கி சாப்பிட ஒரு மாத்திரையும் எழுதிக் கொடுத் திருந்தார்.

வாழ்க்கைதான் உப்பு சப்பில்லாது வரண்டு போய்விட்டது. இப்போது வாய்க்கு ருசியாக உப்பும்,



காரமும் கூடிய சாப்பாட்டில்கூடவா மண்விழ வேண்டும்? அவளுக்கு மிகவும் துக்கமாக இருந்தது. இரத்த அழுத்த நோய் என்று அவள் நினைத்தபோது படுக்கையில் சுருண்டு கொள்ள முடியவில்லை. வீட்டுவேலைகளைச் செய்ய ஒரு அரை நேர வேலைக்காரி இருந்தாள். ஆனால் அவளுடன் நின்று மல்லுக்கட்டினால் ஒழிய அத்தனை பெரிய வீட்டை தூசு போகப் பெருக்கித் துடைத்து, சுத்தமாக வைத்துக் கொள்வது ஒரு பெரும் பாடாக இருந்தது.

முன்னெல்லாம் விடுமுறை நாட்களில் வீட்டுத் தோட்டத்தை தானே சீர் செய்யக் கூடை, கத்திரிக்கோல், மண்குத்தி இத்யாதியுடன் காலையிலேயே கிளம்பிவிடு வாள்.

மரங்கள் உதிர்க்கும் சருகுகளைப் பெருக்கிக் கூடையில் சேர்த்து அதை எரிக்க வெட்டி வைத்திருக்கும் குழிக்குள் போட்டு நிரப்புவதற்குள் வியர்த்து விறுவிறுத்து, மூச்சடைக்கத் திணறினாள். இப்போது வீட்டைத் தன்னந் தனியே நிர்வகிப்பது என்பது நாளடைவிலே அவளை பயமுறுத்தியது. குளியலறைக் குழாய் ஒன்று ஒழுகிக் கொண்டிருந்தது. மாடியறைக்குப் போகும் வழியில் உயரமாகப் பதித்திருந்த மின்விளக்கு அவிந்து போய் பல நாளாகியது.

இவைகளைச் சரி செய்யப் பிளம்பரைத் தேடிக் கொண்டு போக, மின்விசை தொழிலாளிகளைத் தேட... அவளுக்கு உடம்பில் சக்தியில்லை... நேரமும் இருக்க வில்லை. வீட்டில் உள்ள பொருள் போட்டது போட்டபடி கிடப்பதைக் காண அவளுக்கு எரிச்சலாக இருந்தது.

ஜன்னல் விளிம்பில்கூட தூசி தெரியாது தினமும் சுத்தமாகத் துடைத்து வரவேற்பறையை ஒரு கண்காட்சி

சாலையைப்போல வைத்திருந்த காலம்போய்... அது இப்போது ஒரு இரும்புப் பட்டறைபோல சாமான்கள் நாலா பக்கமும் கிடக்க அலங்கோலமாகத் தெரிந்தது.

அவளால் கடினமாகப் பள்ளிக்கூடத்தில் உழைத்து விட்டு, வீட்டையும் கவனிக்க இப்போது சிறிதும் முடிய வில்லை.

தக்க ஆட்களை நியமிக்கலாம் என்றாலோ பொருளாதாரம் இடம் தரவில்லை.

கோடை விடுமுறை வந்ததும் அவள் தனியே வீட்டில் தங்கிக்கொண்டு தவித்துப் போவாள்.

திருமணமாகி அவர்கள் தனிக்குடித்தனம் செய்யும் காலத்தில், கோடை விடுமுறையின்போது அரவிந்தன் தன் வேலையினின்று பத்து நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு அவளை ஊட்டி, கொடைக்கானல் முதலிய குளர்ச்சியான இடங்களுக்கு அழைத்துச் செல்வதுண்டு.

அவனைப் பிரிந்த பின் வாழ்க்கையில் ஓய்வு ஏது? குளிர்ச்சி ஏது? நெருக்கமாக அவளுடன் பழகியவர்கள் எல்லாம் வெகு தூரத்தில் இருந்தார்கள். அவரவர் வாழ்க்கை அவரவர்களுக்கு என்றாகிவிட்ட இந்த வயதில் அவளை யார் நினைத்துக்கொண்டு வா என்னோடு, வந்து தங்கு என்று அழைத்துக் கொண்டாடப் போகிறார்கள்? அக்கா, அண்ணா இருவரும் அம்மாவிற்குப் பின் அவளை ஒரேயடியாக மறந்து போயினர். கடிதப் போக்குவரத்தே அபூர்வமாகிவிட்டபோது அந்த உறவினர்களிடம் அனு சரணையை எப்படி எதிர்பார்ப்பது?

''உங்களுக்கு ஒரு போன் வந்திருக்கு'' - எதிர்வீட்டுப் பெண் ஓடிவந்து மூச்சிரைக்க சொன்னதும் அவள் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்து கதவைப் பூட்டிக்கொண்டு ஓடினாள்.



எஸ்.டி.டி.யில் பங்களூரிலிருந்து அவள் தோழி ஜயந்தி அவளைக் கூப்பிட்டிருந்தாள்.

அந்த எதிர் வீட்டில் இருப்பது அவளுக்குத் தெரியு மாம். எதிர்வீட்டு மருமகன் அவளது தூர உறவுக்காரப் பிள்ளையாம். ஒரு தடவை பெங்களூருக்கு அவர்கள் வீட்டுக்கு வந்தபோது பேச்சுவாக்கில் கேட்ட செய்தியாம். அதை மறக்காது ஞாபகப்படுத்தி வைத்துக்கொண்டு ஜயந்தி அவளை போனில் கூப்பிட்டாளாம்.

''உனக்கு விவரமா ஒரு கடிதம் போடணும். முகவரியைச் சொல்லு. உன்னால் இங்கே பங்களூருக்கு வந்து என்னோட வீட்டில் எனக்குத் துணையாக ஒரு மாதம் இருக்க முடியுமா? யோசிச்சு நான் போடுகிற கடுதாசிக்கு பதில் போடு.'' அவசரமாகப் பேசினாள் ஜயந்தி.

''ஓ.கே. அப்படியே செய்யறேன்... உன் கடிதம் வரட்டும்'' என்றாள் மகிழ்ச்சியுடன்.

இது உண்மையா? இப்படி அவளுக்கு ஒரு அழைப்பா? வியப்பில் மூழ்கிப் போனாள் துர்க்கா.

இரண்டு தினங்களில் அவளுக்கு ஜயந்தி விபரமாக ஒரு கடிதம் போட்டிருந்தாள்.

அவளது மகனும், மருமகளும் ஒருமாத கால ஓய்வில் உலகம் சுற்றப் புறப்பட்டுவிட்டனர். கல்யாண மாகாத சின்ன மகன் மட்டும்தான் தற்போது அவர்களது அல்சூர் பங்களாவில் கூடத் துணைக்கு இருக்கிறான். சின்னவன் எம்.பி.ஏ. முடித்துவிட்டு அவனது அண்ணா வின் கம்பெனியிலேயே வேலை பார்க்கிறவன். அவ்வளவு பெரிய வீட்டில் தன்னந்தனியாக இருக்க அவளுக்கு சங்கடமாக இருக்கிறது. பேச்சுத்துணைக்கு யாராவது கூடவே இருந்தால் பொழுது சுவாரஸ்யமாகக் கழியும்

என்ற நம்பிக்கை. கார், டிரைவர் எல்லா வசதிகளும் இருக்கின்றன. வேண்டியபோது விரும்பிய இடங்களுக்கு துர்க்காவை அவள் கூட்டிச் செல்வாள். போக வர டிக்கெட் செலவைக்கூட அவளே மேற்கொண்டு ஆவனசெய்ய விரும்புகிறாள்.

கல்லூரித் தோழி என்ற உரிமையில் வந்து கூடத் தங்க வேண்டும் என்று அழைக்கிறாள். சென்னையில் இப்போது மண்டை வெடிக்கும் வெயிலாம். தண்ணீர் கஷ்டமாம். மின்வெட்டு தொல்லை வேறு என்று கேள்விப் பட்டாளாம்.

பங்களூரில் சீதோஷ்ணம் மோசமில்லை. சில நாட்கள் நன்றாக மழை பெய்கிறது. சமையல் சாப்பாடு என்ற எந்த அவசியமுமின்றி அவள் ஏன் ஒருமாதம் தோழியோடு பழைய கதைகளைப் பேசி மகிழ, ஒய்வாக இருக்க, துணை கொடுக்க, வரக்கூடாது? வரப் பிரியம் என்றால் உடனே கடிதம் போட்டால் எல்லா ஏற்பாடு களும் செய்வாள். கண்டோன்மெண்ட் நிறுத்தத்தில் தயாராகக் காருடன் வந்து காத்திருந்து அழைத்துச் செல்வாள் என்ற விஷயத்தை, நாலு பக்கங்களில் நிரப்பி எழுதி அனுப்பியிருந்தாள் ஜயந்தி.

யாராவது அழைத்து உபசரிக்க மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருந்த துர்க்காவுக்கு இந்தச் சந்தர்ப்பத்தை நழுவவிடப் பைத்தியமா என்ன?

உடனடியாக ஒப்புதல் தந்து கடிதம் போட்டு விட்டாள். எதிர்வீட்டுக்காரருடன் தொடர்பு கொண்டு பிருந்தாவனம் எக்ஸ்பிரசில் அவள் புறப்படத் தேவைப் பட்ட பயணச் சீட்டை வாங்கித் தர ஜயந்தி ஏற்பாடு செய்துவிட்டாள்.



அவுட் அவுசில் குடியிருந்த பெரியவரிடம் வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு... தேவைப்பட்ட சில சாமான்களை ஒரு பெட்டியில் அடுக்கிக் கொண்டு புறப்பட்டாள்.

இத்தனை உதவி செய்யும் தோழியை பல ஆண்டு களுக்குப் பிறகு சந்திக்கப் போகிறோம். கல்லூரி நாட்களிலேயே அவளுக்கு நெய் முறுக்கு என்றால் பிரியமாச்சே. கிருஷ்ண பகவானை சந்திக்கப் புறப்பட்ட குசேலர்கூட, வெறுங்கையோடு போகவில்லையே...? எண்ணியவளாய் தனக்குத் தெரிந்த ஒரு பலகாரத் தயாரிப்பு அம்மாவிடம் ஏற்பாடு செய்து... ஐம்பது முறுக்குகளைத் தயாரிக்கச் செய்து வாங்கிப் பத்திரமாகக் கட்டிக் கொண்டு புறப்பட்டாள்.

கண்டோன்மெண்ட் நிறுத்தத்தில் கைப்பெட்டியை யும் முறுக்குக் கூடையையும் தூக்கிக்கொண்டு இறங்கின வள்... சுற்று முற்றும் திகைப்புடன் பார்த்துக் கொண்டு நின்றாள்.

ஜயந்தியைப் பார்த்து எத்தனை ஆண்டு காலமாகி விட்டது...? என்ற கலவரம்.

''என்ன துர்க்கா! பயணம் சௌகரியமாகத்தானே இருந்தது'' என்று கேட்ட இரட்டை நாடி தோற்றம் கொண்ட கண்ணாடி அணிந்த முன் நெற்றி முழுவதும் நரை ஓடிய பெண்மணியா... ஜயந்தி? கல்லூரி நாட்களில் கதாநாயகியாக கொடிபோல... துவண்டு... நாடக மேடையில் அழகாக நடித்து கையொலியும், பரிசையும் தட்டிக்கொண்டு போகும் கெட்டிக்கார மாணவி ஜயந்தியா அது...?

''ரொம்ப கிழவியாயிட்டியே ஜயந்தி...'' என்று கூறிக் கொண்டு சாமான்களை போர்டரிடம் தந்துவிட்டு அவளது கைகளை அன்போடு பற்றினாள்.

''நீ மட்டும் எப்படியிருக்கே...? இனிமேலே நாமெல்லாம் பாட்டிதானே... மூத்தவளுக்கு இன்னும் குழந்தை ஏதும் பிறக்கவில்லை... கல்யாணமாகி ரெண்டு வருஷமாகுது. பகவான் கிருபையில் சீக்கிரம் ஒரு குழந்தை பிறந்துட்டா நான் உறவில் பாட்டியாகிவிடுவேன். இப்ப சத்தியா நாமிருவரும் வயதில் பாட்டிகள்தானே'' சிரித்தாள் ஜயந்தி.

அவள் மகன் நரேந்திரன்... ''நான்தான் உங்க சிநேகிதியின் சின்ன மகன் பெரியம்மா...'' என்று உறவு சொல்லியபடி தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

சட்டென்று அவளுக்கு மகன் நினைப்பு வந்து விட்டது. வயதில் ஏறக்குறைய நரேந்திரன் அவள் மகன் பரத்தை ஒத்தவனாக இருப்பான்.

காரின் பின் கதவைத் திறந்து... இரு பெண்களும் ஏறிக்கொள்ள உபசரித்துவிட்டு... காரை ஓட்டினான் நரேந்திரன்.

அல்சூர் சாலையில் அவர்களது வீடு ஒரு பெரிய தோட்டத்திற்குள் அந்தக் காலத்தில் கட்டப்பட்டு, சமீபத்தில் புது மாற்றங்களோடு காணப்பட்டது.

தோட்டத்தில்தான் எத்தனை சண்பக மரங்கள். அத்தனையிலும் இலைகளிடையே ஆரஞ்சு வண்ணத்தில் பூக்கள். கம்மென்று அவைகளின் வாசம் ஜன்னல் வழியே அவளுக்கு தோழி தந்துவிட்டிருந்த பெரிய அறைக்குள் வீசியது.



சண்பக மலரைக் கண்டால் அவளுக்கு ரொம்பவும் பிடிக்கும். அவளுக்காக வாங்கிய வீட்டுத் தோட்டத்து முன் பக்கம் அவள் ஒரு செடியை ஒட்டுப் பயிராக்க முயன்றாள். நன்றாக வளர்ந்து கொண்டு வந்த செடியில் ஒரே ஒரு மொட்டு அரும்பியிருந்தது. அந்தச் சமயத்தில்தான் அவர்களுக்குள் பிரிவு ஏற்பட்டது. சொல்லி வைத்தாற் போல அந்த மொட்டு விரியாது கருகிப்போய் சில நாளில் செடி தானே பட்டுப் போனது.

''அம்மா... அவர் வச்ச செடி பட்டுப் போச்சே...'' என்று ஒருநாள் அவள் மிக்க வேதனையுடன் அம்மாவிடம் சொன்னபோது... ''அவன் மனசுலே இருந்ததை போல செடியும் பட்டுப் போச்சு... செடி கொடிகளை நடக்கூட கைராசி வேணும்.''

''என் கணவர்... கைராசி உள்ள நல்ல டாக்டர்தான் அம்மா...''

''இனி அவன் உனக்கு எப்படிக் கணவன் ஆவான்... சட்டப்படிதான் விவாகரத்து வாங்கியாச்சே. ஏதாவது உளறிகிட்டு... பழைய குப்பையைக் கிளறாதே.''

ஜன்னல் அருகே... காற்றில் அசைந்த அந்த செண்பக மரத்து ஒவ்வொரு இலையும்... பூவும்... அதன் மணமும் ஏனோ அவளுக்குப் பழைய கதைகளை நினைவூட்டின. அவள் மனம் அரவிந்தனைப் பற்றித் தீவிரமாக சிந்தித்தது. திடீரென்று அவளுக்கு அவனைப் பார்க்கும் ஒரு யோகம் கிட்டியதென்றால்... அந்தப் பிரிவின்போது, நீதிமன்றத்தி லிருந்து திரும்பிப் பார்க்க அஞ்சி... வேகமாக அம்மா வுடன் ஒளிந்தபடி மறுபடியும் வேறு திக்கைப் பார்த்துக் கொண்டு ஓடுவாளா...

இல்லை... அரவிந்த்... என் மனதின் அடியில் உங்கள் மேல் நான் வச்சிருக்கும் அன்பு... நீறுபூத்த

நெருப்பாக இன்னமும் கனன்று கொண்டிருக்கு என்று சொல்வாள்! சொல்வாளா? அத்தனை துணிவு அவளுக்கு இருக்குமா?

சொல்லித்தான் பயன் என்ன? மாலதிக்கு விட்டுக் கொடுத்து ஒதுங்கிக் கொண்ட பிறகு மறுபடி அவரது வாழ்வில் அவள் குறுக்கிட இயலுமா?

''என்ன தீவிரமா யோசிச்சுட்டிருக்கே. உன் அறை பிடிச்சிருக்கா. இங்கே சீதோஷ்ணம் எப்படியிருக்கு?'' கேட்டபடி உரிமையோடு கட்டிலின் ஓரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள் ஜயந்தி. அவளது கணவன் காலமாகி சில ஆண்டுகள் தானாகியிருந்தது.

''பெரியவன் அசப்பிலே பார்த்தா அவர்போல இருப்பான். அவனும் மருமகளும் இல்லாம எனக்குப் பைத்தியம் பிடிச்சிடும்போல இருக்கு. சின்னவனும் அன்பான பிள்ளைதான். ஆனாலும் துர்க்கா இவங்கள்ளாம் என்கிட்ட காட்டாத அன்பு அவர் காட்டிய அன்பிற்கு ஈடாகுமா? அவர் போன பின்தான் ரொம்ப மனமுடைந்து போயிட்டேன். இறந்து போயிட்டார், என்ன அழுதாலும் திரும்பி வரமாட்டார் என்கிற நிலையிலேயே எனக்கு அவரை பிரிஞ்ச துக்கம் ஆறமாட்டேங்குது. இருபத்தஞ்சு வருஷத்துக்கு மேலே வாழ்ந்தாச்சின்னு மனதை சமாதானப்படுத்துகிறேன். ஆனால் உன் நிலைமை பரிதாபமானது. உசிரோடு அவரைப் பறிகொடுத்துட்டு பல வருஷம் நீ தனியா வாழ்ந்துகிட்டு இருக்க நேர்ந்ததை நினைச்சு வருத்தப்படறேன்.'' ஜெயந்தியின் தொண்டையை துக்கம் இறுக்கியது.

''நான் கொடுத்து வச்சது அவ்வளவுதான்.''

''அயாம் சாரி துர்க்கா. உன்னை விருந்தாளியாக தங்கக் கூப்பிட்டுவிட்டு மனவேதனைப்படும் பழைய



சங்கதியைப் பேசக்கூடாது. உன் மகன் எப்படியிருக்கிறான் அதைப் பத்தி சொல்லு. எப்போ ரிடையர்ட் ஆகப் போகிறே? மகனுக்கு ஏதாவது பெண் பார்த்திருக் கிறாயா?'' பேச்சை வேறு திக்கில் திருப்பினாள். பின்னர் நாட்கள் துரிதமாகக் கழிந்தன. சமையலுக்கு ஆள் வைத்திருந்தாள் ஜயந்தி. வேளைக்கு சமையற்காரம்மா வாய்க்கு ருசியாக சமைத்துப் போட்டாள். காலை வேளையில் சென்னையில் சுள்ளென்று எரித்தாற்போல வெயில் கடுமையாக இருக்கவில்லை. குளித்து மாற்றுடை அணிந்துகொண்டாலும் காப்பி பலகாரம் சாப்பிட்ட பின் காரில் ஏறிக்கொண்டு இருவரும் ஊரைச் சுற்றி வந்தனர்.

மகாத்மா காந்தி ரோட்டில் பல தடவை கடைகளுக்குச் சென்று வந்தனர்.

அருகிலிருந்த ஆஞ்சநேயர் கோவிலுக்குப் போய் வந்தனர். விதான்சவுதாவின் விளக்கு அலங்காரத்தைத் தோழியு டன் கண்டுகளித்தபடி, புல்தரையில் உட்கார்ந்து கொண்டு வறுத்த கடலையைக் கொறித்தபடி வெகுநேரம் இருவரும் பேசி மகிழ்ந்தனர். லால் பார்க், கப்பன் பார்க், அல்சூர் மார்க்கெட், சிட்டி மார்க்கெட் என்று ஜயந்தி அவளை அழைத்துக்கொண்டு நாளைக்கு ஒரு இடத்திற்கு போய் வந்தாள்.

பகல் உணவுக்குப்பின் நிம்மதியாகத் துர்க்கா தூங்கினாள். அப்படித் தூங்கி எத்தனை நாளாயிற்று!

பின்னர் மாலை சாப்பாட்டிற்குப் பின்னர் நகரத்தில் நடந்த சினிமாக்கள் எதையாவது போய் பார்த்துவிட்டு வந்தனர்.

நாட்கள் விரைவாக ஓடி மறைந்தன. ஊருக்குத் திரும்ப வேண்டும் என்று கவலைப்பட்ட துர்க்காவுக்கு சாதகமாக ஒரு செய்தியை ஜயந்தி மகன் எழுதியிருந்தான்.

அவர்களது வெளிநாட்டுப் பயணம் முடிய மேலும் சில வாரங்கள் பிடிக்கும் என்று தாயாருக்கு எச்சரிக்கை விடுத்திருந்தான்.

''அவசரப்படாதே. என் மூத்த பிள்ளை வந்த பிறகு நீ ஊருக்குப் போகலாம்'' என்று வற்புறுத்தி ஜயந்தி துர்க்காவைத் தடுத்து தன்கூட நிறுத்திக் கொண்டுவிட்டாள்.

துர்க்காவும் மறுப்பு அதிகம் தெரிவிக்கவில்லை. இத்தனை வசதியான ஒரு கவனிப்பு அவளுக்கு எங்கே கிட்டப்போகிறது? யார் அவளை அழைத்துக் கொண்டாடப் போகிறார்கள்?

''பல ஆண்டுகளுக்கு முன் பார்த்த நகரம். இப்போ ரொம்ப மாறிவிட்டிருக்கும் என்று நினைத்தேன். சில நாட்களில் எனக்கு எல்லா இடமும் தெரிஞ்சிவிட்டது. அருகில்தானே கமர்சியல் ரோடு இருக்கு. அங்கே கொஞ்சம் கடைகளுக்குப் போய் சில்லறை சாமான்கள் வாங்கணும். நானே போய் வருகிறேன்'' என்றாள் துர்க்கா.

''வேண்டாம் தனியே போக வேண்டாம். டிரைவரை அனுப்பறேன். காரில் போய் வேண்டியதை வாங்கிட்டு வந்துடு. பணம் தேவையின்னா கூச்சப்படாதே. பின்னால் சரிக்கட்டிக்கலாம்'' - சிநேகிதி வற்புறுத்தினாள்.

எதிர்வீட்டுக்காரரின் சின்னப் பெண் போனில் யாராவது எப்பவாவது அவளைக் கூப்பிட்டால் ஓடிவந்து தகவல் தருகிறாள்.

அவளுக்கு ஏதாவது ஒரு பரிசு வாங்கிக்கொண்டு போக வேண்டும்.

வீட்டைப் பொறுப்பாகக் கவனித்துக் கொள்ளும் அவுட் ஹவுஸ் தம்பதியருக்கு தான் ஊர்போய் வந்த அடையாளமாக ஏதாவது வாங்க வேண்டுமே. தன்னுள்



கணக்கிட்டுக்கொண்டுதான் அவள் அன்று கடைக்குக் கிளம்பினாள். முதல் நாள் மாலை நல்ல மழை. அதற்கு எதிர்ப்பு தெரிவிப்பது போல காலையிலேயே சூரியன் பளிச்சென்று சென்னையைப் போலக் கடுமையாகக் கிளம்பிவிட்டிருந்தது.

காரில்தான் அவள் கடைத் தெருவுக்குக் கிளம்பி யிருந்தாள். காலையிலிருந்து அவளுக்கு உடல்நிலை ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. என்ன என்று புரிந்து கொள்ளாத குழப்பம்.

லேசாக தலையை வலித்துக் கொண்டிருந்தது. அதிகமாக வேலை செய்தால் ஏற்படும் ஒரு அலுப்பு ஓய்வான நிலையில் உடலை தக்கைபோலத் துவட்டி விட்டிருந்தது.

மகனது பிரிவால் ஏற்பட்ட தாபத்தின் பாதிப்பு போலும். எண்ணியபடி அவள் கமர்சியல் தெருவில் எதிர்வீட்டுப் பெண்ணுக்கு ஒரு மாக்ஸி வாங்க ஒரு கடைக்குள் நுழைந்தாள்.

காலைவேளை, கூட்டமிருக்கவில்லை. விரைவாக வாங்கி முடித்துவிட்டுப் பார்சலுடன் வெளியே வந்தாள்.

திடீரென்று தன்னைச் சுற்றிலும் உள்ள எல்லாம் சுழல்வது போன்ற திகைப்பு. கண்கள் இருட்டிக்கொள்ள, தான் எங்கேயோ ஒரு பள்ளத்திற்குள் விழுவது போன்ற திகைப்பு.

''டிரைவர்'' என்று அவளையும் மீறி அலறி விட்டாள்.

ஜெயந்தி வீட்டு கார் நிறுத்தியிருந்த இடத்திற்கு அருகாமையில் வர இயலாது அதன் எதிர்ப்பக்கத்தில் உணர்வு இழந்து சரிந்து தெருவில் ஒரு பக்கம் விழுந்து

விட்டாள். நெருப்புக் குச்சியால் பல்லைக் குத்திக் கொண்டு சாவதானமாக உட்கார்ந்திருந்த கார் டிரைவர் ஓடிவந்து அவளைத் தூக்கிக் காரில் ஏற்றிக் கொள்வதற்குள் அவளைச் சுற்றி ஒரு கும்பல் கூடிவிட்டது.

## 9

மெள்ளக் கண்களை விழித்துக் கொண்டு பார்த்தாள் துர்க்கா.

வெள்ளை விரிப்பில் மெத்தென்று உடலைத் தழுவியதொரு படுக்கையில்... கட்டிலின்மீது அவள் கிடந்தாள்.

சின்ன நீலப் பூக்கள் தூவினது போன்று காணப்பட்ட பழுப்புக் காகிதம் ஒட்டிய அறைச் சுவரை வியப்போடு பார்த்தாள். எங்கிருந்தோ சிலு சிலுவென்று குளிர்ச்சி அறைக்குள் கொட்டிக் கொண்டிருந்தது. அருகேயிருந்த வெள்ளை மேஜைமேல் ஒரு கண்ணாடி டம்பளரில் நீர், பக்கத்திலே பஞ்சுக்குள் பத்திரமாக ஒரு கிண்ணத்தில் பொதித்து வைத்திருந்த உஷ்ணமானி - ஒரு சிறு ஸ்டீல் தட்டில் சிவப்பு, வெள்ளை, மஞ்சள் என்று வண்ணங்களில் சில மாத்திரைகள்.

அப்படியென்றால் அவள் ஒரு ஆஸ்பத்திரியிலா இருக்கிறாள்? அரசு ஆஸ்பத்திரியாக இருக்க முடியாது. இத்தனை வசதிகள் என்றால் இது ஒரு தனியார் மருத்துவ மனையாக இருக்க வேண்டும்.

ஆமாம்! அவள் எப்படி அங்கே வந்தாள்?

நிழல் போல எப்பொழுதோ கண்டதொரு கனவின் சில காட்சிகள் போல நடந்ததெல்லாம் மெல்ல ஒன்றன் பின் ஒன்றாக அவள் நினைவைப் புரட்டினாள்.



''அம்மா! என்னம்மா ஆச்சி!'' டிரைவர் கேட்டது கிணற்றுக்குள்ளிருந்து கேட்டதைப் போல மெல்லியதாக ஒலித்தது ஞாபகத்திற்கு வந்தது.

பின்னர் யாரோ இருவர் கைதாங்கலாகக் காரின் பின் ஆசனத்திலே அவள் மூட்டையாக சுருட்டிப் போடப் பட்டதும்,

''துர்க்கா! துர்க்கா'' என்று ஜயந்தி மெல்லிய குரலில் கூப்பிட்டதும் லேசாகக் கண் விழித்துப் பார்த்தபோது ஜயந்தியின் பங்களாவின் முன்புறத் தோட்டத்திலே நின்றதொரு சண்பக மரத்தின் ஒரு கிளை பூக்களோடு தென் பட்ட நினைவும்,

''ஊகூம் இவளை மருத்துவமனையில் வச்சு கவனிக்கணும். வீட்டிலே வச்சுப் பார்க்க சாத்யப்படாது. ஏதாவது மாரடைப்பு கேஸாக இருந்துவிட்டால்'' என்று ஜயந்தி பேசியதும்... ''சத்யா நர்ஸிங் ஹோம்'' என்று யாரோ கூறியதும்... கார் விரைந்ததும்... எங்கேயோ எடுத்துச் சென்றவரை... கோர்வையாக நடந்த சம்பவம் அனைத்தும் நினைவுக்கு வந்தது.

சத்யா நர்ஸிங் ஹோம் என்பது இதுவா? தனியார் மருத்துவமனையில் சிகிச்சை நடக்கிறது என்றால் பணம் ரொம்ப செலவாகுமே.

ஜயந்தி பணக்காரி. அவளுக்கு கார் சவாரி, கலர் டெலிவிஷன், உயர்மட்டத்து தனியார் மருத்துவமனை இத்யாதிகள் தண்ணி பட்டபாடு. உடம்பு சுகமானதும் ஊருக்குப் போகுமுன் அவள் முன் பெரியதொரு பில்லைப் பிறகு நீட்டினால்...

கழுத்து சங்கிலி, கைவளைகள் எல்லாவற்றையும் விற்றுதான் புறப்பட வேண்டியிருக்கும்.

கைவளைகள் போகட்டும், கழுத்து சங்கிலி. அந்த தங்கக்கொடித் தாலியுடன் தொங்கும் அதை அவள் எப்படிக் கழுத்திலிருந்து கழற்றுவாள்?

அரவிந்தன் அவள் கணவன் என்ற உண்மையை அவளுக்கு உணர்த்தியபடி சதா நெஞ்சை வருடிக் கொண்டிருந்த அந்தத் தங்கச் சரட்டை அவள் எப்படி விற்க முடியும்? தாலிக் கயிறு பிரித்துக் கட்டும் சடங்கெல்லாம் அவர்களது காதல் திருமணத்தில் நடக்கவில்லை. பத்து பவுன் எடைக்கு அழகானதொரு தாம்புக் கயிறு சங்கிலியை செய்யச் சொல்லி வாங்கி அவள் கணவன்தான் மஞ்சள் சரட்டிலிருந்த தாலியை உருவி அதில் கோர்த்து அவள் கழுத்திலே அணிவித்தான். அதனை அவள் விவாகரத் துக்குப் பின்னர் அம்மா எத்தனை வற்புறுத்தியும் கழற்ற மறுத்துவிட்டிருந்தாள். இப்போது திடீர் செலவினால் அவள் விரும்பாத ஒரு செயலில் ஈடுபட நேரிடுமோ?

அறைக் கதவைத் திறந்து கொண்டு நீலவண்ண அமெரிக்கன் ஜார்ஜெட் சேலைமீது வெள்ளைக் கோட்டும், கழுத்திலே ஸ்டெதஸ்கோப்பு மாலையும் தொங்க, தலைமுடியை தூக்கிக் கொண்டையிட்டுக் கொண்டு காதுகளில் சிறிய முத்து தோடும், முகத்திலே முத்துப்பல் தெரிந்த சின்ன சிரிப்புமாக நெட்டையான கொடி போன்ற உடல் வாகுடன் தெரிந்த ஒரு அழகான இளம் பெண் டாக்டர் நுழைந்தாள்.

கூட வந்த நர்ஸிடம் கன்னடத்தில் பேசியபோதிலும் கட்டிலின் அருகே வந்து அவள் குனிந்து கொண்டு கண்களில் சிரிப்பு நிழலாட அவளைப் பார்த்து ''எப்படி இருக்கீங்க? இப்போ எழுந்து உட்கார முடியுமா?'' என்று தமிழில் கேட்டாள். அந்தக் குரல் எத்தனை இனிமையாக இருந்தது!



கோட்டின் காலர் முகப்பிலே பிளாஸ்டிக் பட்டை யில் டாக்டர் நளினி என்ற பெயர் பொறித்திருந்ததை அவள் கவனித்தாள்.

நர்ஸிடம் டாக்டர் கன்னடத்தில் மறுபடி ஏதோ பேச அவள் வராந்தாவிலிருந்த நகரும் மேஜையொன்றை உள்ளே தள்ளிக்கொண்டு வந்து கட்டிலருகே நிறுத்தினாள்.

முதலில் துர்க்காவின் நாடித்துடிப்பை சோதித்து விட்டு டாக்டர் மேஜை மேலிருந்த ரத்த அழுத்த சோதனைக் கருவியை எடுத்து அவளது ரத்த அழுத்தத்தை பரிசோதித்த பின்னர் மார்பு, முதுகு முதலிய இடங்களில் ஸ்டெதஸ்கோப்பை வைத்து பரிசோதித்துவிட்டு நர்ஸ் கொடுத்த கேஸ் ஷீட்டில் சோதனை விவரத்தை எழுதி முடித்தாள்.

மார்பு சேலையை ஒழுங்கு செய்துகொண்டு எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்த துர்க்காவால் கேட்காதிருக்க முடிய வில்லை.

''டாக்டர் நீங்க எனக்கு என்ன உடம்புக்குங்கிற உண்மையைச் சொல்ல முடியுமா? கண்ணை விழித்துக் கொண்டு நிதானம் வந்ததும் நான் பார்த்தேன். சுவற்றிலே தொங்குகிற நாள்காட்டி காலாண்டரிலிருந்து இன்று தேதி பதினைந்துன்னு தெரிகிறது. அப்படின்னா நான் இங்கே இரண்டு நாளாவா தூங்கியிருக்கேன்!''

''முதல்லே நீங்கன்னு என்னை ரொம்ப மரியாதை போட்டு அழைக்கிறதை நிறுத்திட்டு நீ என்று ஒருமை யிலே அழையுங்கோ. வயசில் என்ன நான் உங்களுக்கு மகள்போல இல்லையா?'' நளினி கேட்டபோது துர்க்கா முகம் சிவந்து போனாள்.

''உங்களை இல்லை இல்லை உன்னைப்போல புத்திசாலியான படிச்ச அழகான பெண்ணை மகளாக

அடைய ஒரு தாய் ரொம்பக் கொடுத்து வச்சிருக்கணும். ஆமாம் எனக்கென்ன உடம்புக்கு வந்துடுத்து?''

''சாதாரணமாக இந்த வயதில் வரும் வியாதிகளில் ஒன்று ரத்த அழுத்தம். ரொம்ப நாளா இருந்திருக்கு. கவனிப்பில்லாமல் போக ரொம்ப அதிகமாகிவிட்டதால் மயக்கம் வந்து விழுந்துட்டீங்க. அதை திடீர்னு மருந்தால் இறக்கி ஓரளவு வயசுக்குரிய அழுத்த அளவில் கொண்டு நிறுத்த நல்ல ஓய்வு, வைத்தியர் கவனிப்பு, மருந்துகள் அவசியம். அதனாலே இங்கே கொண்டு வந்து அனுமதிச் சாங்க. ஒரு வாரம் கட்டாயம் இங்கிருக்கணும். மற்ற பரிசோதனைகள் எல்லாம் செய்து முடிச்ச பிறகுதான், வீட்டுக்கு அனுப்புவோம்னு உங்களை இங்கே அனுமதிச் சிருக்கோம்.''

தன்னுள் எழுந்த அச்சத்தை விழுங்கிக் கொண்டாள். விருந்தாளியாக தோழியுடன் வந்து தங்கப் போய் நோயாளியாகி, இப்போ உயர்மட்டத்து மருத்துவமனை ஒன்றில் வந்து சிக்கிக் கொண்டிருக்கிறாள். ஒரு வார காலம் அங்கே தங்கி உடம்பைக் கவனித்துக்கொள்ள அவள் பணத்திற்கு எங்கே போவாள்?

இப்படித்தான் அவள் வேலை செய்த பள்ளிக் கூடத்தில் ஒரு ஆசிரியை - அவளுக்கு மிகவும் பழக்க மானவள் நெஞ்சுவலி என்று மருத்துவமனையில் ஒரு இரவு அனுமதிக்கப்பட்டாள். இப்படித்தான் ஒரு ஏசி அறையின் குளிர்ச்சியில் நர்ஸ், ஸ்பெஷலிஸ்ட், ரத்த பரிசோதனை, ஈ. சி. ஜி. என்று பலவும் செய்து ஒருவார காலத்திற்குப்பின் வெளியேறியபோது, ஒன்றுமில்லை உடல் பலகீனம் அவ்வளவுதான் என்று அனுப்பினவர்கள் அவள் கையில் கொடுத்த பில்லைக் கண்டதும் உண்மை யிலேயே அவளுக்கு மாரடைப்பு வந்து மறுபடி ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுவிட்டாள். அத்தனை



பெரிய பில் அவள் நிலைக்கு கட்டுப்படியாகாத தொகை. அதனால் அவளுக்கு பலத்த மனஅதிர்ச்சி. அதே கதிதான் தனக்கு ஏற்படப் போகிறது என்று எண்ணிக் கலங்கியபடி அந்தப் பெண்ணைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

''இரத்த அழுத்தம் இறங்கிவிட்டதல்லவா? நான் மற்ற சோதனைகளுக்கு வீட்டிலிருந்து வந்து போய்க் கொண்டிருக்கிறேன். என்னை இன்னிக்கே வீட்டுக்கனுப்ப உதவி செய்ய மாட்டாயா?''

''வயதில் நான் உங்கள் மகளுக்கு ஒத்தவள் என்று சொன்னேன். ஆனால் இங்கே இப்போ நீங்க என் கவனிப்பில் இருக்கும் நோயாளி. நான் உங்களது டாக்டர். அதனால் நோயாளி என்னதான் வயதில் பெரியவங்களா தாய் போன்ற நிலைக்கு தக்கவங்களா இருந்தாலும் டாக்டர் சொல்வதைக் கேட்கணும் தெரியுமில்லையா?''

மௌனமாக துர்க்கா விழித்தாள்.

''ஒரு வார காலத்துக்கு மேல் நீங்க இங்கே தங்கியிருக்கணும். இன்னும் ஐந்து நாட்கள் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையாக இருங்கோ. நானே வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு விடுவேன்.''

''இனிமேல் அதிக வைத்தியம் தேவையிருக்காதே.''

''இன்னும் சில சோதனைகள் பாக்கியிருக்கு. ஒரு எக்ஸ்ரே எடுக்கணும். ரத்த பரிசோதனை இருக்கு. ஸ்பெஷலிஸ்ட் நாளை காலை மறுபடி வருவார். அவரது அபிப்ராயம் இப்போ என்னனு தெரிந்துக்கணும்.''

'இதுக்கெல்லாம் செலவு செய்ய எனக்குக் கட்டுப் படியாகாது டாக்டர்' என்று சொல்ல அவள் நாக்கு துடித்தது. வார்த்தைகளை மறுபடி விழுங்கிக் கொண்டாள். ''இந்த மருத்துவமனைக்கு நீதான் தலைவியா அம்மா... வேறே பெரிய டாக்டர்...?''

அவள் முடிக்குமுன் டாக்டர் நளினி களுக்கென்று சிரித்தாள்.

''நீங்க சொல்வது புரியுது. வயதில் சின்னவளா இருக்கே. உனக்கு இத்தனை பெரிய பதவியா... மேலும் ஆயிரம் பேரைக் கொன்னவன்தான் அரை வைத்தியன் என்பாங்க. அனுபவம் வேண்டாமா என்கிறீங்க இல்லையா?''

துர்க்கா தன்னையும் மீறி... அந்தப் பெண்ணின் பேச்சைக் கேட்டு மெல்ல சிரித்துவிட்டாள்.

''நான் இப்பத்தான் ஹவுஸ்ஸர்ஜன் வேலை முடித்து... இந்த மருத்துவமனையில் தொடர்ந்து பணிபுரிய ஆரம்பிச்சிருக்கேன். சட்டுன்னு உனக்கு வேலை கிடைச் சுட்டதான்னு கேட்காதீங்க. இந்த மருத்துவமனை தலைவர் என் அப்பாதான். கொஞ்ச நாள் இங்கே அவருக்கு உதவியா இருந்து வேலை கற்றுக் கொண்டு மேற் படிப்புக்கு நான் தயாராகணும்னு அவரது ஆசை.''

''உங்கப்பாவை நான் பார்த்து என் உடம்பு நிலையைப் பற்றிப் பேச முடியுமா?''

''அவசரப்படாதீங்க... என் அப்பாவை சந்தித்துப் பேச நான் வாய்ப்பு ஏற்படுத்தித் தரேன்.''

''அவரை நான் இன்று மாலை பார்க்க முடியுமா?''

''அவர் இப்போ ஊரில் இல்லை. பாங்காக்கில் நடக்கும் ஒரு மருத்துவக்கூட்டத்தில் கலந்து கொள்ளப் போயிருக்கார். நாளைக்கு அவர் சிங்கப்பூருக்கு வந்து விடுவார். அங்கே இரண்டு நாள் எங்க ஒன்றுவிட்ட மாமாவோட தங்கிவிட்டு இந்த வார இறுதியில்தான் ஊருக்கு வருவார்.''

''அதுவரையும்...''



''அதுவரை நாங்கள்தான் மருத்துவமனையின் பொறுப்பை நிர்வகிக்கிறோம். நாங்கள் என்றேனே அந்த இருவரில் நான் ஒருத்தி. உதவி டாக்டர் முக்கிய பொறுப்பை ஏற்பவர் அப்பாவுக்கு உதவியாக இங்கே வேலை பார்க்கும் முரளி. தம்து மேற்படிப்புக்கு அறுவை சிகிச்சையை எடுத்துக் கொண்டு பட்டம் பெற்றவர். இதைத் தவிர எங்கள் அவுட் பேஷண்டை கவனிக்க இரண்டு ஆண் டாக்டர்களும், பிரசவ அறை வார்டு, பெண்கள் சம்பந்தப்பட்ட நோய்கள் முதலியவற்றை கவனிக்க இரண்டு பெண் டாக்டர்களும் இருக்காங்க.''

''இது பெரிய ஆஸ்பத்திரின்னு சொல்லு...''

''ஓரளவு இந்த நகரில் பிரசித்தி பெற்ற மருத்துவ மனை.''

''அந்த முரளி டாக்டர் அவர் ரொம்ப கெட்டிக்காரர் போல இருக்கு. இல்லாவிட்டா இத்தனை பொறுப்பையும் இளவயதுக்காரரான அவரிடம் உன் அப்பா ஒப்படைச் சுட்டுப் போவாரா?''

''என்ன செய்கிறது, அவர்தானே அப்பாவின் வருங்காலத்து மருமகன்.''

''என்னம்மா சொல்றே?'' திகைப்பும் சிரிப்புமாகக் கேட்டாள் துர்க்கா.

''டாக்டர் முரளியோடு நான் மாலை ரவுண்ட்ஸ் போது வரேன். பார்த்துட்டு உங்க அபிப்ராயத்தை சொல்லுங்க. அவர் அப்பாகிட்டே உதவி டாக்டரா சேர்ந்தார். நான் இங்கே வரப்போக இருந்தப்போ என் கண்களில் பட்டார். மனதையும் தொட்டார்.

''அப்பாவுக்கு விஷயம் தெரிஞ்சு போச்சு. அவர் மறுப்பு சொல்லலை.''

''அப்படியா ரொம்ப சந்தோஷம் அம்மா. நீ தேர்ந்தெடுத்துவிட்டே. உங்கப்பா ஒப்புதல் தந்துட்டார்! என் அபிப்ராயம் எதுக்கும்மா...? அழைச்சுண்டு வா... மனம் நிறைஞ்சு உங்களை வாழ்த்தறேன்.''

''ஆரம்பத்திலே சொன்னேன். என்னை நீங்க வயதில் மகளாக பாவிக்கணும்னுட்டு. அதனாலே அம்மாவாக இருந்து ஒரு அபிப்ராயம் சொல்லக் கூடாதா?''

''உங்கம்மா சொல்லியிருப்பாங்களே.''

''அந்த பாக்கியம் எனக்கு இல்லை அம்மா. அதனாலே என்னவோ உங்களைப் பார்த்ததும் அந்த சொந்தத்தை ஏற்படுத்திக்கலாமான்னு மனம் துடிக்கிறது'' - நளினியின் குரல் தடைப்பட்டது.

சட்டென்று அந்தப் பெண்ணின் கரத்தைப்பற்றி தன் மார்போடு அணைத்துக் கொள்ள வேண்டும் போன்ற தொரு ஈர்ப்பு துர்க்காவுக்கு.

அவள் இப்போது அங்கு ஒரு நோயாளி. அந்தப் பெண் அவளை கவனிக்கும் டாக்டர். ஏதோ மனத்திற்கு தெம்பு கொடுக்க நெருக்கமா அந்தப் பெண் நேசபாவத்தோடு பேசுவதை வைத்துக் கொண்டு எல்லை மீறி எதுவும் சொல்லிவிடக்கூடாது, செய்யக்கூடாது.

''உன் அம்மா'' - என்று கேட்டுவிட்டு, பேச்சை நிறுத்தினாள்.

''என் அம்மா நான் சின்னப் பெண்ணாக இருக்கும்போது காலமாகிவிட்டாங்க. ஒரு சாதாரண காய்ச்சலில் போய்விட்டாங்க. உங்களால் நம்ப முடியாது. அப்பா ஊரில் இருந்த அத்தனை ஸ்பெஷலிஸ்டுகளையும் அழைச்சுக் காட்டினார். ஆனால் பயன்? அவங்க போய்ட்டாங்க...''



''வேறே... உனக்கு அண்ணன் தம்பி யாரும் கிடையாதாம்மா...''

''ஒரே ஒரு அண்ணா இருக்கார். அவர் வெளி நாட்டில் படிக்கிறார். படிப்பு முடிஞ்சதும் அவர் எங்களோடு இந்த நர்சிங்ஹோமில் வேலைக்கமர்ந்து விடுவார்.''

''சந்தோஷம். உனக்கு பாசமும் பரிவும் காட்ட ஒரு அண்ணா இருக்காரே அதுவரை நீ கொடுத்து வச்சவ.''

''என் அண்ணா ரொம்ப என்கிட்ட பிரியம் வச்சிருக்கார். எனக்கு அவர் மேலே ரொம்ப பாசம். அப்பாவுக்கு நான் ரொம்ப செல்லம். இருந்தாலும், ஒரு தாய் இல்லாத குறையை நான் அடிக்கடி உணர்வதுண்டு.

''ஒரு பெண்ணுக்கு அவள் வளரும் பருவத்திலே தாயைப் போல ஒரு துணை வேறு யாரும் இருக்க முடியாது. அவங்ககிட்ட தானே மனதை விட்டு உணர்ச்சிக் கொந்தளிப்பையெல்லாம் கொட்ட முடியும்?''

துர்க்கா கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டாள். அந்த வார்த்தைகள் ஒவ்வொன்றும் ஆணி அறைந்தாற் போல் அவள் தலையில் இறங்கின.

''ஒரு இளைஞன் வளரும் பருவத்திலே தந்தையின் துணையை மிகவும் விரும்புவான். அது மிகவும் அவசியம்கூட. அப்பாவுடன் பகிர்ந்து கொள்ளும் சில ரகசியங்களை... ஒரு இளைஞன் எப்படியம்மா தன் தாயிடம் மனம்விட்டுப் பேசிப் பகிர்ந்து கொள்ள முடியும்?''

பரத்... இங்கிலாந்திலிருந்தபடி, உரத்துக் கேட்பது போலவும் அந்த ஒவ்வொரு வார்த்தைகளும் அவள் காதில் காற்று வாக்கில் வந்து மோதுவது போலவும் பிரமையால்

திடுக்கிட்டுப் போனாள். உண்மை. வயதில் மிகவும் சிறியவள் நளினி. அறிவில் எத்தனை பெரியவளாக இருக்கிறாள்?

வளர்கின்ற பெண்ணுக்கு ஒரு தாயின் அருகாமை மிகவும் அவசியம். அதுபோல வளர்ந்து ஆளாகின்ற ஒரு பிள்ளைக்குத் தன் தந்தையின் அருகாமையும் துணையும் மிகவும் தேவை.

ஒரு பெண்ணும், பிள்ளையும் இருக்கிற அவர்களது குடும்பத்தில் ஒரு தாய் இருந்திருக்க வேண்டும். பாவம் சின்ன வயசிலேயே தாயைப் பிரிந்துவிட்டாளா இந்தக் குழந்தை!

சின்ன வயதில் தந்தையை உயிரோடு இழந்துவிட்டு தவித்த என் மகனைப் போல இவள் பல தடவை அந்த இழப்பை நினைத்துத் தவித்திருக்கவேண்டும்.

''எல்லாம் இருந்தும் உனக்கு இப்படி ஒரு இழப்பா? அதை நினைச்சு நான் வருத்தப்படறேன். என்கிட்டே இத்தனை பிரியமா பேசறியே. உன்னைப்போல எனக்கு ஒரு பெண் இல்லையேன்னு இருக்கும்மா.''

''அதுதான் முதலிலேயே சொல்லிட்டேனே. என்னை நீங்க உங்க மகளாக நினைச்சுக்கோங்க. நான் உங்களை தாயாக மதிக்கத் தெரிஞ்சுக்கறேன். ஆனால் இந்த நர்சிங்ஹோமில் இருக்கும்வரை நான் டாக்டர். நீங்க நோயாளி. நான் சொன்னதைக் கேட்டுக்கிட்டு நடந்துப்பீங்க. ஓ.கே...'' கலகலவென்று சிரித்தாள்.

முன்பின் தெரியாத ஒரு பெண் எத்தனை அன்போடு பாசத்தோடு பழகுகிறாள். டாக்டருக்குப் படிச்சிருக்கோம், பெரிய நர்சிங்ஹோமின் தலைவருடைய பெண், உயர்மட்டத்துவாசி என்று துளிக்கூட கர்வமில்லையே.



வியந்து போனாள் துர்க்கா. அவளுக்கு டாக்டர் நளினியை ரொம்பவும் பிடித்துவிட்டது.

''அம்மா... வைத்தியத்துக்கு சம்பந்தமில்லாததை யெல்லாம் நாம் பேசிக்கிட்டிருந்தோமே... இந்த நர்ஸ் இருக்காளே... அவளுக்குத் தமிழ் கொஞ்சமும் தெரியாது. அந்தத் துணிவில்தான் நான் உங்ககிட்டே நிறைய பேசிட்டேன். உங்களைப் பார்த்ததும் எனக்கு பேசணும்னு தோணிச்சு. மிஸஸ், துர்க்கா அம்மா உங்களை எனக்கு ரொம்பப் பிடிக்கிறது. உங்களுக்கு எத்தனை குழந்தை கள்?'' திடுக்கிட்டுப் போனாள் துர்க்கா. ''ஒரே ஒரு மகன். அவன் மேற்படிப்புக்கு லண்டன் போயிருக்கான். அவ்வளவு தான்.'' அடுத்து அந்தப் பெண் அவளது கணவனைப்பற்றி கேட்டுவிடப் போகிறாளே என்ற கலவரத்தில் படுக்கை விரிப்பை விரலால் நெருடிக் கொண்டிருந்தாள்.

கைக்கடிகாரத்தைப் பார்த்தாள் நளினி. ''ரொம்ப நேரம் உங்ககிட்ட பேசிக்கிட்டிருந்து விட்டேன் நான். மாலை நேரமிருந்தால் வார்ட் ரவுண்டின்போது அவரை கூட அழைச்சுக்கிட்டு வரேன்'' - கண்களைச் சிமிட்டி விட்டு வேகமாக அறையினின்று நர்ஸ் பெண்ணுடன் விரைந்து விட்டாள்.

அப்பாடா என்று பெருமூச்செறிந்தாள் துர்க்கா. நல்ல வேளை அவள் இந்த வரம்பிற்கு மேல் அதிகம் பேசாதது நல்லதாய்விட்டது. ஒரு சின்னப் பெண்ணிடம் அதுவும் கல்யாணத்திற்குக் காதலுடன் காத்திருப்பவளிடம் நான் விவாகரத்து செய்து கொண்டவள், என் கணவரும் ஒரு டாக்டர்தான், இப்போது அவர் தமது இரண்டாவது மனைவியுடன் அமெரிக்காவில் இருக்கார் என்ற விவரத்தை சொல்லிக் கொள்ள தேவைதானா?

அன்று மாலை அவளைப் பார்த்துப்போக ஒரு கூடை நிறைய திராட்சை, சாத்துக்குடி, ஆப்பிள் பழங்களுடன் ஜயந்தி வந்தாள்.

''இரண்டு நாளா அரை நினைவா படுத்துக் கிட்டிருந்தே. நான் ரொம்ப பயந்துட்டேன். முதல் நாளே ஸ்பெஷலிஸ்ட் பார்த்துட்டு சொன்னார். கவலைப்பட வேண்டாம்னார். நம்ப அனுமார் கோவிலுக்குப் போய் உனக்காக ஒரு அர்ச்சனை பண்ணிட்டு வந்தேன். பழக் கூடை பக்கத்தில் பர்ஸில் வைத்திருந்த பிரசாத பொட்டலத்தையும் வைத்தாள்.

''ஒரு வாரம் தங்கணும்னு சொல்றாங்க.''

''டாக்டர் சொல்வதை இனியாகிலும் கேட்டு நட. உடம்பை கவனிச்சுக்காம நீ ரொம்பக் கெடுத்து வச்சுக் கொண்டிருக்கே. நல்லவேளை இங்கே வந்தே. இதே மாதிரி உன் வீட்டில் நீ தனியா இருக்கறப்போ மயக்கம் போட்டு விழுந்தா என்ன ஆகியிருக்கும்.''

''ஒரு சமயம் என் கதை முடிஞ்சிருக்கும். பரத் வர அது நன்மையாக இருக்கும்.''

''கசப்பா பேசாதே துர்க்கா. வாழ்க்கை வாழ்வதற் குன்னு இனியாகிலும் தெரிஞ்சுக்கோ. தொலை தூரம் போயிருக்கிற அந்தக் குழந்தைக்கு நீ இப்படி உடம்புக்கு முடியாம படுத்திட்டேன்னு தெரிஞ்சா எப்படி இருக்கும்? அதை யோசி.''

பரத்தின் நினைவு நெஞ்சை இறுக்க துர்க்கா கண் கலங்கிப் போனாள். ''இதானே ஆகிறதில்லை. இப்போ எதுக்காக வருத்தப்படணும்? நல்ல நர்சிங்ஹோமில் நல்ல கவனிப்பில் இருக்கே. எதுக்கும் கைகொடுக்க சிநேகிதி நான் இருக்கேன். சிங்கம்போல ஒரு பிள்ளை இருக்கான். அவன் தன் முன்னேற்றத்துக்காகப் போய் படிக்கிறான்.



இனிமேலே நீ உன் பிடிவாதத்தையெல்லாம் உதறிட்டு சுமுகமாக எல்லாருடனும் பழகிக்கத் தெரிஞ்சுக்கோ.''

''ஜயந்தி... என்ன இப்படி திடீர்னு எனக்கு புத்திமதி சொல்ல ஆரம்பிச்சுட்டே?''

''நீ எப்படி இருக்க வேண்டியவ... சுயபுத்தி இழந்து தாயாரின் பேச்சைக் கேட்டுக்கிட்டு எப்படி இறங்கிப் போனேன்னு எல்லாம் எனக்குத் தெரியும். அந்தப் பழைய விவரம் வேண்டாம்னு நானும் ஒதுக்கிட முயலுகிறேன். அதுதான் என் நினைவில் முதல்லே வந்து நிற்கிறது. அந்தப் பெண் டாக்டர் நளினி எப்படி இருக்கா பாத்தியா?''

''அழகா இருக்கா ஜயந்தி. அவளை எங்கேயோ பார்த்தது போல ஒரு நினைவு என் மனதிலே அடிக்கடி தோணுது. குணம் தங்கக் கம்பி.''

''உன்னை நல்லா கவனிச்சுக்கறா இல்லையா?''

''ரொம்ப நல்லா கவனிச்சுக்கறா.''

''டாக்டர் சொல்படி இங்கே இருந்துட்டு மெதுவா நீ வீட்டுக்கு வரலாம். செலவெல்லாம் பத்தி கவலைப் படாதே. எல்லாத்தையும் பிறகு சரிக்கட்டிக்கலாம்.''

ஜயந்தி சிறிது நேரம் அவளுடன் இருந்து வார்த்தை யாடிவிட்டுப் போனாள்.

சிறிது பொழுதில் மாலை மங்கி இருட்டத் துவங்கியது. எழுந்து அவள் அறைக்குள் மெல்ல வளைய வந்தாள். கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள். குப்பென்று மருத்துவமனையின் விளக்குகள் அனைத்தும் எரியத் தொடங்கின. பளிச்சென்று பெருக்கித் துடைத்த வராந்தாக்களும், அதன் மேல் வெள்ளைச் சீருடையில் டக்டக்கென்று பாதொலி எழுப்பி நர்ஸ் பெண்களும்

இங்குமங்கும் போய்க் கொண்டிருந்த பார்வையாளர் களுமாக மருத்துவமனை கலகலத்துக் கொண்டிருந்தது.

டாக்டர் உத்தரவின்றி அவள் அங்குமிங்கும் போவது தவறு ஆயிற்றே. அச்சத்தில் கதவை சாத்திக்கொண்டு படுக்கை மீது வந்து உட்கார்ந்தாள். மாலைப் பொழுது அவளுக்குப் பணிவிடை செய்ய உள்ளே வந்த நர்ஸ் உதவிசெய்ய, அவள் முகத்தைக் கழுவி, முடியை சீராக்கிக் கொண்டு, சாப்பிடக் கொடுத்த மாத்திரைகளை, விழுங்கி விட்டிருந்தாள். கதவை லேசாகத் தட்டுவது கேட்டது.

உள்ளே வரலாம் என்று குரல் கொடுத்தாள். தூய வெள்ளை சபாரிஸூட்டில் ஜம்மென்று கச்சிதமாகத் தெரிந்த ஒரு இளம் டாக்டருடன் நளினி கஞ்சி மொடமொடப்பில் புஸ்ஸென்று விரிந்த ஆரஞ்சு வண்ண வாயில் புடவையில் உள்ளே வந்தாள்.

தலை கொள்ளாத கனகாம்பரம் கொண்டையை அலங்கரித்தது. செம்மை படர்ந்த அவளது கன்னங்கள் அவளது காதலுக்கு பராக்கு தெரிவித்தன.

''மிஸஸ் துர்க்கா அம்மா! டாக்டர் முரளி உங்களைப் பார்த்து ஹலோ சொல்ல வந்திருக்கார். இரண்டு நாளா நீங்க அரை மயக்கத்திலிருந்ததால் உங்களை அவர் தொந்தரவு செய்ய மனமில்லாமல் பார்த்துட்டுப் போய்க் கொண்டிருந்தார். இன்னிக்கு நீங்க நல்லா இருக்கீங்கன்னு சொன்னதும் பார்க்க வந்திருக்கிறார்.''

''அப்படியா! வணக்கம் டாக்டர். எப்படியோ உங்க முயற்சியால உடம்பு குணமாகிவிட்டிருக்கு. மத்த சங்கதிகளை சீக்கிரம் செய்து முடிச்சு என்னை சென்னைக்கு அனுப்பிட்டா ரொம்ப நன்றி உள்ளவளா இருப்பேன்.''

''அப்படியா?'' லேசாக முரளி முறுவலித்தான்.



அவர்கள் இருவரையும் குழல்விளக்கு வெளிச்சத்தில் ஏற இறங்கப் பார்த்தாள்.

''நல்ல ஜோடிப் பொருத்தம்!'' யாரோ நெஞ்சை கையால் பிசைவது போன்ற வேதனையில் ஒரு கணம் முகம் சுருங்கிப் போனாள்.

இப்படித்தான் அவளையும் அரவிந்தனையும் பார்த்தவர்கள் ஜோடிப் பொருத்தம் அபாரம் என்றார்கள்.

ஆனால் மனப்பொருத்தம் நீடித்ததாக இல்லாது போய்விட்டது. அவர்களது ஜோடிப் பொருத்தம் சிதைந்து போய்விட்டது.

''நாங்க இரண்டு பேரும் வார்டு ரவுண்டுக்குப் பிறகு சாயங்காலம் சினிமாவுக்குப் போக ஏற்பாடு.''

''நாட்டி கேர்ள். நீ செய்கிற தப்பு தண்டாக்களை அவங்ககிட்ட சொல்லணுமா?'' முரளி செல்லமாகக் கடிந்து கொண்டான்.

''அவங்க ஏன் அம்மாபோல, நான் எங்கே போறேன் வறேன்னு இதுவரை சொல்ல எனக்கு யாரும் இல்லை. இப்ப ஒரு பெரியவங்க கிடைச்சிருக்காங்க. சொல்லிகிட்டு வரேன்'' என்று அவள் பதிலுக்குச் செல்லமாகக் கடிந்து கொண்டாள்.

அந்தக் காதல் நாடகத்தை மன நிறைவோடு ரசித்தாள் துர்க்கா. இளமை என்பதற்கு ஒரு போஷனை தரும் சக்தி என்பார்கள். இது எத்தனை பெரிய உண்மை.

இந்த இளங்காதலர்களைப் பார்க்கும்போது மனதிலே ஒரு நிறைவும், புத்துணர்ச்சியும், காயகல்பம் செய்து கொண்டுவிட்டது போன்றதொரு இளமையின் தெம்பும் அவளுக்கு ஏற்படுகின்றனவே.

''நல்லா போய் படம் பார்த்துட்டு மகிழ்ந்துட்டு வாங்க'' வாழ்த்தினாள்.

''குட்நைட்'' என்று கூறிவிட்டு இருவரும் ஜோடியாக அறையினின்று வெளிப்பட்டனர். சாத்திக்கொண்ட கதவைத் திறந்துகொண்டு உள்ளே மறுபடியும் தனியாக நளினி ஓடிவந்தாள்.

''மாப்பிள்ளை எப்படி?'' என்று கேட்டபடி அருகில் வந்து நின்ற நளினியின் கன்னத்தை அன்போடு வருடினாள் துர்க்கா. ''உனக்கேத்தவர். இரண்டு பேர்களும் சவுபாக்கியங்களுடன் நீடூழி வாழணும்னு பிரார்த்தித்துக் கொள்கிறேன்.''

''தாங்க் யூ மம்மி'' திடீரென்று அந்தப் பெண் நளினி குனிந்து தன் குளிர்ந்த உதடுகளை அவள் கன்னத்தில் வைத்து கட்டி முத்தம் கொடுத்துவிட்டு சிட்டாக வெளியே பறந்துவிட்டாள். உடலும் உள்ளமும் உணர்ச்சி வசப்பட்டு தான் பெற்ற மகள் தந்ததொரு அன்புப் பரிசுபோல அவளது உதடுகள் பட்ட தன் கன்னத்தை மெல்ல மெல்ல தொட்டுப் பார்த்துக் கொண்டாள் துர்க்கா. அவளது கண்களில் நீர் புரண்டது.

## 10

நளினி கூறியபடி அடுத்த நாள் அவளைக் கவனமாகப் பரிசோதிக்க மருத்துவ நிபுணர் ஒருவர் வந்தார்.

எக்ஸ்ரே, இ.சி.ஜி., ரத்தப் பரிசோதனை என்று அவள் நாளைக்கு ஒரு சோதனையில் ஈடுபட நேர்ந்ததில் அந்த ஒரு வாரகாலம் ஓடி மறைந்ததையே உணர முடியவில்லை.

காலை, மாலை, இரவு மூன்று வேளைகளிலும் டாக்டர் நளினியின் வீட்டிலிருந்து அவளுக்காகத் தயாரிக்கப்பட்ட உணவை பையன் ஒருவன் எடுத்து வந்தான்.



பரிசோதித்து மருந்து கொடுத்து கவனிப்பது போதாதுபோல் அந்தப் பெண் பத்தியமாக சாப்பாட்டையும் தன் வீட்டிலிருந்து தயாரித்து உபசரித்ததைக் கண்டு அவள் நன்றியில் நெகிழ்ந்து போனாள்.

ஆனால் ஒன்றே ஒன்று அவளது மனதை மெல்ல அரிக்கத் தொடங்கியது. ஜயந்தி நல்லதொரு தோழி. நளினி நல்ல அன்பான டாக்டர். சத்யா மருத்துவமனை ஒரு பிரபலமான அமைப்பு. அதில் நோயாளிகளை நன்றாகவே கருத்துடன் கவனித்துக் கொள்கிறார்கள்.

ஆனால் முடிவில் கணக்கிட்டு அவள் கையில் கொடுக்கப்படும் பில்லை அவள்தானே கட்டியாக வேண்டும். அவசரத்திற்கு ஜயந்தி கடன் கொடுத்து உதவலாம். ஆனால் உடனுக்குடன் தீர்த்தால்தானே நட்பு நீடிக்கும்.

ஆமாம் ஒரு நாளைக்கு அங்கே தங்கியிருக்க என்ன பிடிக்குமாம்? யாரிடமும் அவள் விவரம் கேட்காமல் நிம்மதியாக ஏ.சி. அறைக்குள் படுத்துத் தூங்கி, கொடுத்த மருந்தை விழுங்கிவிட்டு உட்கார்ந்திருந்தால் சரிப்பட்டு வராதே?

டாக்டரின் உத்தரவுப்படி அவள் வராந்தாவில் மெல்ல நடைப்பயிற்சி செய்தாள். தோட்டத்திற்குள் உலாவினாள்.

ஆனால் முன்பின் தெரியாத யாரிடமும் பேச முடியவில்லை.

''நாளை உங்களை ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்கு அனுப்பப் போகிறோம். முதலில் என் காரில் உங்களை

எங்கள் வீட்டுக்கு அழைச்சுட்டுப் போய் காப்பி, டிபன் கொடுத்து உபசரிக்கப் போகிறோம்'' என்றாள் நளினி.

''ஏம்மா உனக்கு அந்த சிரமமெல்லாம். ஜயந்திகிட்ட சொன்னால் நேரே வந்து அழைச்சிட்டு போயிருவா.''

''அவர்களுடைய அனுமதி பேரில்தான் உங்களை நான் எங்கள் வீட்டுக்கு அழைச்சிட்டுப் போகப் போறேன்.''

இந்தப் பெண் ஏன்தான் இத்தனை அன்பு காட்டு கிறாளோ தெரியவில்லை. எல்லாத்துக்குமா சேர்த்து வைச்சு பெரிய தொகைக்கு பில்லை நீட்டப் போகிறாள். அப்போது துர்க்கா அசடு வழிய நிற்கப்போகிறாள். எக்கச்சக்கமா இப்படி ஒரு சங்கடத்திலே மாட்டிக் கொண்டுவிட்டாளே. வீட்டில் இருந்திருந்தால் இப்படி ஒரு மயக்கம் வந்திருந்தால்...?

அவுட் அவுசில் வசிக்கும் தம்பதியர்கள் அவளை அப்படி ஒன்றும் தவிக்கவிட்டு விடமாட்டார்கள்.

அரசு ஆஸ்பத்திரியில் அனுமதித்து இருப்பார்கள். அல்லது ஒரு சாதாரண தனியார் மருத்துவமனையில் தங்கிக்கொண்டிருப்பாள்.

மாதச் சம்பளம், வீட்டு வாடகைப் பணம் எல்லா வற்றையும் சேர்த்துப்போட்டு எப்படியோ சமாளித்து விடுவாள்.

இப்போது?

அவளை தினமும் கவனித்துப் பார்க்கும் நர்ஸ் எதிர்பட்டாள். ''ஹலோ ஆண்ட்டி! ஹௌ ஆர் யூ டுடே!'' ஆங்கிலத்தில் கேட்டாள்.

அப்போது சட்டென்று துர்க்காவுக்கு அந்த யோசனை ஏற்பட்டது.



இந்தப் பெண்ணைக் கேட்டால்?

''நர்ஸ் இங்கே வாம்மா'' என்று ஆங்கிலத்தில் அழைத்தாள். சுற்றும் முற்றும் பார்த்தாள். ''தப்பாக நினைச்சுக்காதே. எனக்கு ஒரு உதவி செய்வியா?''

''என்னம்மா வேணும்?''

''நாளைக்கு இங்கிருந்து என்னை அனுப்பப் போறாங்க. உத்தேசமா என் பெயருக்கு எத்தனை தொகைக்கு பில் வரும்னு அந்தக் கணக்கரிடம் கேட்டு சொல்ல முடியுமா? நான் வெளியூர்க்காரி. அந்தப் பணத்தை கட்டிவிட்டு வெளியேற நான் பணத்தை தயாராக வச்சிருக்கணுமே.''

''நாங்களெல்லாம் இதுமாதிரி சங்கதிகளில் தலை யிடக்கூடாதும்மா. டாக்டர் ரொம்ப கோவிச்சுக்குவார். நாளைக்கு அனுப்ப போறதுன்னா நாளை காலைதான் கணக்கரே பில் தயாரிக்க ஆரம்பிப்பார்.''

''உத்தேசமா சொல்ல முடியாதா? இந்த நர்ஸிங் ஹோம் ரொம்ப பிரபலமானது என்கிறார்களே.''

''ஆமாம் பெரிய மனிதர்கள்தான் தங்க சாத்தியப் படும். இதை ஆரம்பிச்ச டாக்டர் அருணாசலம் பெரிய டாக்டர்.

''நல்ல விலைக்கு இந்த டாக்டர்கிட்டே வித்துட்டு போயிட்டார். வாங்கினவர் நல்லா பல அபிவிருத்தி செய்து வச்சிருக்கார். நல்ல மருத்துவ கவனிப்பு, பணிவிடைகள், சுத்தமான அறை, இத்யாதி கொடுப்பதால், நிறையவே பணம் வாங்குகிறாங்க. இப்ப விலைவாசிகள் அதிகமா யிட்டிருக்குதே.''

''அறைக்கு வாடகை என்ன இருக்கும்னாவது சொல்ல முடியுமா?''

''முன்னெல்லாம் நாள் ஒன்றுக்கு சாதா அறைக்கு நூறு ரூபாய், ஏ.சி, அறைக்கு நூற்றைம்பது வாங்கிட்டு இருந்தாங்களாம்... இப்போ கொஞ்சம் ஏத்திவிட்டிருக்காங் களாம்... மன்னிச்சுக்கோங்க... என் வார்ட் டாக்டர் காத்துட்டு இருப்பார்'' - அவள் மேலே பேசாது ஓடிவிட்டாள்.

துர்க்கா பயந்து போனாள். அவள் இப்போது சுமார் பத்து நாட்களாக அந்த ஏ.சி. அறையில் தங்கிக் கொண்டிருக்கிறாள்.

வாடகை மட்டுமே ஆயிரத்துநூறுக்கு மேல் போகும். மற்ற ஸ்பெஷல் கவனிப்பு, மருந்துகளுக்கு, எக்ஸ்ரே எடுத்ததிற்கு என்று பல கணக்குகள் மளிகை கடை சாமான் ஜாபிதா போல நீண்டு கொண்டுபோகுமே...

ரத்த பரிசோதனை சாலையில் ரத்தத்தை எடுத்த பெண் யாரிடமோ பேசியதைக் கேட்டு அப்பொழுதே பயந்து விட்டிருந்தாள்.

ரத்த சோதனை, மற்ற பரிசோதனைக்கு சுமார் எழுநூறு ரூபாய் ஆகும் என்று அந்தப் பெண் யாரிடமோ தொலைபேசியில் சொன்னபோதே இவளுக்கு தொண்டையை என்னவோ அடைத்தது போன்ற கவலை ஏற்பட்டது.

ரத்த அழுத்தத்திற்கு வீண் கவலைகள் விரோதி.

ஆனால் கவலைப்படாதிருக்க அவள் என்ன ஜயந்தி போல பணமூட்டை மீதா உட்கார்ந்திருக்கிறாள்?

ஒரு சமயம் அவள் பள்ளிக்கூடம் செல்ல பஸ் நிலையத்திற்கு ஓடிவந்தாள். வழக்கமான பஸ்ஸை தவற விட்டுவிட்டாள். ஒரு சில நிமிஷங்கள் பொறுத்து ஆசிரியை யாரேனும் பள்ளிக்கு வந்தாலும் அதன் தலைவி



பொறுக்கமாட்டாள். பெரிய கோர்ட்மார்ஷல் நடத்தி குதறி தள்ளிவிடுவாள். பலர் முன்னிலையில் அவமானப்படுவா னேன் என்று அவள் சுற்றும் முற்றும் பார்த்தாள். வேலைக்குப் போக எல்லாரும் அவசரப்படும் காலை நேரம். அகப்பட்ட ஆட்டோக்களில் வியர்வை வழிந்த முகத்துடன் ஆண் பிள்ளைகள் அலுவலகத்திற்கு விரைந்து விட்டனர். ஒரே ஒரு டாக்ஸிமட்டும் பயணியைத் தேடி பரிதவித்துக் கொண்டு காத்திருந்தது. அவளது பொருளா தாரத்திற்கு அந்த செலவு கட்டுபடியாகாது. தலைமை ஆசிரியையிடம் மண்டகப்படி வாங்கிக் கொள்வதற்கு பதில் ஒரு திடீர் செலவில் பணம் தொலையட்டும் என்று அதில் ஏறிக்கொண்டாள். ஆனால் டாக்ஸி நகர்ந்த போதெல்லாம் அதனுடைய மீட்டரில் காட்டிய எண் உயர்ந்து கொண்டே போவதை எட்டி எட்டிப் பார்த்து அவள் எத்தனை திகிலடைந்து போனாள்! பத்து ரூபாய், இருபது பைசாவை பையிலிருந்து எடுத்துக் கொடுத்த போது நாக்கும் தொண்டையும் வரண்டு போனது.

அப்பொழுது அவளுக்கு அந்த எண்ணம் ஏற்பட்டது.

பணக்காரர் என்று யாரையாவது குறிப்பிட்டால் அவர்களை எப்படி அடையாளம் காண்பது?

யார் ஒருவர் டாக்ஸியில் ஏறி உட்கார்ந்ததும், அதன் மீட்டர் நகர்வதை பற்றிக் கவலைப்படாது பின் ஆசனத்தில் கண்களை மூடிக்கொண்டு சொகுசாக உட்கார்ந்திருக் கிறாரோ அவர்தான் உண்மையில் பணக்காரர் என்று பணம் படைத்தவர்களுக்கு ஒரு தனித் தகுதியை அவள் கற்பித்துக் கொண்டாள்.

அப்படிப்பட்ட தகுதி இந்தப் பிறவியில் வருமா?

அரவிந்தனது மனைவியாக ஒரு பிரசித்தி பெற்ற அறுவை சிகிச்சை நிபுணரின் துணைவியாக பணத்தில்

புரண்டு கொண்டிருந்தால் என்றாவது அவளது கார் இடக்கு செய்து டாக்ஸி சவாரி செய்ய நேரிட்டால் அப்போது பணச் செலவைப் பற்றிக் கவலைப்பட்டிருக்க மாட்டாள்.

அவள் ஒரு பணக்காரியாக இருந்திருப்பாள். 'பூ! பத்து ரூபாய் இருபது பைசா இவ்வளவுதானே' என்று தன் கைப்பையைத் திறந்து பதினொரு ரூபாயை எடுத்து டாக்ஸிகாரரிடம் கொடுத்து சில்லறையை வாங்கிக் கொள்ளாது புன்னகையுடன் தலையாட்டி விட்டு உள்ளே போயிருப்பாள்.

ஆனால் அவள் ஒரு பள்ளிக்கூட ஆசிரியை. தானே சம்பாதித்து தன் காலில் நிற்கவேண்டிய மத்தியதர வகுப்பைச் சேர்ந்த ஒரு சாதாரணப் பெண்மணி. அவள் பணத்தை எண்ணித்தானே செலவழிக்க இயலும்?

அன்று காலையே ஜயந்தி வந்துவிட்டிருந்தாள். பழம், பிஸ்கட் இவைகளுக்குப் பதிலாக பெட்டி போட்ட துர்க்காவின் பட்டுப்புடவை ஒன்றை ரவிக்கை, உள் ஆடைகளுடன் ஒரு காகிதத்தில் சுற்றி எடுத்து வந்திருந்தாள்.

''இன்னிக்கு மாலை மருத்துவமனையிலிருந்து அனுப்பப் போறாங்க. டாக்டர் நளினி உன்னை தன் வீட்டுக்கு முதலில் அழைச்சிட்டுப் போகப்போறா. அவங்க வீடும் நம் பகுதியில்தான் இருக்கு. பெரிய பங்களா. அந்த தோட்டத்தையே இன்னி முழுக்க பார்த்திட்டிருக்கலாம்.''

''அந்தப் பொண்ணுக்கு ஏன் இந்த கஷ்டமெல்லாம்? வீட்டிற்குப் போய் எனக்காகக் காப்பி தயாரித்து, என்னை உபசரித்து...வேண்டாத தொல்லைகள்.''

''நளினியின் தூரத்து உறவுக்காரம்மா யாரோ ஒரு வயதானவங்க வீட்டில் இருக்காங்களாம். சமையலுக்கு ஆள் போட்டிருக்காங்க. அவளா போய் காப்பி



தயாரிக்கணும்? இதை செய்ய ஒரு ஆள். அதைப் பார்த்து செய்ய ஒரு ஆள் என்று ஆள் படைகளுக்கு குறைச்சல் இல்லை. உன்னை அன்போடு பெத்த மகள் போல பாசத்தோடு அழைச்சுக் கொண்டு போய் உபசரிக்க விரும்பறாள்.''

'அப்படியே என் கையில் பில்லைக் கொடுத்துடு வாள் போலிருக்கு' - மனத்திற்குள் நினைத்துக் கொண்டாள் துர்க்கா. ஆனால் வரட்சியாக சிரித்தாள்.

''புரிகிறது. அவங்களெல்லாம் பெரிய மனுஷர்கள். அவங்க வீட்டுக்கு இப்போ நான் கட்டிட்டிருக்கிற நூல் புடவையோட போகக் கூடாதுன்னு நீ சிரமப்பட்டு என் பட்டுப் புடவையை இஸ்திரிபோட்டு எடுத்துக் கொண்டு வந்திருக்கே. சரி. உன் இஷ்டத்தை நான் ஏன் மறுக்கணும்? அந்தப் பெண் பாவம் ஆசையா கூப்பிட்டா... நான் ஏன் தடை சொல்லணும்? பட்டுப்புடவை அலங்காரத்தில் அவங்க வீட்டுக்குப் போய்ட்டு வரேன்'' என்றாள்.

''கவலைப்படாதே... நான் பிறகு உன்னை சந்திக்கிறேன்'' என்று அவளது உள்ளங்கையை அன்போடு அழுத்திவிட்டு ஜயந்தி போய்விட்டாள்.

துர்க்கா பகல் உணவுக்குப் பின் சிறிது நேரம் உறங்கினாள்... போகட்டும் இன்றோடு இங்கிருந்து விடுதலை. பணத்தை சமாளிக்க முடியாவிட்டால் நகையை விற்றுத் தந்துவிட வேண்டும்... எதுக்காக அவள் இப்படி கவலைப்பட வேண்டும்? இல்லை. இனி அவள் எதற்கும் மனம் தளரக் கூடாது என்ற வைராக்கியத்துடன் படுத்திருந்தாள்.

மாலை நான்கு மணியளவில் பையன் பிளாஸ்கில் தேநீருடன் உள்ளே வந்தான்... கோப்பையில் நிறைத்து வைத்துவிட்டு ''அம்மா பிறகு வந்து உங்களை கூட்டிப்

போகிறதா சொன்னாங்க'' என்ற தகவலுடன் மாயமாகி னான்.

தேநீரை சுவைத்து மெல்லப் பருகினாள். பின்னர் எழுந்து குளியலறைக்குள் சென்று நிதானமாகக் குளித்தாள். தோழி கொண்டு வந்து கொடுத்த பட்டுப் புடவையை உடுத்திக்கொண்டு தலையை வாரி முடித்துக் கொண்டாள். லேசான பவுடர் பூச்சிலே தன் ஒப்பனையை முடித்துக் கொண்டு எப்பொழுதும் போல பளிச்சென்று நெற்றிக் குங்குமப் பொட்டை வைத்துக் கொண்டு தன் சாமான் களை எடுத்துப் பெட்டிக்குள் வைத்துவிட்டு எந்த நிமிஷமும் கிளம்பத் தயாராக உட்கார்ந்திருந்தாள்.

மாலைப்பொழுது அமிழ்ந்து லேசாக இருள் பரவிக்கொண்டு வந்த வேளையில்தான் அவளை அழைத்துப் போக டாக்டர் நளினி உள்ளே வந்தாள்.

''இன்னிக்கு எங்களோட உட்கார்ந்து எங்கள் வீட்டில் நீங்க விருந்து சாப்பிடப் போறீங்க. சில ஏற்பாடுகள் எல்லாம் செய்துட்டு வர நேரமாச்சு. மன்னிக்கணும்'' என்றபடி தன் கையை நீட்டி அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டாள்.

''இந்தப் புடவையில் நீங்க ரொம்ப அழகாக இருக்கீங்க அம்மா. சின்ன வயதில் ரொம்பவே நல்லா இருந்திருப்பீங்க'' - கண்களைச் சிமிட்டிக் கொண்டு அந்தப் பெண் சிரித்தபோது இன்பமும் துன்பமும் கலந்த ஒரு கலவை உணர்வில் மனம் நெகிழ்ந்து போனாள்.

முன்பின் தெரியாத ஒருத்தியிடம் இந்த இளம் பெண்ணுக்கு ஏன் இந்த ஈர்ப்பு?

தாயில்லை என்ற குறையினால் ஏற்பட்ட பாசமோ?

நளினியையும் அவளுக்கு ரொம்பவும் பிடித்து விட்டது. ஊருக்குப் போனாலும் கொஞ்சம் சிரமம் பாராது



ஒரு நல்ல உயர்ந்த வகை வெள்ளைத் துணியை வாங்கி அழகாக அதில் எம்பிராய்டரி வேலைசெய்து, நளினியின் வீட்டு சாப்பாட்டு அறை மேஜை விரிப்பாக உபயோகிக்க தன் பரிசு என்று அனுப்பி வைக்க வேண்டும்.

நர்ஸிங்ஹோம் கவனிப்புக்கும் சிகிச்சைக்கும் பணம் கட்டிவிட்டால் மட்டும் போதாது.

நளினி காட்டும் பாசத்திற்கு விலை ஏது?

தன்னுள் பலவும் எண்ணியவளாகக் கிளம்பினாள்.

தன் அருகே முன்பக்கம் காரில் அவளை உட்கார வைத்துக் கொண்டு நளினிதான் காரை ஓட்டினாள்.

கொஞ்ச நேரத்தில் கார் சாலையின் திருப்பத்தி லிருந்து ஒரு பெரிய கேட்டைத் தாண்டி உள்ளே நுழைந்தது.

கேட்டைக் காத்துக்கொண்டிருந்த காவலாளி சலாம் போட்டு உள்ளே அனுமதிக்க, பன்மடங்கு ஆனந்தத்துடன் பலத்த குரலில் குரைத்தபடி எம்பிக்கொண்டு ஓடி வந்த அல்சேஷியன் வரவேற்புத் தர, போர்டிகோவில் கம்பீரமாக காரை நிறுத்தினாள் நளினி.

''திம்மப்பா லூசியை உள்ளே கொண்டுபோய் பின் பக்கம் கட்டிவை. வீட்டுக்கு புதுசா வந்திருக்கிறவங்க மேலே வந்து விழும். அவங்க பயந்துடுவாங்க'' - கன்னடத்தில் உத்தரவிட்டாள்.

''நாயைக் கட்டச் சொல்லிட்டேன். பயப்படாதீங்க. இறங்கி உள்ளே வாங்க. உங்க வீடு இதுன்னு இனி நினைச்சுக்கணும்'' - அன்போடு அவளது கரத்தைப் பற்றி நளினி உள்ளே அழைத்துச் சென்றாள்.

பழைய காலத்து பாணியில் சில மாற்றங்களுடன் காணப்பட்ட பெரியதொரு பங்களா.

அம்மாடி! வரவேற்பறையை இன்று முழுவதும் பார்த்துக் கொண்டிருக்கலாம் போலிருக்கே! உட்காருங்க, இதோ வந்திட்டேன் என்று அவளை மெத்தென்றதொரு சோபாவில் இருத்திவிட்டு நளினி துள்ளிக் குதித்தபடி மாடிக்கு விரைந்தாள்.

வரவேற்பறையை பிரமிப்புடன் பார்த்தாள் துர்க்கா. சினிமா காட்சி ஒன்றில் பார்ப்பதுபோல அழகான கண்ணுக்குக் குளிர்ச்சி தரும் நீல சாயம் பூசிய சுவர். அங்கங்கே ரவிவர்மாவின் ஓவியங்கள் சில. ஒரு பக்கம் வாயைத் திறந்து பயமுறுத்தும் பாவனையில் ஒரு புலியின் படம். ஒரு பக்கம் அவளுக்கு புரியாத மாடர்ன் சித்திரம் ஒன்று. கண் மட்டும் தெரிய மற்றதெல்லாம் கோடுகளும் வளையங்களுமாக ஒரு விசித்திரமான அமைப்பில் தொங்கிக் கொண்டிருந்த சைட் போர்டில் ஒரு அடி உயரத்திலே நடராசர் பிரேசாவில் பளபளத்துக் கொண்டு இடது காலைத் தூக்கியபடி நின்றார். அவர் அருகே யானைத் தந்தங்களிடையே தொங்கிய வெள்ளி ஊஞ்சல். தந்தக் கிருஷ்ணன் ஆடிக்கொண்டிருந்தார். ஜப்பானிய பொம்மை ஒன்று மின்விசிறியுடன் நின்றது. சென்னைப் பட்டணத்துக் குதிரைகள் சில வரிசையாக நின்றன. ஒவ்வொன்றையும் ரசனையுடன் ஊன்றிப் பார்த்தாள்.

தலைக்குமேல் தொங்கிய சர விளக்கையும், மொசைக் தரைமீது விரிக்கப்பட்டிருந்த காஷ்மீர் கம்பளத்தையும், தந்தம் பதித்த காப்பி மேஜையின் வேலைப்பாட்டையும் உற்றுப் பார்த்தாள்.

நளினியின் தந்தை தமது தொழிலில் பணத்தை வாரிக் குவித்துக் கொண்டிருக்கிறார் போலும். இந்தக் காலத்தில் இத்தனை பெரிய பங்களாவில் வசிக்க வேண்டுமானால் அதை நிர்வகிக்க ரொம்ப பணம் தேவைப்படுமே!



ஜன்னல் திரைச் சீலைகளை வியப்புடன் பார்த்தபடி ஒரு ஜன்னல் அருகே நெருங்கினாள். கொஞ்சம் திரையை விலக்கிவிட்டு ஹோஸ்பைப்பை வைத்துக் கொண்டு தோட்டத்திற்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்த தோட்டக் காரனைப் பார்த்தாள்.

ஜயந்தி உண்மையைத்தான் சொன்னாள். அந்தத் தோட்டத்தையே நாள் முழுவதும் பார்த்துக் கொண்டிருக் கலாம் போல பசேலென்று செடிகளும், மரங்களும் அப்பப்பா! எத்தனை சண்பக மரங்கள், மல்லிகைச் செடிகள், ஊதா, மஞ்சள், ஆரஞ்சு என்று வண்ண வண்ண மலர்ச் செடிகள். அந்தப் பங்களாவின் தலைவர், அதுதான் நளினியின் தந்தைக்குத் தோட்டக்கலை மீது ரொம்ப ஈடுபாடு போலும்.

அவள் கணவன் அரவிந்தனுக்குக்கூட தோட்டம் செடிகொடிகள் மீது ரொம்ப ஆசையாயிற்றே.

நெஞ்சைக் கவ்விய உணர்ச்சிக் கொந்தளிப்பை சமாளித்துக் கொண்ட அவள் திரும்பினாள்.

''உட்காருங்க. முதலில் கொஞ்சம் பழரசம் சாப்பிடுங்க. பிறகு உங்களுக்குச் சேரவேண்டிய பில்லைத் தந்து விடுகிறேன்'' என்றபடி ஒரு மரத்தட்டில் தானே சுமந்து வந்த பழரச டம்ளரை அவள் முன் நீட்டினாள் நளினி.

பில்! அதைக் கண்டு அவள் ஏன் பூதத்தைக் கண்டது போல அஞ்ச வேண்டும்? செய்தவேலைக்கு அவர்கள் பணம் கேட்கப் போகிறார்கள். கொடுத்துவிட்டு அதைப் பற்றி மறந்துவிடவேண்டும். அவள் ஆயாசப்படக்கூடாது. என்று தன்னுள் எண்ணியபடி வேகமாக பழரசத்தைப் பருகி முடித்தாள்.

''இந்தாங்கம்மா... எங்கள் பில். சாதாரணமாக இதை நாங்கள் நோயாளியை வீட்டுக்கு அனுப்புமுன் கொடுத்து பணத்தை வசூலித்து ரசீது பெற்ற பின்னர்தான், டிஸ்சார்ஜ் ஷீட்டில் கையெழுத்துப் போடுவது வழக்கம்.''

''எனக்கு மட்டும் ஏன் இந்த பிரத்யேக சலுகை''- லேசாகச் சிரித்தபடி வெள்ளைக் காகித உறையைக் கிழித்து உள்ளேயிருந்த மெல்லிய தாளை இழுத்தாள்.

''ஏன் அந்த பிரத்யேக சலுகை என்று எங்கள் பில் சொல்லும்...'' நளினி சிரித்தாள்.

''ஒரு டாக்டரின் மனைவி, ஒரு டாக்டரின் தாய், ஒரு ஆஸ்பத்திரி ஊழியராக அமரப்போகிறவரின் தாய், ஒரு டாக்டரின் மாமியார் என்ற நான்கு தகுதிகள் உங்களுக்கு இருக்கின்றன. டாக்டர் ஒருவருக்கோ அவர் குடும்பத்தைச் சார்ந்த நெருங்கின உறவினருக்கோ வைத்தியம் செய்தால் அதற்குப் பணம் எடுத்துக் கொள்ளக்கூடாது என்பது தொழில் முறை கொள்கை. மற்ற செலவுக்கு மட்டுமே தான் பில் போடுவது வழக்கம். உங்களைப் பற்றிய விஷயத்தில்... உங்கள் ஆஸ்பத்திரியில் உங்களுக்கு இல்லாத வைத்தியமா? ஆனால் ஒரு பெரிய பில் போட்டிருக்கிறோம்...

அம்மா! உங்கள் அன்பை எங்கள் அனைவருக்கும் தந்து எங்களை நிம்மதியாக மகிழ்ச்சியாக வாழ வைத்து நீங்களும் அந்த இன்பத்தை பகிர்ந்து கொள்ள வேண்டும்.''

- அன்பு மகள் நளினி

கண்கள் பனிக்க, திடுக்கிட்டுப் போன துர்க்கா, எதிரே உட்கார்ந்திருந்த பெண்ணை வியப்புடன் பார்த்தாள்.

''என்னம்மா... உன் கடிதம் என்னைக் குழப்புகிறதே புரியும்படி சொல்ல முடியுமா...''



''சில நாள்களில் புரிஞ்சுக்குவீங்க. இருங்கோ. அப்பாவைச் சந்தித்துப் பேச உங்களுக்கு ஆவலாக இருக்கிறதுன்னு சொன்னீங்களே... அப்பாவைக் கூப்பிடறேன். இன்னொரு விஷயத்தை சொல்ல மறந்துட்டேனே... அப்பா வரும்போது, அண்ணனையும் கூட்டி வந்திருக்கார். அண்ணனுக்கு வருஷாந்திர விடுமுறை. இரண்டு வாரம் குடும்பத்தோட வந்திருக்கார்... அவங்களைக் கூப்பிடறேன்'' என்றாள்.

''அப்பா, அண்ணா'' என்று அவள் குரல் கொடுத்தாள்.

மாடிப்படியில் கேட்ட காலடி ஓசையை அவள் கவனிக்கவில்லை.

''அப்பா, இப்படி உட்காருங்கோ''- என்று நளினி கூறிய போது நிமிர்ந்த துர்க்காவின் தலை சுற்றியது. நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. மகிழ்ச்சியும் துன்பமும் தாளமுடியாது உடல் நடுங்க, நாத் தடுமாற கண்களில் நீர் பெருக, அவள் எழுந்தாள்.

''அரவிந்தா! கனவு இல்லையே... நீங்க, நீங்களா நளினியின் தகப்பனார்'' கேட்டபடி... சோபாவில் சரிய இருந்தவளை சட்டென்று கை நீட்டி டாக்டர் அரவிந்தன் தாங்கிக் கொண்டார்.

அம்மா என்று அவள் அருகே ஓடி வந்து தோளைத் தழுவிக்கொண்டு நின்ற பெண்ணைப் பார்த்து அவள் பரவசமாகிப் போனாள்.

''என் சகோதரி மாலதி, இப்படிப்பட்டதொரு தங்கமான பெண்ணை பெற்றுக் கொடுத்துவிட்டு போயிருக்காளே... அவள் தீர்க்க சுமங்கலியாகப் போய் விட்டாள். அந்தக் குழந்தை...'' மேலே பேச முடியாது விம்மியதும் நளினி ஓடி வந்து அணைத்துக் கொண்டாள்.

''அம்மாவாக இருக்கணும் என்று நான் கேட்டுக் கொண்டது உண்மையான வார்த்தை. அம்மா... இனி நீங்க எங்களோட கூட இருந்து... எங்களுக்கு வாழ்க்கையிலே மகிழ்ச்சியும்... அமைதியும் கொடுக்கணும். தாயில்லை என்ற குறையைத் தீர்க்கணும். என் கல்யாணத்தின்போது பந்தலில் அப்பா பக்கத்தில் ஜம்மென்று அழகாக வந்து நின்று என்னை டாக்டர் முரளிக்கு கட்டிக் கொடுத்து உதவணும்.''

''என்ன சொல்றதுன்னு தெரியலை. இதையெல்லாம் எப்படி செய்தீங்க'' - தடுமாறியபடி எல்லோரையும் பார்த்தாள்.

''இதில் என்னுடைய முயற்சியும் கொஞ்சம் இருக்கிறது. இந்த உறவு பாலத்தைப் புதுப்பிக்க, சேதுவைக் கட்டும்போது அணில் செய்த துளி உதவிபோல நானும் இதில் கலந்துகொண்டேன். எப்படியாவது உன்னையும், நளினியையும், டாக்டர் அரவிந்தனையும் சேர்த்து வைத்துவிட வேண்டும்னு என் தீர்மானம். அமெரிக்காவை விட்டு அவர் இங்கே நிரந்தரமாக தங்க வந்து சில ஆண்டுகள் ஆகிவிட்டன. ஒருமுறை இந்த நர்ஸிங் ஹோமுக்கு நான் சிகிச்சைக்கு வந்தபோது நளினியைப் பார்த்தேன். மனதில் எண்ணம் உருவாச்சு. அவளிடம் பேசினபோது, அவளுக்கு எல்லா விஷயமும் தெரிஞ்சிருப்பது கண்டு வியப்படைந்தேன். உன் பிள்ளை பரத்தும், நளினியும் உனக்கு தெரியாமலேயே உன் மனதை மேலும் கசக்க வைக்கக் கூடாதென்ற தீர்மானத்தில் தாங்கள் ஒவ்வொரு வருஷமும் விடுமுறையின் போது சந்தித்து அன்போடு பழகினதை சொல்லிக் கொள்ளவில்லை.

''நீரை அடித்தால் நீர் விலகாது என்பதை நிதர்சன மாகப் பார்க்கிறேன். எத்தனையோ பாடுபட்டு நீ பரத்தை உன் பிள்ளையாக வளர்க்க முயன்றே, அவன் அப்பாவின்



பிள்ளையாக, நளினியின் அண்ணனாக வந்து ஒட்டிக் கொண்டுவிட்டான். குடும்பம் ஒண்ணாகிவிட்டது. இனி நீ மட்டும் தனியாக ஒதுங்கி இருப்பது நியாயமா?'' ஜயந்தி கேட்டபோது அவளுக்கு ஏற்பட்ட ஆச்சர்யம்...

''இந்தத் திட்டத்துக்காகத்தான் நீ என்னை விருந் தாளியாக இருக்க பங்களூருக்கு கூப்பிட்டாயா?''

''ஆமாம். உனக்கு உடம்புக்கு முடியாம போனது இன்னும் என் காரியத்தை சுலபமாக்கிவிட்டது. நீயும் நளினியும் சந்தித்து ஒருத்தர் மேல் ஒருத்தர் பிரியப்பட இது ஒரு வகையில் வழி செய்தது.''

''நீங்களெல்லாம் கெட்டிக்காரங்களாகிட்டீங்க. நான்தான் அறிவில்லாத...'' பேசமுடியாது கண்ணீரில் திணறினாள் துர்க்கா.

''இல்லை. என் அன்பான மனைவி என்றும் என்னுடையவள்'' - அரவிந்தன் அவள் முதுகை அன்போடு தடவியபோது அவள் தாங்க முடியாது அழுகையில் குலுங்கினாள்.

''என்னை மன்னிச்சுட்டீங்களா அரவிந்த்... என் பிடிவாதத்தால் நான் எல்லோருடைய சந்தோஷத்தையும் எப்படி நாசப்படுத்திவிட்டிருக்கேன்!''

''என்னையும் மன்னிச்சுடு துர்க்கா. தவறு என்னுடையது என்று எப்பவும் ஒப்புக்கிறேன்.''

''அதெல்லாம் பத்தி இப்போ எதுக்கு பேசணும்? சாப்பாடு ஆறிப்போகுமுன் சீக்கிரம் பரிமாறச் சொல் நளினி'' - ஜயந்தி அதட்டலாகக் கூற, கண்ணீரைத் துடைத்துக் கொண்டு புன்முறுவலித்தாள் துர்க்கா.

அவளையும் டாக்டர் அரவிந்தனையும் தனியே விட்டு அவர்கள் அனைவரும் சாப்பாட்டறைக்குள் சென்று விட்டனர்.

''இந்த வயசிலும் என் கண்களுக்கு நீங்க ரொம்ப கம்பீரமா அழகா தெரிகிறீங்க'' - தடுமாறினாள் அவள்.

''இந்த வயசிலும் நீ என் அழகான மனைவி துர்க்காவாகவே தெரியறே. நாம் இனி ஒருவருக்கொருவர் துணையாக நம் குழந்தைகளோடு நிம்மதியா வாழணும் என்ன சொல்றே துர்க்கா?''

''உங்க பேச்சை இனி தட்டமாட்டேன். ஒரு தடவை தட்டினதுக்கு ரொம்பவே அனுபவிச்சுட்டேன். ஆனால் ஊர் உலகம் என்ன சொல்லும்?''

''ஒரு காலத்திலே விவாகரத்து செய்து கொண்டவங்க இவங்க. இப்போ திரும்பக் கூடிக் கொண்டுட்டாங்கன்னு, சொல்வாங்க.''

''சட்டப்படித்தானே நாம் பிரிஞ்சோம். சாஸ்திரப்படி நீ இன்னும் என் மனைவி என்பதை கழுத்திலே நீ போட்டுக்கொண்டிருக்கிற தாலியும், இந்த பொட்டும், தலையில் உள்ள பூவும் சொல்லுதே!''

''ஆமாம்! நான் எப்பவும் உங்க மனைவிதான். அதை ஒவ்வொரு நிமிஷமும் உணர்ந்துகிட்டே இருந்தேன். ஆனால் ஊரார் நம்மை என்ன சொல்லுவாங்க தெரியுமா?''

''தெரியும். இவங்க ரெண்டுபேருக்கும் அந்திக்கால மோகம் வந்துட்டதுன்னு சொல்வாங்க. சொல்லிக்கட்டும்'' என்று சிரித்த அரவிந்தன் அவளைத் தன் மார்புடன் அணைத்துக்கொள்ள, அதுவரை அவள் அடையாத ஒரு சுகம் அவள் மனதில் நிறைந்து வழிவதை உணர்ந்தாள்.

இந்த உணர்வுதான் அந்திக்கால மோகமா? அவள் மனம் தன்னுள் சிரித்தது.

